பன்றிவடிவை விட்டு விசுவ கருமனுகி அம்மண்ணை நன்ருய்க் கழுவி அதி லுள்ள நெகிழ்ச்சியைப் போக்கிவிட்டு எங்கும் பரப்பிவிட்டனன். அதுவே எல்லா உயிர்கட்கும் ஆதாரமாய்க் காணப்படும் இப்பூமியாம். பரப்பப் பட்டதால் பிருதிவி என்னும் பெயரும் வந்தது என்பது.

---

தேவசிருட்டியையும் கோசிருட்டியையும் முறையாய்க் கூறுகின்றது

பிராமணம் 2

तस्यामश्राम्यत्प्रजापतिस्स देवानसृजत वसूꣳरुद्रानादित्यान्ते देवाः प्रजा- पतिमब्रुवन्प्र जायामहा इति सोऽब्रवीद्यथाऽहं युष्माꣳस्तपसाऽसृक्ष्येवं तपसि प्रजननमिच्छध्वमिति तेभ्योऽग्निमायतनं प्रायच्छदेतेनाऽऽयतनेन श्राम्यतेति तेऽग्निनाऽऽयतनेनाश्राम्यन्ते संवत्सर एकां गामसृजन्त तां वसुभ्यो रुद्रेभ्य आदित्येभ्यः प्रायच्छन्नेताꣳ रक्षध्वमिति तां वसवो रुद्रा आदित्या अरक्षन्त सा वसुभ्यो रुद्रेभ्य आदित्येभ्यः प्राजायत त्रीणि च शतानि त्रयस्त्रिꣳशतं चाथ सैव सहस्रतम्यभवत् ।

என்பது.

உரை.

பிரமன், அப்பூமியில் தனது திருமேனியுடனிருந்துகொண்டு சிருட்டி செய்ய விரும்பித் தவஞ் செய்தனன். அத் தவத்தின் வலியால், வசு, உருத்திர ஆதித்ய என்னுங் கணங்கள் மூன்றையும் படைத்தனன். அம்மூவகைக் கணத் தார்களும் பிரசைகளையுண்டாக்கும் உபாயத்தை தெரிவிக்க வேண்டுமென்று பிரமனை வேண்டிக்கொண்டனர். அதைக்கேட்ட பிரமன் என்னைப்போல் தவஞ்செய்த பிறகு நீவிர் சிருட்டிக்க விரும்புவீர்களாக என்று கூறிவிட்டு தவத்திற்கு ஆதாரமாகிய அக்கினியைக் கொடுத்து அவ்வக்கினியால் ஹோமஞ் செய்வதாகிய தவத்தைச் செய்வீர்களாக என்று கூறினன். அவர்கள் அவ்வாறே ஒருவருடம் தவஞ்செய்துவந்து முடிவில் அனைவரும் ஒரு கோவை யுண்டாக்கினூர்கள். அக்கோவை, பிரமன், பாதுகாப்பின் பொருட்டு வசு முத லானோர்கட்குக் கொடுத்தனன். அக் கோ, பாதுகாக்கப்பெற்று வசுக்களுக்கு முன்னூற்று முப்பத்து மூன்று கோக்களையுண்டாக்கிற்று. இவ்வாறே உருத்தி ரர்கட்குக் கொடுத்த கோவும் முன்னூற்று முப்பத்துமூன்று கோக்களையுண் டாக்கிற்று, அங்ஙனமே, ஆதித்தர்கட்குக் கொடுத்த கோவும் முன்னூற்றுமுப் பத்துமூன்று கோக்களையுண்டாக்கிற்று. இவ்வாற்ருல் துளாயிரத்துத் தொண் ணூற்ருென்பது கோக்கள் பெறப்பட்டன. இது ஒன்று குறைந்திருந்த ஆயிரத்தை நிறைத்துக் காட்டுவது ஆதலின் சகத்திரதமி எனப்படும் என்பது.

ஆயிரந்த க்ஷிணைகளையுடைய் திரிராத்திரி யாகத்தால் வேட்டலை விளக்குகின்றது

பிரமாணம் 3

तेदेवाः प्रजापतिमब्रुवन्त्सहस्रेण नो याजयेति सोऽग्निष्टोमेन वसूनयाजयत्त इमं लोकमजयन्तच्चाददुस्स उक्थ्येन रुद्रानयायत्तेऽन्तरिक्षमजयन्तच्चाददुस्सोऽतिरात्रेणाऽऽदित्यानयाजयत्तेऽमुं लोकमजयन्तच्चाददुः ।

என்பது.

உரை

வசு உருத்திர ஆதித்தர்களான அத் தேவர்கள், ஆயிரங் கோக்கள் தக்ஷிணைகளையுடைய யாகத்தைச் செய்து வைத்தல் வேண்டுமென்று பிரமனை வேண்டினர். பிரமன், அக்கினிட்டோமத்தால் வசுக்கட்கு முதல் நாளில் யாகஞ் செய்வித்தனன். வசுக்கள் தம்முடைய முன்னூற்றுமுப்பத்துமூன்று கோக்களையும் இருத்துவிக்குக்கட்குத் தட்சிணையாகக் கொடுத்தனர். அதனால் அவர்கள் இவ்வுலகைவெற்றி பெற்றுக்கொண்டனர். மற்றும், பிரமன், உக்த்தியம் என்பதால் உருத்திரர்கட்கு இரண்டாம் நாள் வேள்வி செய்து வைத்தனன். அவர்கள் தமது முன்னூற்றுமுப்பத்துமூன்று கோக்களையும் இருத்துவிக்குகட்குத் தட்சிணையாகக் கொடுத்தனர். இதனால் அவர்கள் அந்தரிட்சவுலகை வெற்றி பெற்றுக் கொண்டனர். பிறகு, பிரமன், அதிராத்திரத்தால் மூன்றுநாள் ஆதித்தர்கட்கு யாகஞ் செய்துவைத்தனன். அவர்கள் தமது முன்னூற்றுமுப்பத்துமூனறு கோக்களையும் இருத்துவிக்குக்கட்குத் தட்சிணையாகக் கொடுத்தனர். அதனால், சுவர்க்கலோகத்தை அவர்கள் வென்று கொண்டனர் என்பது.

---

உக்த்ய நாளாகிய இரண்டாவது நாளில் சில சம்சனவிசேடங்களை விதிக்கின்றது. சம்சனம் — துதிவிசேடம்.

பிராமணம் 4

तदन्तरिक्षं व्यवैर्यत तस्माद्रुद्रा घातुका अनायतना हि तस्मादाहुश्शिथिलं वै मध्यममहस्त्रिरात्रस्य वि हि तदवैर्यतेति त्रैष्टुभं मध्यमस्याह्न आज्यं भवति संयानानि सूक्तानि शꣳसति षोडशिनꣳ शꣳसत्यह्नो धृत्या अशिथिलंभावाय ।

என்பது

உரை

உருத்திரர்களடைந்துள்ள அந்தரிட்ச லோகங் கெட்டுவிட்டது. அதாவது உருத்திரர்கள் வாழுமிடமாகிய வீடு இடிந்துவிட்டது என்பதாம். அந்தரிட்சவுலகமாகிய தமது இடங் கெட்டுவிட்டமையாற் கோபங்கொண்ட உருத்திரர்கள் எங்கும் பிராணிகளைக்கொன்று தின்னுகின்றவர்களாய் விட்டனர். அதைக்கண்டு பெரியோர்கள், யாகத்தின் பயனாகிய அந்தரிக்க இடங் கெட்டுவிட்டது. ஆதலின் திரிராத்ர யாகத்தில் இரண்டா நாளில் யாதானுமோர் அங்கக் குறைவால் அதுபழுதாயிற்று என்கின்றனர். ஆதலின், அப்பழுது நீங்கும்படி, அவ்விரண்டாம் நாளில் சில சஸ்த்திரங்களையும், திரிஷ்டுப் சந்தத்திலுண்டாகிய ஆஜ்யசஸ்த்திரத்தையும் ஓதல் வேண்டும். அவ்வாறே சம்யானம் என்னும் பத்துவகையில் வெளிப்படையான சூக்தங்களையும் ஓதல் வேண்டும். சோடசி என்னுஞ் சஸ்திரத்தையும் ஓதல வேண்டும் என்பது.

---

இவ்வாறு கதையை எடுத்துக் கொண்டு இரண்டாம் நாளிலுள்ள விசேடத்தை விதித்துவிட்டு திரிராத்ரயாகத்திற்கு நாள்விசேடங்களை விதிக்கின்றது

பிராமணம் 5

**तस्मात्रिरात्रस्याग्निष्टोम एव प्रथममहस्स्यादथोक्थ्योऽथातिरात्र एषां लो-
कानां विधृत्यै ।**

என்பது

உரை

வசு முதலானோர்கள் முதல்நாள் அக்கினிஷ்டோமம், இரண்டாநாள்உக்தியம், மூன்றாநாள் அதிராத்திரம் என்று பகுத்து அநுட்டித்ததால் திரிராத்திரயாகத்தை மூவுலக வெற்றியின் பொருட்டுச் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

ஒன்றுகுறைந்த ஆயிரங்கோக்களையும் மூன்றுநாளில் சரியாய்ப் பகுத்து தட்சிணையாகக்கொடுக்க வேண்டுமென்று விதிக்கின்றது

பிராமணம் 6

**त्रीणित्रीणि शतान्यनूचीनाहमव्यवच्छिन्नानि ददात्येषां लोकानामनु
संतत्यै ।**

என்பது

கர்க்கத்திரிராத்திரம்)

ஒவ்வொரு நாளும் முன்னூற்று முப்பத்து மூன்று கோக்கள் தட்சிணை களாகக் கொடுக்கப்படுகின்றன. இது, பூ:, புவ:, சுவ: என்று மூன்றுலகங் களின் தொடர்ச்சியின் பொருட்டாம் என்பது.

---

பத்துப் பத்தாகக் கொண்டு போகும் போது முடிவில் மூன்று கோக்கள் நிற்கில் அதை கடைசிப்பத்துடன் சேர்த்து ஓட்டிக் கொண்டு போதல் வேண்டு மென்று விதிக்கின்றது

பிராமணம் 7

**दशतं न वि च्छिन्द्याद्विराजं नेद्विच्छिनदानीति ।**

என்பது

உரை

வேதிக்குத் தெற்கில் நிற்கின்ற கோக்களை, தட்சிணை கொடுத்தற் பொருட்டு பிராக்வம்சத்திற்கும் சபைக்கும் நடுவாக வடக்கே ஓட்டிக் கொண்டு போம்போது, பத்துப்பத்தாக வரல் வேண்டும் அதில் குறைதல் கூடாது ஏனெனின், விராட்சந்தம் பத்தெழுத்துக்களைக் கொண்டதாமாதலின் என்க. பத்தில்குறைக்கில் விராட்சந்தத்தை பழுதுபடுத்தியதாகும் என்பது ஓட்டிக் கொண்டு வருகின்றவனுடைய கருத்தாம். ஈண்டு, பத்தில் குறைதல் கூடா தென்று விதித்தலால் முடிவில் மீந்துபோகும் மூன்று கோக்களையும் கடைசி யிற் பத்தாகக்கொண்டு வருவதுடன் சேர்த்துக்கொண்டு வரல் வேண்டு மென்பது,

---

மூன்று நாளிலுங் கொடுக்க வேண்டிய துளாயிரத்துத் தொண்ணூற்றென்பது கோக்களைத் தானஞ் செய்வதில் பல்வகை விகற்பங்களை விளக்குதற்பொருட்டு முன்னுரை கூறுகின்றது

பிராமணம் 8

**अथ या सहस्रतम्यासीत्तस्यामिन्द्रश्च विष्णुश्च व्यायच्छेतां स इन्द्रोऽ-
मन्यतानया वा इदं विष्णुस्सहस्रं वक्ष्यत इति तस्यामकल्पेतां द्विभाग
इन्द्रस्तृतीये विष्णुस्तद्वा एषाऽभ्यनूच्यत उभा जिग्यथुरिति ।**

என்பது

உரை

**'சகத்ரதமி'** என்னும் அத்தட்சிணைக் கோக்களின் நிமித்தம், இந்திரனும் விஷ்ணுவும் இது எனக்கு வேண்டும் இது எனக்கு வேண்டும் என்று கலகஞ் செய்துகொண்டனர். அப்போது இந்திரன், அக்கோக்கள் சகத்திரதமியை யும் விஷ்ணு எடுத்துக்கொண்டு எனக்கொன்றுமில்லாமல் வஞ்சகஞ் செய் வான் என்று எண்ணிக்கொண்டு, எனக்கு அதிகப்பங்கு வேண்டுமென்று

கருதினன். பிறகு அவ்விருவரும் இந்திரனுக்கு இரண்டுபங்கும், விஷ்ணுவிற்கு ஒரு பங்குமாக ஏற்பாடு செய்துகொண்டனர். இவ்விடயத்தை இருக்கு வேதத்திலும் ஒரு இருக்கு எடுத்துக் கூறுகின்றது. அந்த இருக்கின் தலைப்புச் சொல், "உபாஜிக்யது:" என்பதாம். இது, மேல் அநுவாகத்தில் வெளியாம் என்பது.

---

இந்த இருக்கை சம்சனஞ்செய்வதை நியமிக்கின்றது

பிராமணம் 9

**तां वा एतामच्छावाक एव शꣳसति ।**

என்பது

உரை

அச்சாவாகன் என்பவனே இதைப்படித்தல் வேண்டும் என்பதாம்.

---

தானஞ்செய்வதில் விசற்பமான பக்ஷங்களுள் முதலாம் பக்ஷத்தைக் கூறுகின்றது

பிராமணம் 10

**अथ या सहस्रतमी सा होत्रे देयेति होतारं वा अभ्यतिरिच्यते यदतिरिच्यते होताऽनाप्तस्याऽऽपयिता ।**

என்பது

உரை

ஒவ்வொருநாளுக்கும் முன்னூற்று முப்பத்து மூன்று கோக்களைக் கொடுக்கில் இந்தச் சகத்திரதமி என்னுங் கோக்கள் மேம்பட்டதாயிருக்கின்றன. யாகத்தில் எப்பொருள் மேம்பட்டதாயிருக்கின்றதோ, அது ஹோதாவைக் குறித்ததாம். ஹோதாவோ, அடையாத பயன் அனைத்தையும் அடைவிப்பவன். ஆதலின், சகத்திரதமி என்னும் கோக்களை ஹோதாவிற்குக் கொடுத்தல் வேண்டும் என்பது.

---

இரண்டாம் பக்ஷத்தைக் கூறுகின்றது

பிராமணம் 11

**अथाऽऽहुरुन्नेत्रे देयेत्यतिरिक्ता वा एषा सहस्रस्यातिरिक्त उन्नेतर्त्विजाम् ।**

என்பது

உரை.

இக் கோக்கள் ஆயிரத்திற்கு மேலாகிய வீரியங்களையுடையவைகளாம். உன்னேதா என்பவனும் இருத்துவிக்குக்களுள் மேம்பட்டவீரியமுடையனுகின்றான். ஆதலின், இக்கோக்களை உன்னேதாவிற்குக் கொடுத்தல் வேண்டும் என்கின்றனர் சிலர். இவ்வாறு ஹாரி யோசனபக்ஷத்திற் கூறப்பட்டிருக்கின்றது என்பது.

---

மூன்றும் பட்சத்தைக் கூறுகின்றது

பிராமணம் 12

**अथाऽऽहुस्सर्वेभ्यस्सदस्येभ्यो देयेति ।**

என்பது

உரை

அக்கோக்களை சபையிலுள்ள அனைவருக்குங் கொடுத்தல் வேண்டு மென்று சிலர்கூறுகின்றனர். இதன் பொருத்தத்தைவேறிடத்திற்காண்க என்பது.

---

நான்காம் பக்ஷத்தைக் கூறுகின்றது

பிராமணம் 13

**अथाऽऽहुरुदाकृत्य सा वशं चरेदिति ।**

என்பது

உரை

மூன்றுநாளிலும் சரிபங்காகக் கொடுத்தலால் பங்கில் குறைவு மிகுதி பொருத்த முடையதன்று, வேள்விப் பூமியில் நிற்கவிட்டு அக் கோக்கள் எவ்வாறு நடக்கின்றனவோ, அவ்வாறு செய்தல் வேண்டுமென்கின்றனர் சிலர் என்பது.

---

ஐந்தாம் பக்ஷத்தை விளக்குகின்றது

பிராமணம் 14

**अथाऽऽहुर्ब्रह्मणे चाग्नीधे च देयेति द्विभागं ब्रह्मणे तृतीयमग्नीध ऐन्द्रो वै ब्रह्मा वैष्णवोऽग्नीद्यथैव तावकल्पेतामिति ।**

என்பது

உரை

இந்திரனுக்கும் விஷ்ணுவிற்குங் கொடுத்ததுபோல் அவர்களுக்கொப்பான பிரமனுக்கும் ஆக்கினீத்ரனுக்கும் இரண்டு பங்கும் ஒருபங்குமாகக் கொடுத்தல் வேண்டுமென்பர் சிலர் என்பது.

---

ஆறும் பக்ஷத்தை விளக்குகின்றது

பிராமணம் 15

**अथाऽऽहुर्या कल्याणी बहुरूपा सा देयेति ।**

என்பது

உரை

சகத்திரதமி என்னும் இக்கோக்களை யாருக்குங்கொடுக்கக்கூடாது; மற்றோ, இதற்குப்பதிலாக நல்ல அழகையும், குணங்களையுமுடையதும், மிகுதியாய்ப்பால் 'கறப்பதுமாகிய ஒரு கோவைக் கொடுத்தல் வேண்டுமென்பர் சிலர்.

---

ஏழாம் பக்ஷத்தைக் கூறுகின்றது

பிராமணம் 16

**अथाहुर्याद्विरूपोभयत एनीसादेयेति सहस्रस्य परिगृहीत्यै ।**

என்பது

உரை

கறுப்பு நிறமும் வெள்ளை நிறமுமுடைய ஒரு கோவை ஆயிரங்கோக்களுக்கு ஒப்பாதற் பொருட்டுக் கொடுத்தல் வேண்டும் என்பது.

---

இவ்வாறு ஆயிரந்தட்சிணைகளையுடைய வேள்வியின் கருத்தைப் புகழ்கின்றது

பிராமணம் 17

**तद्वा एतत्सहस्रस्यायनꣳ सहस्रꣳस्तोत्रीयास्सहस्रं दक्षिणास्सहस्रसंमितः सुवर्गो लोकस्सुवर्गस्य लोकस्याभिजित्यै ।**

என்பது

சகத்திரதமிக் கோக்கள்)

உரை.

மேற்கூறிய திரிராத்ரயாகம் ஆயிரம் வகையான பயன்களுக்குங் காரணமாம். ஏனெனின்? மூன்று நாளும் மேற்கூறியபடி ஆயிரங் கோக்களைத் தானஞ்செய்வதால் என்க. சுவர்க்கலோகம் சுகமிகுதியால் ஆயிரம் பூவுலகங்கட்கு ஒப்பாமாதலின் அத்தகைய சுவர்க்கத்தையடைவதற்கு இது உரியதாம் என்பது.

ஐந்தாம் அநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் முதற் பிரபாடம்

## ஆறுவது அநுவாகம்

ஏழுபஞ்சாதிக்குமேல் முப்பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

சகத்திரதமியைக் கூறும் பிராமணங்கள்.

सोमो वै सहस्रमविन्दत्तमिन्द्रोऽन्वविन्दत्तौ यमोन्यागच्छत्ताव-ब्रवीदस्तु मेऽत्रापीत्यस्तु ही ३ इत्यब्रूता॒ँ स यम एकस्यां वीर्यं पर्यपश्यदियं वा अस्य सहस्रस्य वीर्यं बिभर्तीति तावब्रवीदियं ममा स्त्वेतद्युवयोरिति तावब्रूता॒ँ सर्वं वा एतदेतस्यां वीर्यम् ॥ २१ ॥ पारं पश्यामोऽ॒ँशमा हरामहा इति तस्यामॅ॒ँशमाऽहरन्त ताम-प्सु प्रावेशयन्त्सोमायोदेहीति सा रोहिणी पिङ्गलैकहायनी रूपं कृत्वा त्रयस्त्रि॒ँशता च त्रिभिश्च शतैस्सहोदैत्तस्माद्रोहिण्या पिङ्ग-लयैकहायन्या सोमं क्रीणीयाद्य एवं विद्वान्रोहिण्या पिङ्गलयैकहाय-न्या सोमं क्रीणाति त्रयस्त्रि॒ँशता चैवास्य त्रिभिश्च ॥ २२ ॥ शतैः सोमः क्रीतो भवति सुक्रीतेन यजते तामप्सु प्रावेशयन्निन्द्रायोदे-हीति सा रोहिणी लक्ष्मणा पष्ठौही वार्त्रघ्नी रूपं कृत्वा त्रयस्त्रि॒ँ-

शता च त्रिभिश्च शतैस्सहोदैत्तस्माद्रोहिणीं लक्ष्मणां पष्ठौहीं वार्त्रघ्नीं दद्याद्य एवं विद्वान्रोहिणीं लक्ष्मणां पष्ठौहीं वार्त्रघ्नीं ददाति त्रयस्त्रिꣳशच्चैवास्य त्रीणि च शतानि सा दत्ता ॥ २३ ॥ भवति तामप्सु प्रावेशयन्यमायोदेहीति सा जरती मूर्खा तज्जघन्या रूपं कृत्वा त्रयस्त्रिꣳशता च त्रिभिश्च शतैस्सहोदैत्तस्माज्जरतीं मूर्खां तज्जघन्यामनुस्तरणीं कुर्वीत य एवं विद्वाञ्जरतीमूर्खां तज्जघन्यामनुस्तरणीं कुरुते त्रयस्त्रिꣳशच्चैवास्य त्रीणि च शतानि साऽमुष्मिँ लोके भवति वागेव सहस्रतमी तस्मात् ॥ २४ ॥ वरो देयस्सा हि वरस्सहस्रमस्य सा दत्ता भवति तस्माद्वरो न प्रतिगृह्यस्सा हि वरस्सहस्रमस्य प्रतिगृहीतं भवतीयं वर इति ब्रूयादथान्यां ब्रूयादियं ममेति तथाऽस्य तत्सहस्रमप्रतिगृहीतं भवत्युभयतएनी स्यात्तदाहुरन्यतएनी स्यात्सहस्रं परस्तादेतमिति यैव वरः ॥ २५ ॥ कल्याणी रूपसमृद्धा सा स्यात्सा हि वरस्समृद्ध्यै तामुत्तरेणाऽऽग्नीध्रं पर्याणीयाऽऽहवनीयस्यान्ते द्रोणकलशमव घ्रापयेदा जिघ्र कलशं महुरुधारा पयस्वत्या त्वा विशन्त्विन्दवस्समुद्रमिव सिन्धवस्सा मा सहस्र आ भज प्रजया पशुभिस्सह पुनर्माऽऽविशताद्रयिरिति प्रजयैवैनं पशुभी रय्या सम् ॥ २६ ॥ अर्धयति प्रजावान्पशुमान्रयिमान्भवति य एवं वेद तया सहाऽऽग्नीध्रं परेत्य पुरस्तात्प्रतीच्यां तिष्ठन्त्यां जुहुयादुभा जिग्यथुर्न परा जयेथे न परा जिग्ये कतरश्चनैनोः । इन्द्रश्च विष्णो यदपस्पृधेथां त्रेधा सहस्रं वि तदैरयेथा-

मिति त्रेधाविभक्त वै त्रिरात्रे सहस्रं साहस्रीमेवैनां करोति सहस्रस्यैवैनां मात्राम् ॥ २७ ॥ करोति रूपाणि जुहोति रूपैरेवैनाꣳसमर्धयति तस्यां उपोत्थाय कर्णमा जपेदिडे रन्तेऽदिते सरस्वति प्रिये प्रेयसि महि विश्रुत्येतानि ते अघ्निये नामानि सुकृतं मा देवेषु ब्रूतादिति देवेभ्य एवैनमा वेदयत्यन्वेनं देवा बुध्यन्ते ॥ २८ ॥

एतदेतस्यां वीर्यमस्य त्रिभिश्च दत्ता सहस्रतमी तस्मादे व वरस्सं मात्रामेकान्न चत्वारिꣳशच्च ।

கூறிய திரிராத்திரத்திற்குத் தட்சிணையாயுள்ள சகத்திரதமி என்னுங் கோவை விரித்துக் கூறுதற் பொருட்டு இதில் ஒரு கதையை விளக்கிக் காட்டுகின்றது.

அதைப்பற்றிய ஒரு கதை

பிராமணம் 1

सोमो वै सहस्रमविन्दत्तमिन्द्रोऽन्वविन्दत्तो यमो न्यागच्छत्तावब्रवीदस्तु मेऽत्रापीत्यस्तु ही ३ इत्यब्रूताꣳ स यम एकस्यां वीर्यं पर्यपश्यदियं वा अस्य सहस्रस्य वीर्यं बिभर्तीति तावब्रवीदियं ममास्त्वेतद्युवयोरिति तावब्रूताꣳ सर्वं वा एतदेतस्यां वीर्यं परि पश्यामोऽꣳशमा हरामहा इति तस्यामꣳशमाऽहरन्त ।

என்பது

உரை

முன்னொருகால் சோமனுக்கு ஆயிரங் கோக்கள் கிடைத்தன. அக்கோக்கள் பிறகு இந்திரனுக்குங் கிடைத்தன. பிறகு, எமனும் அவற்றில் எனக்குப் பாகம் வேண்டுமென்று வந்தனன். சோமனும் இந்திரனும் அவ்வாறே பாகங் கொடுப்பதாய் ஒப்புக்கொண்டனர். அதன் பிறகு, எமன் அவ்வாயிரங் கோக்களையும் பரீட்சித்து அவற்றுள் இவ்வொன்றே எல்லாவற்றிற்கும் வீரியத்தைக் கொடுக்கின்றது என்று மனதில் எண்ணிக்கொண்டு இவ்வொரு கோவே எனக்குப் போதும் நீவிரிருவரும் ஏனைய ஆயிரத்தையும் எடுத்துக்கொள்ளுங்கள் என்றனன். அதைக் கேட்ட சோமனும் இந்திரனும்,

நாமனைவருஞ் சேர்ந்து பரீட்சித்து மிகச் சிறந்த இக்கோவிலுள்ள வீரியத்தில் ஒவ்வொரு கூறு எடுத்துக் கொள்வோம் என்றனர். பிறகு அனைவரும் அதை உடன்பட்டுக்கொண்டே அவ்வாறு செய்தார்கள் என்பது.

---

அதில். சோமன் முதலானது வீரியாம்சத்தை எடுத்துக் கொண்டமுறையைக் கூறுகின்றது

பிராமணம் 2

तामप्सु प्रावेशयन्त्सोमायोदेहीति सा रोहिणी पिङ्गलैकहायनी रूपं कृत्वा त्रयस्त्रिꣳशता च त्रिभिश्च शतैस्सहोदैत्तस्माद्रोहिण्या पिङ्गलयैकहाय-न्या सोमं क्रीणीयाद्य एवं विद्वान्रोहिण्या पिङ्गलयैकहायन्या सोमं क्री-णाति त्रयस्त्रिꣳशता चैवास्य त्रिभिश्च शतैस्सोमः क्रीतो भवति सुक्री-तेन यजते ।

என்பது

உரை

அம்மூவருஞ் சேர்ந்து அக்ககைய வீரியமுடைய் சிறந்ததோர் கோவை "நீ சோமத்தின் பொருட்டு மேலெழுவாயாக என்று சொல்லி தண்ணீருக்குள் மூழ்கவிட்டனர். அக் கோ, சோமத்திற்குள்ள சிவப்புநிறம், பூனைக்கண், ஒரு வயது என்னுஞ் சோமத்திற்குரிய மங்கள குணங்களுடன் முன்னூற்று முப்பத்துமூன்று கோக்களுடன் மேலெழுந்து வந்தது. ஆதலின், சிவந்த நிறமும் பூனைக்கண்ணுமுடைய பசுக்கடாரியைக் கொடுத்து சோமத்தை விலைக்கு வாங்குதலாம். இவ்வாறு, சிவந்த நிறம் பூனைக்கண் ஒருவயது என்பவைகளையுடைய பசுக்கடாரியால் சோமத்தை விலைக்கு வாங்கினவன் முன்னூற்றுமுப்பத்து மூன்று கோக்களைக் கொடுத்து விலைக்கு வாங்கினவனாகின்றான். அதாவது அவ்வாறு விலைக்கு வாங்கிய சோமத்தால் யாகஞ் செய்கின்றான் என்பதாம்.

---

இந்திரன், அவ்வீரியாமிசத்தைக் கொண்டமுறை கூறப்படுகின்றது

பிராமணம் 3

तामप्सु प्रावेशयन्निन्द्रायोदेहीति सा रोहिणी लक्ष्मणा पष्ठौही वार्त्रघ्नी रूपं कृत्वा त्रयस्त्रिꣳशता च त्रिभिश्च शतैस्सहोदैत्तस्माद्रोहिणीं लक्ष्म-णां पष्ठौहीं वार्त्रघ्नीं दद्याद्य एवं विद्वान्रोहिणीं लक्ष्मणां पष्ठौहीं वार्त्रघ्नीं ददाति त्रयस्त्रिꣳशच्चैवास्य त्रीणि च शतानि सा दत्ता भवति ।

என்பது

சகத்திரதமிக் கோக்கள்)

உரை

முன்போல் அக்கோவை நீருக்குள் மூழ்கவிட்டு இந்திரன் பொருட்டு மேலெழுவாயாக என்றனர். அப்போது, அக்கோ, சிவப்பு நிறம், வால் கொம்பு முதலிய நல்ல அவயவங்கள், நான்கு வயது, பார்த்தவுடன் மனத் துன்பு நீக்குதல் என்னு நற்குணங்களுடன் முன்னூற்றுமுப்பததுமூன்று கோக்களோடுகூட நீரிலிருந்து மேல் எழும்பிற்று. ஆதலின், இந்திரனபொருட்டு சிவந்தநிறம் நல்லஅவயவங்கள மனோரம்யம் நானகுவயது என்னும் நற்குணங்களையுடைய கோவைத் தானமாய்க் கொடுத்தல் வேண்டும். இதத கைய கோவைத் தானமாய்க் கொடுக்கில் முன்னூற்றுமுப்பத்துமூன்று பசுக்களைத் தானஞ் செய்ததாகும் என்பது.

---

எமன் கவர்ந்து கொண்ட வீரியாம்ச முறையைக் கூறுகின்றது

பிராமணம் 4

तामप्सु प्रावेशयन्यमायोदेहीति सा जरती मूर्खा तज्जघन्या रूपं कृत्वा त्रयस्त्रिंशता च त्रिभिश्च शतैस्सहोदैत्तस्माज्जरतीं मूर्खां तज्जघन्यामनुस्तरणीं कुर्वीत य एवं विद्वान्जरतीं मूर्खां तज्जघन्यामनुस्तरणीं कुरुते त्रयस्त्रिंशच्चैवास्य त्रीणि च शतानि साऽमुष्मिँल्लोके भवति ।

என்பது

உரை

முன்போல் அவ்வாறே நீரில் அக்கோவை மூழ்கவிட்டு எமன்பொருட்டு மேலெழுவாயாக என்றனர். அக் கோ கிழததன்மையுடையதும் ரோஷமுடையதும் மிகுந்த விகார வடிவுடையதுமாய் முன்னூற்றுமுப்பத்துமூன்று கோக்களுடன் நீரிலிருந்து மேலெழுந்தது. இதுவே, யாகஞ் செய்தவன் இறக்கில் கொன்று அவயவங்களையறுத்து பிணத்தின் அவயவங்களின்மீது வைக்கவேண்டிய அநுஸ்தரணி என்னுங் கோவாம். இத்தன்மை வாய்ந்த கோவை அவ்வாறு செய்யில் பரலோகத்தில் முன்னூற்றுமுப்பத்துமூன்று கோக்களையுடையவனாகின்றான் என்பது.

---

கதையால் இவ்வாறு சகத்திரதமி என்னுங் கோவைப் புகழ்ந்து விட்டு, மற்றேநவகையால் அவற்றைப் புகழ்கின்றது

பிராமணம் 5

वागेव सहस्रतमी तस्माद्वरो देयस्सा हि वरस्सहस्रमस्य सा दत्ता भवति तस्माद्वरो न प्रतिगृह्यस्सा हि वरस्सहस्रमस्य प्रतिगृहीतं भवतीयं वर इति ब्रूयादथान्यां ब्रूयादियं ममेति तथाऽस्य तत्सहस्रमप्रतिगृहीतं भवति ।

என்பது

உரை

மேற்கூறியவாறாக சோமன் முதலான மூவர்கட்கும் மூன்று வடிவுகளையெடுத்துக்கொண்டு நீரிலிருந்து எழுந்தது வாக்குத் தேவதையேயாம். ஆதலின் சகத்திர தட்சிணையாகத்தில் வாக் தேவதையைத் தேடுதற்பொருட்டு சிறந்த கோவைத் தானமாய்க் கொடுதத்தல் வேண்டும். சிறந்த கோவைத்தானஞ் செய்ததால் சகத்திரதமி என்னுங்கோவை தானஞ் செய்ததாகும். மற்றும அது சிறந்த கோவாமாதலின் அதை பிரதிக்கிரகணஞ் செய்தல் கூடாது. செய்யில் சகத்திரதமிக் கோவை பிரதிக் கிரகணம் பண்ணிய குற்றமாகும். ஆதலின், யாதானு மொன்றைப் பிரதிக்கிரகணஞ் செயதல வேணடும். அப்போது, சகத்திரதமி என்னும இகம்காம்வயாம் என்னும்போது, இவவரத்தைத் தவிர வேறு வரம் எனக்காம எனனல் வேண்டும. இவவாறு செய்யில் வரம் பிரதிக்கிரகணஞ் செய்யப்பட்டதாமாயினும் சகத்திரதமிப் பிரதிக்கிரகண தோஷம் இல்லை என்பது.

---

சகத்திரதமி என்னுங் கோவைப் பலவாறகத்துதித்து விட்டு அவ்வாறு கொடுப்பதன் இலககணத்தை விதக்கின்றது

பிராமணம் 6

उभयतएनी स्यात्तदाहुरन्यतएनी स्यात्सहस्रं परस्तादेतमिति ।

என்பது

உரை

அது இரு பக்கங்களிலும் வெள்ளைப்புள்ளிகளையுடையதாயிருத்தல் வேண்டும் என்பது.

---

சக்த்திரதமிக்கோக்கள்)

இனி, சகத்திரதமி என்னுங் கோவிற்குப் பதிலாக மற்றேநுபக்ஷத்தை விதிக்கின்றது

பிராமணம் 7

**यैव वरः कल्याणी रूपसमृद्धा सा स्यात्सा हि वरस्समृद्ध्यै ।**

என்பது

உரை

*மிகுதியாய்ப் பால் கறப்பதும், அழகிய வால் கொம்பு முதலான அவயவங்களையுடையதுமாகிய கோவைக் கொடுக்கினும் சகத்திரதமியைக் கொடுத்ததால் வரும் எல்லாப் பயனையுமடைகின்றான் என்பது.*

---

தானஞ்செய்யும் கோவானது முகந்துபார்க்க வேண்டியதை விதிக்கின்றது,

பிராமணம் 8

**तामुत्तरेणाऽऽग्नीध्रं पर्याणीयाऽऽहवनीयस्यान्ते द्रोणकलशमव घ्रापयेत् ।**

என்பது.

உரை.

*ஆக்னீத்ரத்திற்கு வடக்கில் வலமாய்க் கொண்டுவந்து ஆகவனீயத்திற்கருகிலிருக்கின்ற துரோண கலசத்திலுள்ள சோமத்தை முகந்துபார்க்கும்படி செய்தல் வேண்டுமென்பதாம்.*

---

முகப்பதற்கு மந்திரத்தை ஏற்படுத்துகின்றது

பிராமணம் 9

**आजिघ्र कलशं मह्युधारा पयस्वत्या त्वा विशन्त्विन्दवस्समुद्रमिव सिन्धवस्सा मा सहस्र आ भज प्रजया पशुभिस्सह पुनर्माऽऽविशताद्रयिरिति ।**

என்பது.

உரை

*கோவே! நீ, துரோண கலச முழுதையும் முகந்து பார்ப்பாயாக. நீ எத்தன்மையதெனின்? நீண்ட பால்த்தாரையையும் மிகுந்த பாலையுமுடையாய். அத்தகைய வுன்னிடத்தில் கடலில் ஆறுகள் புகுவதுபோல் சோமத்துளிகள் நுழைந்துகொள்க. மற்றும், அத்தகைய நீ, தனம், பிரசைகள், பசுக்களுடன்கூட ஆயிரங் கோக்களையும் எம்மிடத்திற் சேர்த்துவிடுவாயாக என்பது. இதுவே மந்திரமாம்.*

முகந்துபார்த்ததின் பயனைக் கூறுகின்றது

பிராமணம் 10

प्रजयैवैनं पशुभीरय्या समर्धयति ।

என்பது

உரை

இவ்வெசமானனுக்கு, பிரசை, தனம், பசுக்களையுண்டாக்குகின்றது என்பது.

---

இதையுணர்ந்தவனைப் புகழ்கின்றது

பிராமணம் 11

प्रजावान्पशुमान्रयिमान्भवति य एवं वेद ।

என்பது

உரை

மேற்கூறியவைகளை உள்ளவாறுணர்ந்தவன் பிரசைகளையும், பசுக்களையும், தனங்களையுமடைகின்றான் என்பது.

---

இனி, அதற்கு அங்கமாகிய ஒருஹோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 12

तया सहाऽऽग्नीध्रं परेत्य पुरस्तात्प्रतीच्यां तिष्ठन्त्यां जुहुयात् ।

என்பது

உரை

ஆகவனீயத்திற்கு அருகில் நிற்கின்றதோடுகூட மீண்டும் ஆக்னீத்ரத்திற்கு அருகில் வந்து ஆக்னீத்ரத்தினுடைய பூர்வபாகத்தில் மேற்கு முகமாய் நின்றுகொண்டிருக்கும்போது ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பது.

---

ஹோமத்திற்கு அங்கமாகிய மந்திரத்தை விளக்குகின்றது

பிராமணம் 13

उभा जिग्यथुर्न परा जयेथे न परा जिग्ये कतरश्चनैनोः । इन्द्रश्च विष्णो यदपस्पृधेथां त्रेधा सहस्रं वि तदैरयेथामिति ।

என்பது

சகத்திரதமிக் கோக்கள்)

இந்திர விஷ்ணுக்களே! நீவிரிருவரும் எங்கும் வெற்றி பெறுகின்றவர் கள். ஓரிடத்தும் தோல்வியடையாதவர்கள். இவ்விருவர்களுள் ஒருவரேனும் ஓரிடத்தும் தோல்வியையடையாதவர்கள் என்பதாம். விஷ்ணுவே! நீயும் இந்திரனும் ஒருவர்க்கொருவர் கலகப்பட்டபோது ஆயிரங் கோக்களையும் மூன்றாய்ப் பகுத்து ஒரு பங்கை நீயும், இரண்டு பங்கை இந்திரனுமாக அடைந்தீர்கள் என்பது.

---

"த்ரேதா சகஸ்த்திரம்,, என்னும் மந்திரப்பகுதியின் கருத்தை விளக்குகின்றது

பிராமணம் 14

**त्रेधाविभक्तं वै त्रिरात्रे सहस्रꣳ साहस्रीमेवैनां करोति सहस्रस्यैवैनां मात्रां करोति ।**

என்பது

உரை

திரிராத்திரயாகத்தில் ஆயிரங் கோக்களை மூன்றாகப் பகுத்தல் வேண்டு மென்பது = துளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதாகிய சகத்திரதமி என்ப தையே ஆயிரமென வழங்கியதாம் எண்ணிக்கையில் ஆயிரம் என்பதில்லை என்பது.

---

இதற்கு அங்கமாகிய மற்றொரு ஹோமத்தை விதிக்கின்றது

பிராமணம் 15

**रूपाणि जुहोति रूपैरेवैनाꣳ समर्धयति ।**

என்பது.

உரை

சிவப்பு, பூனைக்கண், ஒருவயது என்பவைகள் எதற்குளவோ, அதை ஹோமஞ் செய்க. அதாவது, "ரோஹிண்யை ஸ்வாஹா" என்பது முதலிய மந்திரங்களால் என்பதை ஈண்டு யூகித்துணர்க. இவ்வாறு செய்யில் இத்தகைய வடிவத்தால் இக்கோ, சம்பத்தைக் கொடுக்கின்றது என்பதாம்.

---

இதற்கு அங்கமாகிய செபத்தை விதிக்கின்றது

பிராமணம் 16

**तस्या उपोत्थाय कर्णमा जपेत्।**

என்பது

உரை

அக்கோவின் செவிக்கருகில் நின்றுகொண்டு மேல்வரும் மந்திரத்தைச் செபித்தல் வேண்டுமென்பதாம்.

---

அம்மந்திரத்தை விளக்குகின்றது

பிராமணம் 17

**इडे रन्तेऽदिते सरस्वति प्रिये प्रेयसि महि विश्रुत्येतानिते अघ्नियै नामानि सुकृतं मा देवेषु ब्रूतादिति।**

என்பது.

உரை

பிறரால் துன்புறுத்தப்படாத கோவே! இடா, ரந்தா, அதிதி, சரசுவதி, பிரியா, ப்ரேயஸி, மஹி, என்னும் உனது பெயர்களைக் கேட்டு இங்கு இப் பெயர்களால் உன்னை அழைக்கின்றோம். இத்தகைய கோவே! நீ, எசமானனாகிய யான் புண்ணியஞ் செய்தவனென்று தேவர்களிடத்துக் கூறுவாயாக என்பது.

---

மந்திரத்தின் கருத்தைக் கூறுகின்றது

பிராமணம் 18

**देवेभ्य एवैनमा वेदयत्यन्वेनं देवा बुध्यन्ते।**

என்பது

உரை

தேவர்கள், இவ்வெசமானன் புண்ணியஞ் செய்தவனென்று தெரிந்து கொள்ளும்படி இம்மந்திரபாடத்தால் அறிமுகப்படுத்தி வைக்கின்றது. இதனால், இவன் புண்ணியஞ் செய்தவனென்று தேவர்கள், உணர்ந்துகொள்வர் என்பது.

ஆறுவது அநுவாகம்

முற்றிற்று.

## ஏழாங் காண்டம் முதற் பிரபாடகம்

### ஏழாவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்குமேல் பன்னிரண்டு பதங்களைக் கொண்டது.

சகத்திரதமி என்பதன் தானத்தைக் கூறும் பிராமணங்கள்.

सहस्रतम्या वै यजमानस्सुवर्गं लोकमेति सैनꣳ सुवर्गं लोकं गमयति सा मा सुवर्गं लोकं गमयेत्याह सुवर्गमेवैनं लोकं गमयति सा मा ज्योतिष्मन्तं लोकं गमयेत्याह ज्योतिष्मन्तमेवैनं लोकं गमयति सा मा सर्वान्पुण्याँल्लोकान्गमयेत्याह सर्वानेवैनं पुण्याँल्लोकान्गमयति सा ॥२९॥ मा प्रतिष्ठां गमय प्रजया पशुभिः सह पुनर्माऽऽविशताद्रयिरिति प्रजयैवैनं पशुभी रय्यां प्रति ष्ठापयति प्रजावान्पशुमान्रयिमान्भवति य एवं वेद तामग्नीधे वा ब्रह्मणे वा होत्रे वोद्गात्रे वाऽध्वर्यवे वा दद्यात्सहस्रमस्य सा दत्ता भवति सहस्रमस्य प्रतिगृहीतं भवति यस्तामविद्वान् ॥ ३० ॥ प्रति गृह्णाति तां प्रति गृह्णीयादेकाऽसि न सहस्रमेकां त्वा भूतां प्रति गृह्णामि न सहस्रमेका मा भूताऽऽविश मा सहस्रमित्येकामेवैनां भूतां प्रति गृह्णाति न सहस्रं य एवं वेद स्योनाऽसि सुषदा सुशेवा स्योना माऽऽविश सुषदा माऽऽविश सुशेवा माऽऽविश ॥३१॥ इत्याह स्योनैवैनꣳ सुषदा सुशेवा भूताऽऽविशति नैनꣳ हिनस्ति ब्रह्मवादिनो वदन्ति सहस्रꣳ सहस्रतम्यन्वेती३ सहस्रतमीꣳ सहस्रा३मिति यत्प्राचीमुत्सृजेत्सहस्रꣳसहस्रतम्यन्वियात्तत्सहस्रमप्रज्ञात्रꣳ सुवर्गं लोकं न प्र जानीयात्प्रतीचीमुत्सृजति ताꣳ सहस्रमनु पर्या-

वर्तते सा प्रजानती सुवर्गं लोकमेति यजमानमभ्युत्सृजति क्षिप्रे

सहस्रं प्रजायत उत्तमा नीयते प्रथमा देवान्गच्छति ॥३२॥

लोकान्गमयति साऽविद्वान्त्सुशेवा माऽऽविश यजमानं द्वादश च ।

*இதில், 'சகத்திரதமி' என்னுங் கோவின் தானங்கூறப்படுகின்றது.*

சகத்திரதமி என்னுங் கோவை எசமானன் போற்ற வேண்டிய நான்கு மந்திரங்களுள் முதலாவது மந்திரத்தின் கருத்தை விளக்குகின்றது

பிராமணம் 1

**सहस्रतम्या वै यजमानस्सुवर्गं लोकमेति सैनꣳ सुवर्गं लोकं गमयति ।**

என்பது.

உரை

எசமானன், சகத்திரதமி என்னும் இக்கோவால் சுவர்க்கலோகத்தையடைகின்றான். அதுவும் இவனை சுவர்க்கத்தையடையச் செய்கின்றது. ஆதலின், "ஸாமா ஸுவர்க்கம் லோகங்கமய" என்பது முதலான மந்திரங்களை ஓதல்வேண்டும். "அத்தகையநீ என்னை" சுவர்க்கமடையும்படி செய்வாயாக என்பது அதன் பொருளாம் என்பது. இம்மந்திர பாடத்தால் அக் கோ இவனை சுவர்க்கமடையும்படி செய்கின்றது என்பதாம்.

---

ஏனைய மூன்று மந்திரங்களின்கருத்துக்களை விளக்குகின்றது

பிராமணம் 2

**सामा सुवर्गं लोकं गमयेत्याह सुवर्गमेवैनं लोकं गमयति सा मा ज्योतिष्मन्तं लोकं गमयेत्याह ज्योतिष्मन्तमेवैनं लोकं गमयति सा मा सर्वान्पुण्याँल्लोकान्गमयेत्याह सर्वानेवैनं पुण्याँल्लोकान्गमयति सा मा प्रतिष्ठां गमय प्रजया पशुभिस्सह पुनर्माऽऽविशताद्रयिरिति प्रजयैवैनं पशुभीरस्यां प्रतिष्ठापयति ।**

என்பது

உரை

"ஸாமா ஜோதிஷ்மந்தம் லோகம் கமய" என்றது, அது இவனை ஆதித்ய லோகத்தையடையும்படி செய்கின்றது என்கின்றது.

சகத்திரதமீத் தட்சிணை)

"ஸாமா ஸர்வான் புண்யான் லோகாங் கமய" என்பது, அது, இவனை இந்திரலோக முதலிய உலகங்களையடையும்படி செய்கின்றது என்கின்றது.

"ஸாமா ப்ரதிஷ்டாங்கமய" என்பது பிரசை பசுக்கள் தனங்களுடன் நெடுநாள் நிலைத்திருக்கும்படி பெருமையைக் கொடுக்கின்றது என்பது.

---

இதையுணர்ந்தவனைப் புகழ்கின்றது

பிராமணம் 3

**प्रजावान्पशुमान्रयिमान्भवति य एवं वेद ।**

என்பது.

உரை.

இச் சகத்திரதமி என்னுங் கோவின் பெருமையை யுணர்ந்தவன், பசு, புத்திர, தன முதலானவைகளை யடைகின்றான் என்பது.

---

சகத்திரதமி என்னுங்கோவின் தானத்தை விதிக்கின்றது

பிராமணம் 4

**तामग्नीधे वा ब्रह्मणे वा होत्रे वोद्गात्रे वाऽध्वर्यवे वा दद्यात्सहस्रमस्य सा दत्ता भवति ।**

என்பது.

உரை.

அக்கோவை, ஆக்கினீத்திரன், அல்லது, பிரமன், அல்லது, ஹோதா, அல்லது உத்காதா, அல்லது அத்வரியுவுக்கேனும் தானஞ் செய்யில் சகத்திரதமி என்னுங் கோவை தானஞ் செய்ததாகின்றது என்பது.

---

தானம் வாங்குந் தோடம் நீங்குதற் பொருட்டு வாங்குவதற்கு ஓர் மந்திரத்தை விதிக்கின்றது

பிராமணம் 5

**सहस्रमस्य प्रतिगृहीतं भवति यस्तामविद्वान्प्रतिगृह्णाति तां प्रति गृह्णीयादेकाऽसि न सहस्रमेकां त्वा भूतां प्रति गृह्णामि न सहस्रमेका मा भूताऽऽविश मा सहस्रमिति ।**

என்பது.

மந்திர மூணராதவன் தானம் வாங்கில் ஆயிரங் கோக்களைத் தானம் வாங்கிய குற்றமுடையவனுகின்றான். ஆதலின் "ஏகாஸி என்பது முதலியதும், மாஸஹஸ்ரம்" என்பதீருகியதுமாகிய மந்திரத்தால் தானம் வாங்கல் வேண்டுமென்பதாம்.

அம்மந்திரப்பொருளோ, சகத்திரதமி என்னுங் கோவே! நீ ஒன்றுகவே இருக்கின்றாய்; ஆயிரமன்று. ஆதலின் உன்னை ஒன்றென்றே தானம் வாங்குகின்றேன். ஆயிரமாய் அன்று. நீ ஒன்றாயிருந்து எம்மிற் புகுவாயாக ஆயிரங்களாய்ப் புகாதே என்பதாம்.

---

மந்திரத்தையுணர்ந்தவனைப் புகழ்கின்றது

பிராமணம் 6

**एकामेवैनां भूतां प्रति गृह्णाति न सहस्रं य एवं वेद ।**

என்பது

உரை

இம்மந்திரத்தின் உண்மையையுணர்ந்தவன் ஒன்றையே தானம் வாங்குகின்றான் ஆயிரத்தையன்று என்பதாம்.

இனி, தானம் வாங்குவதற்கு முன்செபிக்க வேண்டிய மந்திரத்தை எடுத்து அதன் பொருளை விளக்குகின்றது

---

பிராமணம் 7

**स्योनाऽसि सुषदा सुशेवा स्योना माऽऽविश सुषदा माऽऽविश सुशेवा माऽऽविशेत्याह स्योनैवैनꣳ सुषदा सुशेवा भूताऽऽविशति नैनꣳहिनस्ति ।**

என்பது

உரை

சகத்திரதமி என்னுங்கோவே! நீ, இன்பளிப்பதும், பால்கறக்கும்போது இனிது அடையத்தக்கதுமாக இருக்கின்றாய். ஆகலின், சுகந்தருவதும் சொறிந்து கொடுத்தல் முதலிய சேவையை நன்கு ஏற்றுக் கொள்வதுமாய் எம்மையடைவாயாக. இது எல்லாவகையானுந் துன்புறுத்தாதது என்கின்றது என்பது.

சகத்திரதமீத் தட்சிணை)

உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் மேற்கு முகமாய் கோவை அவிழ்த்து விடல் வேண்டு மென்பதைவிதிக்கின்றது

பிராமணம் 8

ब्रह्मवादिनो वदन्ति सहस्र९ सहस्रतम्यन्वेती३ सहस्रतमी९ सहस्रा३मिति यत्प्राचीमुत्सृजेत्सहस्र९ सहस्रतम्यन्वियात्तत्सहस्रमप्रज्ञात्र९ सुवर्गं लोकं न प्र जानीयात्प्रतीचीमुत्सृजति ता९ सहस्रमनु पर्यावर्तते सा प्रजानती सुवर्गं लोकमेति ।

என்பது

உரை

ஆயிரங் கோக்களுக்குமுன் செல்லல் வேண்டுமா? அல்லது சகத்திரதமி என்னுங் கோவிற்குமுன் செல்லல் வேண்டுமா? என்று பிரமவாதிகள் ஆராய்ச்சி செய்தனர். கிழக்குமுகமாய்விடில், ஆயிரங் கோக்களும் முன் செல்லல் வேண்டும். அப்போது ஞானமின்றியவைகளாய் அவைகள் சுவர்க்கத்தையுணரமாட்டா. ஆதலின் அதை நீக்குவதற்கு மேற்கு முகமாய் அவிழ்த்துவிடல் வேண்டும். அப்போது முன்னே சகத்ரதமி என்னுங் கோ செல்லும்போது அதன் பின்னால் ஆயிரம் பசுக்களுஞ் செல்கின்றன. அவை சுவர்க்கத்தின் மார்க்கத்தை உணர்ந்தவைகளாய் இவனைச் சுவர்க்கத்திற் சேர்க்கின்றன என்பது.

---

ஆயிரம் வராகன் இடையுள்ள பொன்னால் அதை விலைக்குவாங்கி எசமானனுடைய கோசாலையில் விட்டுவிடல் வேண்டுமென்பதை விதிக்கின்றது

பிராமணம் 9

यजमानमभ्युत्सृजति क्षिप्रे सहस्रं प्र जायत उत्तमा नीयते प्रथमा देवान्गच्छति ।

என்பது

உரை

இருத்துவிக்குக்களின் பொருட்டு விலைக்கு வாங்கிய அக்கோவை, எசமானனுடைய வீட்டிற்கு நேராக விட்டுவிடல்வேண்டும். அவ்வாறு விட்டுவிடில் அது எசமானனுடைய வீட்டில் விரைவில் ஆயிரம் பசுக்களை யுண்டாக்குகின்றது. இது தட்சிணைக்குக் கொண்டுபோகும்போது கடைசியிற் கொண்டு போகப்படுகிறது. சுவர்க்கத்தையடையும்போது முதலாவதாய் எசமானனுடன் தேவர்களையடைகின்றது என்பது.

ஏழாம் அநுவாகம்



முற்றிற்று.

## ஏழாங் காண்டம் முதற் பிரபாடகம்

### எட்டாவது அநுவாகம்

*இரண்டு பஞ்சாதிக்குமேல் பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.*

அத்திரிமுனியாற் கண்ட நான்கு சுத்தியாகசுக்களையுடைய சோமயாகத்தைக்கூறும் பிராமணங்கள்.

आत्रेरददादौर्वाय प्रजां पुत्रकामाय स रिरिचानोऽमन्यत निर्वीर्यश्शिथिलो यातयामा स एतं चतूरात्रमपश्यत्तमाऽहरत्तेनायजत ततो वै तस्य चत्वारो वीरा आऽजायन्त सुहोता सूद्गाता स्वध्वर्युस्सुसभेयो य एवं विद्वाꣳश्चतूरात्रेण यजत आऽस्य चत्वारो वीरा जायन्ते सुहोता सूद्गाता स्वध्वर्युस्सुसभेयो ये चतुर्विꣳशाः पवमाना ब्रह्मवर्चसं तत् ॥ ३३ ॥ य उद्यन्तस्स्तोमाः श्रीस्साऽत्रिꣳ श्रद्धादेवं यजमानं चत्वारि वीर्याणि नोपानमन्तेज इन्द्रियं ब्रह्मवर्चसमन्नाद्यꣳ स एताꣳश्चतुरश्चतुष्टोमान्त्सोमानपश्यत्तानाऽहरत्तैरयजत तेज एव प्रथमेनावारुन्धेन्द्रियं द्वितीयेन ब्रह्मवर्चसं तृतीयेनान्नाद्यं चतुर्थेन य एवं विद्वाꣳश्चतुरश्चतुष्टोमान्त्सोमानाहरति तैर्यजते तेज एव प्रथमेनाव रुन्ध इन्द्रियं द्वितीयेन ब्रह्मवर्चसं तृतीयेनान्नाद्यं चतुर्थेन यामेवात्रिरृद्धिमार्ध्नोत्तामेव यजमान ऋध्नोति ॥ ३४ ॥ तत्तेज एकाष्टादश च ।

இதில் அத்திரியின் சதுராத்திரம் விதிக்கப்படுகின்றது.

அதன் விதி

பிராமணம் 1

**अत्रिरददादौर्वाय प्रजां पुत्रकामाय स रिरिचानोऽमन्यत निर्वीर्यश्शिथिलो यातयामा स एतं चतूरात्रमपश्यत्तमाऽहरत्तेनायजत ततो वै तस्य च-त्वारो वीरा आऽजायन्त सुहोता सूद्गाता स्वध्वर्युस्सुसभेयो य एवं विद्वाꣳश्चतूरात्रेण यजत आऽस्य चत्वारो वीरा जायन्ते सुहोता सूद्गा-ता स्वध्वर्युस्सुसभेयः ।**

என்பது

உரை

ஊர்வருடைய புத்திரனாகிய ஔர்வன், புத்திரப்பேற்றை விரும்பி அத்திரி முனிவரை வேண்டினன. அத்திரி முனிவர் தனது குழந்தையை அவனுக்குக் கொடுத்துவிட்டனர். பிறகு தான் வீணாய் இருந்துகொண்டு, யான் வீரியமிலாதவனும், குழந்தையையுண்டாக்க வன்மையிலாதவனும், இளைத்தவனும், செயலில் வனமையிலாதவனும், நாட்பட்டவனும், சாரமில்லாதவனுமாயினேன் என்று ஆராய்ந்து குழந்தைபபேற்றிற்குக் காரணமாகிய சதுராத்திர யாகத்தைக் கண்டுபிடித்து அதற்கு வேண்டிய உபகரணங்களை யெல்லாந் தேடியாகஞ் செய்தனன். அதனால அவனுக்கு நான்கு குழந்தைகள் உண்டாயின. அவைகளோ, ஹௌதத்திரத்திலும், ஔதகாத்திரத்திலும், ஆத்வரியத்திலும், எக்ஞப்பிரயோக வுபதேசத்திலும (பிரமதவ) வனமையுடையவைகளாயின. ஆதலின், பிறரும் இவ்வாறு செய்யில அத்தகைய புதல்வர்களைப் பெறுவர்கள் என்பது.

---

இதில், பகிஷ்ப்பவமானம் மாத்தியந்தினபவமானம் ஆர்ப்பவபவமானம் என்னும் மூன்றிலுமுள்ள ஸ்தோம விசேடங்களை விதிக்கின்றது

பிராமணம் 2

**ये चतुर्विꣳशाः पवमाना ब्रह्मवर्चसं तत् ।**

என்பது.

உரை

எந்த இருக்கு இருபத்துநான்கு முறை ஆவிருத்திசெய்து துதிக்கப்படுகின்றதோ, அத்தகைய ஸ்தோமத்துடன் பவமானத துதி செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யில் பவமானம் மூன்றும் எல்லாப் பிரமவொளிகளையுமுடையதாகின்றன. இருபத்துநான்கு எண்ணுள்ள காயததிரி செபம் முதலானவைகள் பிரமவொளிக்குக் காரணமாதலினென்க என்பது.

பவமான மொழிந்த ஏனைய துதிகளுள் மென்மேலும் மிகுதியானதை விதிக்கின்றது

பிராமணம் 3

य उद्यन्तस्स्तोमाश्श्रीस्सा ।

என்பது

உரை

மேலுமேலுஞ் சிறப்பை அடையும் ஸ்தோமங்கள் எவைகளோ, அவை களேசம்பத்தையுடையவைகள். அவையாவன :—திரிவிருத், பஞ்சதச, சப்த தச,ஏகவிம்ச, திரிணவம், திரியத்திரிம்சத். (3—15, 17—21, 27—33.) என்னும் ஆறு ஸ்தோமங்கள. அவற்றுள, முதல் நாள் காலையில் மூன்று. மாத் தியந்தின சவனத்தில் பதினைந்து. மூன்றாஞ் சவனத்தில் பதினேழாம். இனி இரண்டாம் நாள் மூன்று என்பதை விட்டுவிட்டு, பதினைந்து, பதினேழு, இருபத்தொன்று என்பவைகளால் மூன்று சவனங்களையுஞ் செய்தல் வேண் டும். மூன்றாநாளிலோ, பதினேழு, இருபத்தொன்று, இருபத்தேழு என்ப வைகளால் மூன்று சவனங்களையுஞ் செய்தல்வேண்டும். நான்காநாள் இருபத் தொன்று, இருபத்தேழு, முப்பத்துமூன்று என்பவைகளால மூன்று சவனங் களையு நடத்தல் வேண்டும். இது உதயத் (மேலு மேலுஞ் சிறப்புடையது) எனப்படும் என்பதாம்.

---

அத்தகைய இச்சதுராத்திரத்தைப் புகழ்கின்றது

பிரர்மணம் 4

अत्रिं श्रद्धादेवं यजमानं चत्वारि वीर्याणि नोपानमन्तेज इन्द्रियं ब्रह्मवर्च-
समन्नाद्यं स एतांश्चतुरश्चतुष्टोमान्त्सोमानपश्यत्तानाहरत्तैरयजत
तेज एव प्रथमेनावारुन्धेन्द्रियं द्वितीयेन ब्रह्मवर्चसं तृतीयेनान्नाद्यं चतु-
र्थेन ।

எபன்து

உரை

சிரத்தையையே தேவதையாகக் கொண்ட அத்திரிரிஷி, எப்போதும் யாகஞ்செய்து கொண்டிருந்தும் அழகு, இந்திரியவன்மை, மறையோதன் முதலிய சம்பத்து, இனிய உணவு என்பவைகளையடைந்திலர். பிறகு, ஒவ் வொரு நாளும் இருபத்துநான்கு கொண்ட பவமானத்துதியையும், அப்பவ

மான மூன்றின்பொருட்டு, மேற்கூறியபடியே திரிவிருத் முதலிய மூன்று ஸ்தோமங்களையும் நான்கு நாளும் முறையேசெய்து அத்திரிரிஷி, அழகு முதலான வைகளை முறையாய் யடைந்தனர் என்பது.

---

நான்கு நாளுஞ்செய்யும் முழுயாகமுங் கூறப்பட்டது. இப்போது யாகத்தின் அவயவமாகிய நாள் நான்கை விதிக்கின்றது

பிராமணம் 5

य एवं विद्वाꣳश्चतुरश्चतुष्टोमान्त्सोमानाहरति तैर्यजते तेज एव प्रथमेनाव रुन्ध इन्द्रियं द्वितीयेन ब्रह्मवर्चसं तृतीयेनान्नाद्यं चतुर्थेन यामेवात्रिर्‌ऋद्धिमार्ध्नोत्तामेव यजमान ऋध्नोति ।

என்பது.

உரை

இவ்வாறுணர்ந்து நான்கு நாளுங் நான்கு ஸ்தோமயாகத்தைச் செய்கின்றவன், முதலாவதால் அழகையும், இரண்டாவதால் இந்திரிய வன்மையையும், மூன்றாவதால் மறையோதல் முதலிய சம்பத்தையும், நான்காவதால் நல்லவுணவையும் அத்திரிரிஷியடைந்ததுபோல் அடைவன் என்பது.

எட்டாம் அநுவாகம்
முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் முதற் பிரபாடகம்
## ஒன்பதாம் அநுவாகம்

நாற்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

சமதக்கினி சதுராத்திரத்தைக் கூறும் பிராமணங்கள்.

जमदग्निः पुष्टिकामश्चतूरात्रेणायजत स एतान्पोषाꣳ अपुष्यत्तस्मात्पलितौ जामदग्नियौ न सं जानाते एतानेव पोषान्पुष्यति य एवं विद्वाꣳश्चतूरात्रेण यजते पुरोडाशिन्य उपसदो भवन्ति पशवो

वै पु॒रोडा॒शः प॒शूनेवाव॑ रुन्धे॒ऽन्नं वै पु॒रोडा॒शोऽन्न॑मे॒वाव॑ रुन्धे॒ऽन्ना॒दः प॒शु॒मान्भ॑वति॒ य ए॒वं वि॒द्वाꣳश्च॑तूरा॒त्रेण॒ यज॑ते ॥ ३५ ॥ जमद॑ग्नि-र॒ष्टाच॑त्वारिꣳशत् ।

இதில், சமதக்கினியின் சதுராத்திரங் கூறப்படுகின்றது.

அதைவிதித்தற் பொருட்டு முன்னுரை கூறுகின்றது

பிராமணம் 1

जमदग्निः पुष्टिकामश्चतूरात्रेणायजत स एतान्पोषाꣳ अपुष्यत्तस्मात्पलितौ जामदग्निर्यौ न सं जानाते ।

என்பது

உரை

சமதக்கினிமுனிவர், சதுராத்திரயாகத்தைச் செய்து, பிரசை, பசு, தன முதலான புழுச்சம்பத்தையுமடைந்தனர். இவர், சம்பத்தின் பாதுகாப்பிற்குரிய யாகத்தைச் செய்ததால் அக்குலத்தில் வறியோர்களாய் என்றும இருவர் இருந்திலர். அதாவது, எந்தா ஒரு பிழையால் ஒருவர் அக்குலத்தில் வறியராயினும் தொடர்ந்து இருவர் வறியர்களாக இருந்ததில்லை. அவர் தமது உடம்பை வீணாக அறிந்திலர் எனினுமாம். அக்குலத்தில் வறுமை என்பதே இல்லை என்னல் சாரம் என்பது.

என்பது

உரை

இனி அதை விதிக்கின்றது

பிராமணம் 2

एतानेव पोषान्पुष्यति य एवं विद्वाꣳश्चतूरात्रेण यजते ।

என்பது

உரை

இதன் உண்மையை உள்ளவாறுணர்ந்து சதுராத்திர யாகஞ்செய்கின்றவன், புத்திர, பசு, தன முதலியவைகளின் நிறைந்த சம்பத்தையடைகின்றான் என்பது.

இதனுடைய உபசத்தில் ஒருவிசேடத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

पुरोडाशिन्य उपसदो भवन्ति पशवो वै पुरोडाशः पशूनेवाव रुन्धे ।

என்பது

உரை

பன்னிரண்டு உபசத்க்களிலும் புரோடாசங்கள் உண்டு, புரோடாசம், பசுவையடையக் காரணமாதலின் பசுவையடைகின்றான். புரோடாசம் அன்னமாதலின் உணவுப் பொருளையுமடைகின்றான் என்பது.

---

இதையுணர்ந்து செய்யும் அநுட்டானத்தைப் புகழ்கின்றது

பிராமணம் 4

अन्नं वै पुरोडाशोऽन्नमेवाव रुन्धेऽन्नादः पशुमान्भवति य एवं विद्वांश्चतुरात्रेण यजते ।

என்பது.

உரை

இதன் உண்மையை யுணர்ந்து சதுராத்திர யாகத்தைச் செய்கின்றவன் நல்லுணவை அருந்துவன் பசுக்களையுமடைவன் என்பது.

ஒன்பதாமநுவாகம்
முற்றிற்று.

---

ஏழாங் காண்டம் முதற் பிரபாடகம்

பத்தாவது அநுவாகம்

நான்கு பஞ்சாதியைக் கொண்டது.

பஞ்சராத்திரத்தைக் கூறும் பிராமணங்கள்.

संवत्सरो वा इदमेक आसीत्सोऽकामयतर्तून्त्सृजेयेति स एतं पञ्चरात्रमपश्यत्तमाऽहरत्तेनायजत ततो वै स ऋतूनसृजत य एवं विद्वान्पञ्चरात्रेण यजते प्रैव जायते त ऋतवस्सृष्टा न व्यावर्तन्त त एतं पञ्चरात्रमपश्यन्तमाऽहरन्तेनायजन्त ततो वै ते व्याव-

र्तन्त ॥ ३६ ॥ य एवं विद्वान्पञ्चरात्रेण यजते वि पाप्मना भ्रातृ-व्येणाऽऽ वर्तते सार्विसेनिश्शौचेयोऽकामयत पशुमान्त्स्यामिति स एतं पञ्चरात्रमाऽहरत्तेनायजत ततो वै स सहस्रं पशून्प्राऽऽप्नोद्य एवं विद्वान्पञ्चरात्रेण यजते प्र सहस्रं पशूनाप्नोति बबरः प्रावाहणिरकामयत वाचः प्रवदिता स्यामिति स एतं पञ्चरात्रमा ॥ ३७ ॥ अहरत्तेनायजत ततो वै स वाचः प्रवदिताऽभवद्य एवं विद्वान्पञ्चरात्रेण यजते प्रवदितैव वाचो भवत्यथो एनं वाचस्पतिरित्याहुरनाप्तश्चतूरात्रोऽतिरिक्तष्षड्रात्रोऽथ वा एष संप्रति यज्ञो यत्पञ्चरात्रो य एवंविद्वान्पञ्चरात्रेण यजते संप्रत्येव यज्ञेन यजतेपञ्चरात्रो भवति पञ्चवा ऋतवस्संवत्सरः ॥३८॥ ऋतुष्वेव संवत्सरे प्रति तिष्ठत्यथो पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे त्रिवृदग्निष्टोमो भवति तेज एवाव रुन्धे पञ्चदशो भवतीन्द्रियमेवाव रुन्धे सप्तदशो भवत्यन्नाद्यस्यावरुद्ध्या अथो प्रैव तेन जायते पञ्चविंशोऽग्निष्टोमो भवति प्रजापतेराप्त्यै महाव्रतवानन्नाद्यस्यावरुद्ध्यै विश्वजित्सर्वपृष्ठोऽतिरात्रो भवति सर्वस्याभिजित्यै ॥ ३९ ॥ ते व्यावर्तन्त प्रवदिता स्यामिति स एतं पञ्चरात्रमा संवत्सरोऽभिजित्यै ॥ १० ॥

இதில் பஞ்சராத்திரம் கூறப்படுகின்றது.

அதன் விதி

பிராமணம் 1

वत्सरो वा इदमेक आसीत्सोऽकामयतर्तून्त्सृजेयेति स एतं पञ्चरात्रमपश्यत्तमाऽहरत्तेनायजत ततो वै स ऋतूनसृजत य एवं विद्वान्पञ्चरात्रेण यजते प्रैव जायते ।

என்பது,

உரை.

இககால வடிவம் இருதுக்கள் உண்டாவதற்கு முன் வருடவடிவாய்ப் பிரமனுடைய வடிவாகவே இருந்தது. அப் பிரமன் இருதுக்களைப் படைத்தற் பொருட்டு அதற்குச் சாதனமாகிய பஞ்சராத்திரம் என்னும் யாகத்தைச் செய்து இருதுக்களைப் படைத்தனன். இத்தன்மையையுணர்ந்து பஞ்சராத்திர யாகத்தை செய்கின்றவன் பிரசையை உண்டாக்குகின்றான் என்பது.

---

வேறு பாட்டை விரும்பியவனுக்கு அதையே விதிக்கின்றது

பிராமணம் 2

त ऋतवस्सृष्टा न व्यावर्तन्त त एतं पञ्चरात्रमपश्यन्तमाऽहरन्तेनायजन्त ततो वै ते व्यावर्तन्त य एवं विद्वान्पञ्चरात्रेण यजते वि पाप्मना भ्रातृव्येणाऽऽवर्तते ।

என்பது.

உரை.

அவ்விருதுக்கள் தனித்தனி வெவ்வேறாக ஆகவில்லை. பிறகு, பஞ்சராத்திர யாகத்தைச் செய்து 'வசந்தம், என்னும் பெயர் முதலியவைகளுடன் கூட வெவ்வேறாக ஆய்விட்டன. ஆதலின், ஏனையோர்களும் இப்பஞ்சராத் யாகத்தைச் செய்து, பாவத்துடனும், பகைவனுடனுங் கூடாமல் பிரிந்துவிடுகின்றார்கள் என்பது.

---

பசுவைய்டைவதற்கும் அதையே விதிக்கின்றது.

பிராமணம் 3

सार्वसेनिश्शौचेयोऽकामयत पशुमान्त्स्यामिति स एतं पञ्चरात्रमाऽहरत्तेनायजत ततो वै स सहस्रं पशून्प्राऽऽप्नोद्य एवं विद्वान्पञ्चरात्रेण यजते प्र सहस्रं पशूनाप्नोति ।

என்பது

உரை

சர்வசேனனுடைய புதல்வர்களும், சுசி என்பவளுடைய புதல்வர்களும் தமக்கும் பசுக்கள் வேண்டுமென்று விரும்பி பஞ்சராத்திர யாகத்தைத்தேடிச் செய்து ஆயிரம் பசுக்களையடைந்தனர். ஆதலின், இதன் தன்மையையுணர்ந்து பஞ்சராத்திரத்தைச் செய்கின்றவன், ஆயிரம் பசுக்களை யடைகின்றான் என்பது.

சபையில் பேசும்ஆற்றல் வேண்டுமென்று விரும்பியவனுக்கும் அதையே விதிக்கின்றது.

பிராமணம் 4

बबरः प्रावाहणिरकामयत वाचः प्रवदिता स्यामिति स एतं पञ्चरात्रमाहरत्तेनायजत ततो वै स वाचः प्रवदिताऽभवद्य एवं विद्वान्पञ्चरात्रेण यजते प्रवदितैव वचो भवत्यथो एनं वाचस्पतिरित्याहुः ।

என்பது.

உரை

பிரவாஹணர் என்பவரின்புதல்வனாகிய பபரன் என்பவன், பெரும் வாக்காளனாக விரும்பி பஞ்சராத்திர யாகத்தைத் தேடிச்செய்து பிரசங்க வித்வானாகி விட்டனன். ஆதலின், இத்தன்மையையுணர்ந்து பஞ்சராத்திர யாகத்தைச் செய்கின்றவன் பெரும் பேச்சாளியாகின்றான். அவனை, பிறர், வாசஸ்பதி யென்று வழங்குவார்கள் என்பது.

---

மிகுதி குறைவு இன்மையால் அதைப்புகழ்கின்றது.

பிராமணம் 5

अनाप्तश्चतूरात्रोऽतिरिक्तष्षड्रात्रोऽथ वा एष संप्रति यज्ञोयत्पञ्चरात्रो य एवं विद्वान्पञ्चरात्रेण यजते संप्रत्येव यज्ञेन यजते ।

என்பது

உரை

சதுராத்திரம் ஒருநாள் குறைவுடையதாமாதலின் கூறியபயன்களைக் கொடுக்க முடியாததாம். ஐந்து நாட்களால் அப்பயன்கள் உண்டாதலின் ஷட்ராத்திரமும் வேண்டும். ஆதலின், குறைவு மிகுதி என்னுந்தன்மையோடு கூடிய பஞ்சராத்திர யாகம் தகுதியுடையதாம். ஆதலின் இதை அநுட்டித்த வன் தகுதியாகிய யாகத்தைச் செய்கின்றவனாகின்றான் என்பது.

---

தகுதியாகிய ஐந்தைப் புகழ்கின்றது.

பிராமணம் 6

पञ्चरात्रो भवति पञ्च वा ऋतवस्संवत्सर ऋतुष्वेव संवत्सरे प्रतितिष्ठत्यथो पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धे ।

என்பது.

உரை

பஞ்சராத்திரம் பஞ்ச இருதுக்களாகின்றன. இருதுக்கள் வருடத்தில் முடிகின்றன. வருடம் இருதுக்களில் நிலைத்திருக்கின்றது. இனி, ஐந்தெழுத்துக்களையுடையது பந்திச் சந்தமாம். எக்ஞமும் பாந்தமெனப்படுகின்றது ஆதலின் எக்ஞத்தையடைகின்றான் என்பது.

---

பஞ்சராத்திரத்தின் அவயவமாகிய ஐந்து நாட்களைவிதிக்கின்றது.

பிரமாணம் 7

**त्रिवृदग्निष्टोमो भवति तेज एवाव रुन्धे पञ्चदशो भवतीन्द्रियमेवाव रुन्धे सप्तदशो भवत्यन्नाद्यस्यावरुद्ध्या अथो प्रैव तेन जायते पञ्चविंशोऽग्निष्टोमो भवति प्रजापतेराप्त्यै महाव्रतवानन्नाद्यस्यावरुद्ध्यै विश्वजित्सर्वपृष्ठोऽतिरात्रो भवति सर्वस्याभिजित्यै ।**

என்பது

உரை

பிரகிருதியில், திரிவிருத் முதலிய நான்கு ஸ்தோமங்களிலிருந்து பன்னிரண்டு துதிகள் உண்டாகின்றன. இதிலோ, திரிவிருத் என்னும் ஒன்றாலேயே எல்லாத் துதிகளும் உண்டாகின்றன. அத்தகைய அக்கினிஷ்டோமம் முதலாவது நாளாம். திரிவிருதும் அக்கினியும் முகத்திலிருந்து உண்டானதால் இதனால் தேசசு (மறையோதல் முதலிய சம்பத்து) உண்டாகின்றது. பஞ்சதச ஸ்தோமம் ஒன்றோடுகூடிய உக்த்யம் இரண்டாவதுநாளாம். இது, இந்திரனுடன் மார்பிலிருந்து உண்டானதால் இந்திரிய வன்மை உண்டாகின்றது. பதினேழு ஸ்தோமம் ஒன்றோடுகூடிய உக்த்யம் மூன்றாவது நாளாம். இது அன்னந் தங்குமிடமாகிய வயிற்றிலிருந்து உண்டானதால் இதனால் உணவுப் பொருள்களுண்டாகும். மற்றும், பிரசா உற்பத்தியும் உண்டு, இவ்விரண்டும் உக்த்யங்கள் என்பதை சூத்திரப்படி யூகித்துணர்க. இருபத்தைந்து ஸ்தோமம் ஒன்றுடன்கூடிய அக்கினிஷ்டோமம் நான்காம் நாளாம். இதுவும் சூத்திரப்படி கூறப்பட்டதென்றுணர்க. இதனால் பிரசாபதி தேவதைப் பிராப்தியாகின்றது. இது, கவாமயனத்திலுள்ள மகாவிரதத்திற்குரிய துதிகளைக்கொண்டுள்ளதால் மகாவிரதமெனப்படும். இதனால் உணவுப் பொருள்கள் கிடைக்கின்றன. அக்கினிஷ்டோமத்தின் விகாரமாகிய விசுவசித் என்னும் ஒருநாள் யாகம் ஐந்தாநாளாம் இது சர்வபிருஷ்டமாம். இது எல்லாப் பயனையுந் தரும் என்பது.

பத்தாம் அநுவாகம்
முற்றிற்று.

## ஏழாங் காண்டம் முதற் பிரபாடகம்

## பதினோராவது அநுவாகம்

*ஒரு பஞ்சாதிக்குமேல் இருபத்தைந்து பதங்களைக்கொண்டது.*

குதிரையைக் கட்டுங் கயிற்றை எடுத்தற்குரிய மந்திரங்கள்.

देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यामा ददे इमामगृभ्णन्रशनामृतस्य पूर्व आयुषि विदथेषु कव्या । तया देवास्सुतमा बभूवुर्ऋतस्य सामन्त्सरमारपन्ती । अभिधा असि भुवनमसि यन्ताऽसि धर्ताऽसि सोऽग्निं वैश्वानरꣳ सप्रथसं गच्छ स्वाहाकृतः पृथिव्यां यन्ता राड्यन्ताऽसि यमनो धर्ताऽसि धरुणः कृष्यै त्वा क्षेमाय त्वा रय्यै त्वा पोषाय त्वा पृथिव्यै त्वाऽन्तरिक्षाय त्वा दिवे त्वा सते त्वाऽसते त्वाऽद्भ्यस्त्वौषधीभ्यस्त्वा विश्वेभ्यस्त्वा भूतेभ्यः ॥ ४० ॥ धरुणः पञ्चविꣳशतिश्च । ॥ ११ ॥

*இனி, பிரபாடகம் முடியுவரை அசுவமேத மந்திரங்கள் கூறப்படுகின்றன. பிராமணப்படி அவைகளின் விநியோகங்களை யூகித்துக்கொள்க.*

கயிற்றை எடுத்தல்.

மந்திரம் 1

देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्यामा ददे ।

என்பது.

உரை

*கயிறே! சவிதா தேவனுடைய ஏவலிருக்கும்போது அசுவினிகளின் முழங்கைகளாலும், பூஷாவின் முன் கைகளாலும் உன்னை எடுக்கின்றேன் என்பதாம்*

கயிற்றைப் போற்றுதல்.

மந்திரம் 2

**इमामगृभ्णन्रशनामृतस्य पूर्व आयुषि विदथेषु कव्या। तया देवास्सुतमा बभूवुर्ऋतस्य सामन्त्सरमारपन्ती।**

என்பது

உரை

எக்ஞத்திற்குரியதும், எக்ஞத்தில் முடிந்த காரியத்தைத் தெரிவிப்பது மாகிய இக்கயிற்றை, விரிந்த வேள்வியின்கண், எசமானனுடைய ஆயுள் நிமித்தம் அறிவாளிகளான இருத்துவிக்குக்கள் எடுத்தார்கள். எடுத்து, அக் கயிற்றால் குதிரையைக் கட்டிவைத்து, அசுவமேதத்தில் முக்கியமாகிய சோம யாகத்தின் திரிராத்திரயாகத்தையடைந்தார்கள் என்பது.

இருத்துவிக்குக்களே! நீவிர் விரைவில் எக்ஞத்தை முடிப்பீர்கள் என் னும் பேச்சை இக்கயிறு குறிப்பிடுகின்றது. தான் நீளமானதால் குதிரை யைக் கட்டுந்தகுதியுடையதாயிருத்தலினென்க.

---

குதிரையைக் கட்டுதல்.

மந்திரம் 3

**अभिधा असि भुवनमसि यन्ताऽसि धर्ताऽसि सोऽग्निं वैश्वानरꣳ सप्रथसं गच्छ स्वाहाकृतः पृथिव्यां यन्ता राड्यन्ताऽसि यमनो धर्ताऽसि धरुणः कृष्यै त्वा क्षेमाय त्वा रय्यै त्वा पोषाय त्वा पृथिव्यै त्वाऽन्तरिक्षाय त्वा दिवे त्वा सते त्वाऽसते त्वाऽद्भ्यस्त्वौषधीभ्यस्त्वा विश्वेभ्यस्त्वा भूतेभ्यः।**

என்பது.

உரை

குதிரையே! நீ கட்டப்பட்டிருக்கின்றாய். புவனமாயிருக்கின்றாய். இயக் குவோனாகியிருக்கின்றாய். போஷகனாயிருக்கின்றாய் இது உபசாரம். நீ, எல்லாவுயிர்கட்கும் இனியதும், விரிந்ததுமாகிய ஆகவனீயத்தையடைவாயாக. இது, குதிரையின் அங்கங்கள் ஹோமஞ் செய்யப்படுதலினென்க. அங்கு, ஸ்வாகாகாரத்தால் தேவர்கட்கு எம்மாற் கொடுத்தற்குரிய அவியாவாய். ஹோமஞ் செய்தபின் அரசனாய்ப் பிறந்து பூமிக்கு இறைவனாவாய். அந்த

ரிக்கத்திற்கும் இறைவனுவாய். சுவர்க்கத்திலுள்ளவர்களைப் பாதுகாப்போனு வாய். அதில் வல்லுநனுவாய். அத்தகையவுன்னை, எல்லா நலமுமுண்டாதற் பொருட்டும், க்ஷேமத்தின் பொருட்டும், தனத்தின் பொருட்டும், நிறைந்த போகத்தின் பொருட்டும், மூன்றுலகங்களின் பொருட்டும், அங்கு முன்னுள்ள தனத்தின் பொருட்டும். தேடப் போகுந்தனத்தின் பொருட்டும், இங்கும், நீர், கொடி, உயிர்கள் என்பவைகளின் பொருட்டும் உன்னைக் கட்டுகின்றேன் என்பது. கட்டுகின்றேன் என்பது எஞ்சி நின்றது.

பதினேராமநுவாகம்
முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் முதற் பிரபாடகம்
## பன்னிரண்டாவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.

குதிரையின் வலதுகாதில் ஓதவேண்டிய மந்திரங்கள்.

विभूर्मात्रा प्रभूः पित्राऽश्वोऽसि हयोऽस्यत्योऽसि नरोऽस्यर्वाऽसि सप्तिरसि वाज्यसि वृषाऽसि नृमणा असि ययुर्नामास्यादित्यानां पत्वान्विह्यग्नये स्वाहा स्वाहेन्द्राग्निभ्यां स्वाहा प्रजापतये स्वाहा विश्वेभ्यो देवेभ्यस्स्वाहा सर्वाभ्यो देवताभ्य इह धृतिस्स्वाहेह विधृतिस्स्वाहेह रन्तिस्स्वाहेह रमतिस्स्वाहा भूरसि भुवे त्वा भव्याय त्वा भविष्यते त्वा विश्वेभ्यस्त्वा भूतेभ्यो देवा आशापाला एतं देवेभ्योऽश्वं मेधाय प्रोक्षितं गोपायत ॥ ४१ ॥ रन्तिः स्वाहा द्वाविंशतिश्च ॥ १२ ॥

குதிரையின் வலது காதில் எசமானன் ஓதவேண்டிய மந்திரம்.

மந்திரம் 1

विभूर्मात्रा प्रभू पित्राऽश्वोऽसि हयोऽस्यत्योऽसि नरोऽस्यर्वाऽसि सप्तिरसि वाज्यसि वृषाऽसि नृमणा असि ययुर्नामास्यादित्यानां पत्वान्विहि ।

என்பது

குதிரையே! நீ, பூமிவடிவால் நிறைந்திருக்கின்றாய். விண்ணுலக வடிவால் தலைவனுந் தன்மையையுடைத்தாயிக்கின்றாய். இது உபசாரம். இத்தகைய நீ குதிரைச் சாதியையுடையதாயிருக்கின்றாய். ஹயமா (கொளும்பு பதியும்படி ஓடுவதா)ய் இருக்கின்றாய் எப்போதும் நடப்பதாயிருக்கின்றாய். தன்மீது ஏறி இருக்கும் மனிதனை நியமிப்பதாயிருக்கின்றாய். நல்ல நடையயுடையதாயிருக்கின்றாய். போர் முதலிய செயல்களில் சம்பந்தமுடையதாயிருக்கின்றாய். வேகமுடையதாயிருக்கின்றாய். ஆண் தன்மையுடையதாயிருக்கின்றாய். மக்களால் சிந்திக்கத்தக்கதாயிருக்கின்றாய். சுவர்க்கத்தையடைவிப்பது என்னும் பெயருடையதாயிருக்கின்றாய். இத்தகைய நீ, பன்னிரு சூரியர்களுஞ் செல்லும் அந்தரிக்ஷமார்க்கத்தாற் செல்வாயாக என்பது.

---

பூர்வ ஹோமம்.

மந்திரம் 2-6

**अग्नये स्वाहा स्वाहेन्द्राग्निभ्याᳪ स्वाहा प्रजापतये स्वाहा विश्वेभ्यो देवेभ्यस्स्वाहा सर्वाभ्यो देवताभ्यः ।**

என்பது

உரை

அக்கினிக்கு அர்ப்பணமாகுக. இந்திராக்கினிகட்கு அர்ப்பணமாகுக. பிரசாபதிக்கு அர்ப்பணமாகுக. விசுவதேவர்கட்கு அர்ப்பணமாகுக. எல் தேவர்கட்கும் அர்ப்பணமாகுக என்பது.

---

இரதஞ் செய்வோன் வீட்டில் குதிரையின் நான்குகால்களிலும் ஓமஞ்செய்தல்.

மந்திரம் 7-10

**इह धृतिस्स्वाहेह विधृतिस्स्वाहेह रन्तिस्स्वाहेह रमतिस्स्वाहा ।**

என்பது

உரை

தெற்கு முன்காலில் வன்மையுண்டாவதற்கு இது அர்ப்பணமாகுக. தெற்குப்பின் காலின் வன்மையுண்டாதற்கு இது அருப்பணமாகுக. வடக்குப் பின்காலின் வன்மையுண்டாதற்கு இது அர்ப்பணமாகுக. வடக்கு முன் காலின் வன்மையுண்டாதற்கு இது அர்ப்பணமாகுக என்பது.

அவிழ்த்துவிடல்

மந்திரம் 11

**भूरसिभुवे त्वा भव्याय त्वा भविष्यते त्वा विश्वेभ्यस्त्वा भूतेभ्यः ।**

என்பது

உரை.

குதிரையே ! நீ, முக்காலங்களிலு முள்ளதை யுண்டாக்குவதாயிருக்கின்றாய். இறந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் என்னும் முக்காலத்திய நன்மையின் பொருட்டும், எவ்லாவுயிர்களும் வசமாவதற்கும் உன்னை அவிழ்த்து விடுகின்றேன் என்பதாம்.

---

இரத்தினங் களணிந்த அரசபுத்திரர்களிடத்தில் குதிரையைக் கொடுத்தல்

மந்திரம் 12

**देवा आशापाला एतं देवेभ्योऽश्वं मेधाय प्रोक्षितं गोपायत ।**

என்பது

உரை

தேவர்களே ! அதாவது, இரத்தினங்களணிந்து தேவதைகளைப்போல் வடிவமுள்ள அரசபுத்திரர்களே! நீவிர், யாகத்தின் பொருட்டு தண்ணீர் தெளித்துவிட்ட இக்குதிரையைப் பாதுகாப்பீர்களாக என்பது.

பன்னிரண்டாமநுவாகம்

முற்றிற்று

---

## பதின்மூன்றுவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

உத்திராவ ஹோம மந்திரங்கள்.

**आयनाय स्वाहा प्रायणाय स्वाहोद्द्रावाय स्वाहोद्दुताय स्वाहा**

**शूकाराय स्वाहा शूकृताय स्वाहा पलायिताय स्वाहाऽऽपलायिताय**

स्वाहाऽऽवल्गते स्वाहा परावल्गते स्वाहाऽऽयते स्वाहा प्रयते स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४२ ॥ आयनायोत्तरमापलायिताय षड्विंशतिः ॥ १३ ॥

இதில், குதிரை நான்குகால்களையுந் தூக்கிக்கொண்டு எகிறல் முதலியவற்றின்ஹோமங்கள் கூறப்படுகின்றன. இவை உத்ராவ ஹோமங்களெனப்படுகின்றன. இவை சிறந்த நடைகளைப்பற்றியவைகள் என்க.

குதிரையின், நடைமுதலியவைகளின் ஹோமங்கள்.

மந்திரங்கள் 13

आयनाय स्वाहा प्रायणाय स्वाहोद्द्रावाय स्वाहोद्द्रुताय स्वाहा शूकाराय स्वाहा शूकृताय स्वाहा पलायिताय स्वाहाऽपलायिताय स्वाहाऽऽवल्गते स्वाहा परावल्गते स्वाहाऽऽयते स्वाहा प्रयते स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது

உரை

நேரே செல்வதற்கும், மெதுவாய்ச் செல்வதற்கும், முன்கால்களைத் தூக்கி எகிறுவதற்கும், பின்கால்களைத் தூக்கி எகிறுவதற்கும் சூ சூ என்று அப்போது கனைப்பதற்கும், நேராயும் மிக வேகமாயும் ஓடுவதற்கும், நான்கு கால்களையும் ஒன்றாய்த் தூக்கிக்கொண்டு எகிறுவதற்கும், புறம்பார்த்துச் செல்வதற்கும் இவை அர்ப்பணங்களாகுக. மற்றும் மேலே கூறியவை இறந்த காலம்பற்றியவைகள். இனி, நிகழ் காலத்திய அத்தகைய நடைகட்கும் இவை அர்ப்பணமாகுக. விரிப்பதிலென்? எல்லா விதமான நடைகட்கும் இவை அர்ப்பணமாகுக என்பது.

பதின்மூன்றும் அநுவாகம்

முற்றிற்று.

---

चत्वारिꣳशदक्षरा जगती जागताः पशवो जगत्यामेव पशुषु प्रति-
तिष्ठन्त्येकादशरात्रो भवति पञ्च वा ऋतव आर्तवाः पञ्चर्तुष्वेवाऽऽ-
र्तवेषु संवत्सरे प्रतिष्ठाय प्रजामव रुन्धतेऽतिरात्रावभितो भवतः
प्रजायै परिगृहीत्यै ॥ २१ ॥ एते पुत्रास्तस्माद्वायत्र्येकान्न पञ्चा-
शच्च । ॥ ६ ॥

இதில் பதினொரு நாட்களைக்கொண்ட யாகம் கூறப்படுகின்றது.

அதை விதிக்கின்றது

பிராமணம் 1

ऋतवो वै प्रजाकामाः प्रजां नाविन्दन्त तेऽकामयन्त प्रजाꣳ सृजेमहि प्र-
जामव रुन्धीमहि प्रजां विन्देमहि प्रजावन्तस्स्यामेति त एतमेकादश-
रात्रमपश्यन्तमाऽहरन्तेनायजन्त ततो वै ते प्रजामसृजन्त प्रजामवारुन्धत प्रजामवि-
न्दन्त प्रजावन्तोऽभवन्त ऋतवोऽभवन्तदार्तवानामार्तवत्वमृतूनां वा
एते पुत्रास्तस्मादार्तवा उच्यन्ते य एवं विद्वाꣳस एकादशरात्रमासते
प्रजामेव सृजन्ते प्रजामव रुन्धते प्रजां विन्दन्ते प्रजावन्तो भवन्ति ।

என்பது.

உரை

முன் இருது அபிமானி தேவதைகள் பிரசைகளை விரும்பியும் அடைய வில்லை. ஆதலின், அவ்விருதுக்கள் பிரசைகளையுண்டாக்கும் வன்மை, அவற்றை அடக்கியாளும் வன்மை, பிரசைகளைப் படைத்துக் கொள்ளல், பல பிரசைகளுடன் கூடியிருத்தல் என்னுமிந்நான்கையும் விரும்பின. விரும்பி ஏகாதசராத்திரத்தைக் கண்டு பிடித்துத் தேடிச் செய்து அந்நான்குவகை விருப்பங்களையுமடைந்தன. எல்லாவுயிர்களும் இருதுக்களின் புதல்வர்களாதலின் ஆர்த்தவர்கள் என வழங்கப் பெறுகின்றனர். இவ்வாறுணர்ந்து ஏகாதசராத்திரத்தைச் செய்கின்றவன் பிரசைகளையுண்டாக்குகின்றான். பிரசைகளை அடைகின்றான் பிரசைகளை தன் வசப்படுத்திக்கொள்கின்றான் பிரசைகளுடன் கூடி இருக்கின்றான் என்பது.

---

இதில் முதல்நாளை விதிக்கின்றது.

பிராமணம் 2

**ज्योतिरतिरात्रो भवति ज्योतिरेव पुरस्ताद्दधते सुवर्गस्य लोकस्यानुख्यात्यै ।**

என்பது

உரை

முற்கூறிய, சோதி, கௌ, ஆயுள்என்னும் மூன்றைக்கொண்ட ஒரு நாளை இதன் முதல் நாளில் அதிராத்திரப் பகுதியாய்ச் செய்தல் வேண்டும். செய்யில் முதலிலேயே சோதியை விதித்தலால் சுவர்க்கலோகத்திற்குப் போக விரும்பிய எசமானனுக்கு முன்னர் சுவர்க்கம் விளக்கஞ் செய்யப்பட்டதாகின்றது என்பது.

---

இரண்டாநாள் முதல் ஏழநாளையும் விதிக்கின்றது

பிராமணம் 3

**पृष्ठ्यष्षडहो भवति षड्वा ऋतवष्षट्पृष्ठानि पृष्ठैरेवर्तूनन्वारोहन्त्यृतुभिः संवत्सरं ते संवत्सर एव प्रति तिष्ठन्ति ।**

என்பது

உரை

துவாதசநாட்களுள் இரண்டாநாள் முதல் ஏழுநாள் வரை ரதந்தரமுதலான ஆறு பிருஷ்டத்துதிகளுடன் கூடிய ஆறுநாள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளின் கூட்டமே பிருஷ்டிய ஷடஹமாம். அந்த ஆறுநாளும் இங்குச் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யில் ஆறு ரசங்களின் வாயிலாக இருதுக்களையடைகின்றான். இருதுக்களால் வருடத்தையடைகின்றான். பிறகு வருடத்திலேயே நிலைத்திருக்கின்றான் என்பது.

---

எட்டாவது நாளை விதிக்கின்றது

பிராமணம் 4

**चतुर्विंशो भवति चतुर्विंशत्यक्षरा गायत्री गायत्रं ब्रह्मवर्चसं गायत्रियामेव ब्रह्मवर्चसे प्रति तिष्ठन्ति ।**

என்பது

உரை

இருபத்துநான்கு ஸ்தோமங்களுடன் கூடிய ரதந்தரசாமம் என்னும் உக்தியத்தையே எட்டாநாளில் செய்தல் வேண்டும். செய்யில், இருபத்து நான்கு எழுத்துக்களைக்கொண்ட காயத்திரி கிடைக்கின்றது. அதன் வாயிலாக பிரம ஒளியில் நிலைக்கின்றான் என்பது.

---

ஒன்பதாம் நாளை விதிக்கின்றது

பிராமணம் 5

**चतुश्चत्वारिंशो भवति चतुश्चत्वारिंशदक्षरा त्रिष्टुप्त्रिष्टुभ्येवेन्द्रिये प्रति तिष्ठन्ति ।**

என்பது.

உரை.

நாற்பத்துநான்கு ஸ்தோமங்களுடன்கூடிய பிருகத் ரதந்தரசாமம் என்னும் உக்தியத்தை ஒன்பதாம் நாளிற் செய்தல் வேண்டும். அதனால், நாற்பத்துநான்கு எழுத்துக்களைக்கொண்ட திரிஷ்டுப் ஆகின்றது. திரிஷ்டுப் இந்திரியமாம் ஆதலின் இந்திரியத்தை யடைகின்றான் என்பது.

---

பத்தாம் நாளை விதிக்கின்றது

பிராமணம் 6

**अष्टाचत्वारिंशो भवत्यष्टाचत्वारिंशदक्षरा जगती जागताः पशवो जगत्यामेव पशुषु प्रति तिष्ठन्ति ।**

என்பது.

உரை

நாற்பத் தெட்டு ஸ்தோமங்களைக் கொண்ட பிருகத்சாம உக்தியத்தை பத்தாநாளிற் செய்தல் வேண்டும். செய்யில் நாற்பத்தெட்டெழுத்துக்கள் கொண்ட சகதிச்சந்தத்ததை யடைதல் வாயிலாக பசுக்களை யடைகின்றான் என்பது. இவைகளின் விரிவைச்சூத்திரதிற்காண்க.

---

மேலே கூறப்போதும் ஏகாதசத்தை மனதில் வைத் துக்கொண்டு அஃதோடுஏகாதச ராத்திரத்தைப் புகழ்கின்றது

பிராமணம் 7

**एकादशरात्रो भवति पञ्च वा ऋतव आर्तवाः पञ्चर्तुष्वेवाऽऽर्तवेषु संवत्सरे प्रतिष्ठाय प्रजाम रुन्धते ।**

என்பது.

உரை

இருது தேவதைகள் ஐந்து அத்தேவதைகளாலாக்கப்படும் பூக்கள் ஐந்து, பூத்தல் முதலிய இருதுக்களின் சுபாவங்கள் ஐந்து வருடம்ஒன்று ஆகப்பதினொன்றும். இவவாறு செய்யும் ஏகாதசராத்திர அநுஷ்டானத்தால் பெருமையையடைந்த பிறகு பிரசைகளையுமடைகின்றார்கள் என்பது.

---

ஏகாதச நாளை விதிக்கின்றது

பிராமணம் 8

अतिरात्रावभितो भवतः प्रजायै परिगृहीत्यै ।

என்பது

உரை

இருபத்தொன்பது ஸ்தோத்திரங்களுடன் கூடிய அதிராத்திரமென்னும் ஒருநாள் விசேடத்தை பதினொராவது நாளிற் செய்தல் வேண்டும். சோதி அதிராத்திரமாகும் என்பதால் முதல் நாளுடன் கூடசேர்த்துக் கூறலின் அதி ராத்திரிகள் என்னும் இருமை. இருவகையாலும் அதிராத்திரமாயிருக்கும் போது இருவகையாலும் பிரசைகளின் பாதுகாப்புக் கொள்ளப்பட்டது என்பது.

ஆறுவது அநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### ஏழாவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்கு மேல் இருபத்தைந்து பதங்களைக் கொண்டது.

துவாதசராத்திரத்தைக் கூறும் பிராமணங்கள்

ऐन्द्रवायवाग्रान्गृह्णीयाद्यः कामयेत यथापूर्वं प्रजाः कल्पेरन्निति यज्ञस्य वै क्लृप्तिमनु प्रजाः कल्पन्ते यज्ञस्याक्लृप्तिमनु न कल्पन्ते यथापूर्वमेव प्रजाः कल्पयति न ज्यायाꣳसं कनीयानति क्रामत्यै-न्द्रवायवाग्रान्गृह्णीयादामयाविनः प्राणेन वा एष व्यृध्यते य-स्याऽऽमयति प्राण ऐन्द्रवायवः प्राणेनैवैनꣳ समर्धयति मैत्रावरु-

णाग्रान्गृह्णीरन्येषां दीक्षितानां प्रमीयेत ॥ २२ ॥ प्राणापानाभ्यां वा एते व्यृध्यन्ते येषां दीक्षितानां प्रमीयते प्राणापानौ मित्रावरुणौ प्राणापानावेव मुखतः परि हरन्त आश्विनाग्रान्गृह्णीताऽऽनुजावरोऽश्विनौ वै देवानामानुजावरौ पश्चेवाग्रं पर्यैतामश्विनावेतस्य देवता य आनुजावरस्तावेवैनमग्रं परि णयतश्शुक्राग्रान्गृह्णीत गतश्रीः प्रतिष्ठाकामोऽसौ वा आदित्यश्शुक्र एषोऽन्तोऽन्तं मनुष्यः ॥ २३ ॥ श्रियै गत्वा नि वर्ततेऽन्तादेवान्तमा रभते न ततः पापीयान्भवति मन्थ्यग्रान्गृह्णीताभिचरन्नार्तपात्रं वा एतद्यन्मन्थिपात्रं मृत्युनैवैनं ग्राहयति ताजगार्तिमार्छत्याग्रयणाग्रान्गृह्णीत यस्य पिता पितामहः पुण्यस्स्यादथ तन्न प्राप्नुयाद्वाचा वा एष इन्द्रियेण व्यृध्यते यस्य पिता पितामहः पुण्यः ॥ २४ ॥ भवत्यथ तन्न प्राप्नोत्युर इवैतद्यज्ञस्य वागिव यदाग्रयणो वाचैवैनमिन्द्रियेण समर्धयति न ततः पापीयान्भवत्युक्थ्याग्रान्गृह्णीताभिचर्यमाणस्सर्वेषां वा एतत्पात्राणामिन्द्रियं यदुक्थ्यपात्रꣳ सर्वेणैवैनमिन्द्रियेणाति प्र युङ्क्ते सरस्वत्यभि नो नेषि वस्य इति पुरोरुचं कुर्याद्वाग्वै ॥ २५ ॥ सरस्वती वाचैवैनमति प्र युङ्क्ते मा त्वत्क्षेत्राण्यरणानि गन्मेत्याह मृत्योर्वै क्षेत्राण्यरणानि तेनैव मृत्योः क्षेत्राणि न गच्छति पूर्णान्ग्रहान्गृह्णीयादामयाविनः प्राणान्वा एतस्य शुगृच्छति यस्याऽऽमयति प्राणा ग्रहाः प्राणानेवास्य शुचो मुञ्चत्युत यदीतासुर्भवति

जीवत्येव पूर्णान्ग्रहान्गृह्णीयाद्यर्हि पर्जन्यो न वर्षेत्प्राणान्वा एतर्हि प्रजानाꣳ शुगृच्छति यर्हि पर्जन्यो न वर्षति प्राणा ग्रहाः प्राणानेव प्रजानाꣳ शुचो मुञ्चति ताजक्प्र वर्षति ॥ २६ ॥ प्रमीयेत मनुष्य ऋध्यते यस्य पिता पितामहः पुण्यो वाग्वा एव पूर्णान्ग्रहान्पञ्चविꣳशतिश्च ॥ ७ ॥

ஏழாமநுவாக முதற்கொண்டு பத்தாமநுவாகம் வரை நான்கு அநுவாகங்களிலும் துவாதச ராத்திரயாகங் கூறப்படுகின்றது. அவற்றுள், இங்கு, காமியமான சோமரச பாத்திரங்கள் கூறப்படுகின்றன.

---

ஒரு முறையை விதிக்கின்றது

பிராமணம் 1

ऐन्द्रवायवाग्रान्गृह्णीयाद्यः कामयेत यथापूर्वं प्रजाः कल्पेरन्निति यज्ञस्य वै क्लृप्तिमनु प्रजाः कल्पन्ते यज्ञस्याक्लृप्तिमनु न कल्पन्ते यथापूर्वमेव प्रजाः कल्पयति न ज्यायाꣳसं कनीयानति क्रामति ।

என்பது.

உரை

தகப்பன் பாட்டன் முதலான முன்னோர்கள் ஆசரித்து வந்தபடியே ஆசாரத்தை விரும்பியவன், இரட்டைத் தேவதைகளின் சோமரசபாத்திரங்களுள் இந்திரவாயுக்களின் கிரகபாத்திரத்தை முதலாவது கிரகித்தல் வேண்டும்.

ஈண்டு நித்தியவிதியில் ஐந்திரவாயவக்கிரகம் முதலாவதாமெனினும் காமியத்தைச் சேர்த்தற் பொருட்டு மீண்டும் விதிக்கப்பட்டது. அக்கினிஹோத்திரத்தில் 'தயிரால் வேட்க, என்னும் நித்திய விதியிருப்பினும், "இந்திரிய விருப்புடையோன் தயிரால் வேட்க, என்று மீண்டும் விதித்திருப்பதைப் போலென்க. யாகம் முறைப்படிநடக்கில் பிரசைகளின் செய்கைஇனியதாகும். முறைதவறில் பிரசைகட்கு மாறுபாடுவரும். இவ்வாறு ஐந்திரவாயவக் கிரகத்தை முதலாவதாகக் கொள்ளில் மனைவி தந்தை பாட்டன் முதலானோர்களின் ஆசாரத்தைக் கடவாமல் நடந்து வருவான் என்பது.

---

துவாதசராத்திரம்)

மேற்கூறிய முறையை, பிணிநீங்குதற் பொருட்டும் விதிக்கின்றது

பிராமணம் 2

ऐन्द्रवायवाग्रान्गृह्णीयादामयाविनः प्राणेन वा एष व्यृध्यते यस्याऽऽमयति प्राण ऐन्द्रवायवः प्राणेनैवैनꣳ समर्धयति ।

என்பது

உரை

பிணியாளன் உயிர் நீத்துவிடுவன் ஆதலின், அவன் ஐந்திரவாயவீய மென்னும் சோமரச பாத்திரத்தைக் கிரகித்தல் வேண்டும். கிரகிக்கில், ஐந் திரவாயவீயக்கிரகம் பிராணனுமாதலின் அதை முதலாவதாகக் கொள்ளின் பிராணன் நிறைந்துவிடும், நிறையவே, பிணியும் நீங்கும் என்பது.

இனி, நைமித்திகமாக சில கிரகங்களின் முறையை விதிக்கின்றது

பிராமணம் 3

मैत्रावरुणाग्रान्गृह्णीरन्येषां दीक्षितानां प्रमीयेत प्राणापानाभ्यां वा एते व्यृध्यन्ते येषां दीक्षितानां प्रमीयते प्राणापानौ मित्रावरुणौ प्राणापानावेव मुखतः परि हरन्ते ।

என்பது

உரை

பன்னிருநாட் கொண்ட சத்திரயாகத்தில் தீட்சை பண்ணிக்கொண்டவர் களுள் ஒருவர் இறக்கில் தீட்சைபண்ணிக்கொண்ட ஏனையவர்கள் முதலாவது மைத்திராவருணக் கிரகமென்னுஞ் சோம பாத்திரத்தில் சோமரசத்தைக் கிரகித்தல் வேண்டும். பிறகு ஐந்திரவாயவீயத்தைக் கிரகித்தல் வேண்டும். எல்லாருங்கூடி அநுட்டிக்க முயன்றதால் ஒருவ ரிறப்பினும் ஏனையோர்களு டைய பிராண அபானன்கள் கலக்கமுற்றவைகளாகின்றன ஆதலின் அதன் பொருட்டுமித்திரனும் வருணனும் பிராண அபானன்களின் அபிமானி தேவதைகளாதலின் அவர்களுடைய சோமபாத்திரத்தில் முதலில்சோமரசம் பிடித்ததால் முதலில் அத்தகைய பிராண அபானன்கள் நிலைப்படுத் தியவைகளாகின்றன. என்பது.

சிறியதாந் தன்மையைப் போக்குதற்கு மற்றொரு முறையை விதிக்கின்றது,

பிராமணம் 4

आश्विनाग्रान्गृह्णीताऽऽनुजावरोऽश्विनौ वै देवानामानुजावरौ पश्चेवाग्रं पर्यैतामश्विनावेतस्य देवता य आनुजावरस्तावेवैनमग्रं परिणयतः ।

என்பது

உரை

இயற்கையில் எல்லோரையும்விட உயர்ந்தோனுயிருந்தும் இளையவன் போல் அனைவராலும் தாழ்த்தப்பட்டவன், ஆசுவினக் கிரகமென்னுஞ் சோம பாத்திரத்தில் முன்னர் சோமரசத்தைப் பிடித்துவைத்துவிட்டு, பிறகு, ஐந்திர வாயுக்களின் கிரகங்களைக் கிரகித்தல் வேண்டும். ஏனெனின்? அசுவினிகள் வைத்தியஞ் செய்தமையால் தேவர்களால் தாழ்த்தப்பட்டவர்களானுர்கள். அவர்கள் பிறகு தேவர்களுடன் உயர்த்தப் பெற்றனர். அது போல் தாழ்த்தப்பட்டவர்கள் அத்தகைய அசுவினிகளுடைய சோமரசபாத்திரத்தில் முதலில் சோமரசஞ் பிடிக்கில், அவர்கள், இவனை உயர்த்துகின்றுர்கள் என்பது.

---

பெருமையை யடைதற் பொருட்டு மற்றேரு முறையை விதிக்கின்றது,

பிராமணம் 5

शुक्राग्रान्गृह्णीत गतश्रीः प्रतिष्ठाकामोऽसौ वा आदित्यश्शुक्र एषोऽन्तोऽन्तं मनुष्यश्श्रियै गत्वा नि वर्ततेऽन्तादेवान्तमा रभते न ततः पापीयान्भवति ।

என்பது

உரை

செல்வங் குறைந்து வறுமையுற்றவன், சுக்கிரக் கிரகமென்னும் கிரக பாத்திரததில் சோமரசத்தை முதலில் பிடித்தல் வேண்டும். இங்கு ஒளி மிகுதி பற்றி ஆதித்தனே சுக்கிரன் எனவழங்கப் பட்டனன். இவ்வாதித்தினுடைய ஒளியே ஒளிகளுக்குள் முடிவாகிய ஒளியாம். அதுபோல் இச்சுக்கிரக் கிரகத்தை முதலில் கிரகிப்பவன் மனிதனுடைய செல்வததில் முடிவான செல்வத்தை அதாவது மிகப்பெருஞ் செல்வத்தை அடைவான். மீண்டும் ஒரு நாளும் வறுமையையடையான் என்பது.

---

பில்லி சூனியத்திற்குக் காரணமாகிய முறையை விதிக்கின்றது,

பிராமணம் 6

मन्थ्यग्रान्गृह्णीताभिचरन्नार्तपात्रं वा एतद्यन्मन्थिपात्रं मृत्युनैवैनं ग्राहयति ताजगार्तिमार्छति ।

என்பது

உரை

பகைவரைக் கொல்வதற்கு ஏவற்றொழிற் செய்கின்றவன், முதலில் மந்திக்கிரகமென்னுஞ் சோமபாத்திரத்தில் சோமரசத்தைப் பிடித்தல் வேண்டும். இம் மந்திப்பாத்திரம் பிறருக்குத் துன்பைக் கொடுப்பதால் ஆர்த்த பாத்திரமெனப்படும். அதுமுன்னர் பகைவனை மிருத்துக் கிரகிக்கும்படி செய்கிறது; அதனால் அப்பகைவன் இறந்துவிடுவான் என்பது.

---

தன்னுடைய பிதா முதலானோர்களைப் போல் உயர்வை யடைதற் பொருட்டு மற்றொரு முறையை விதிக்கின்றது

பிராமணம் 7

आग्रयणाग्रान्गृह्णीत यस्य पिता पितामहः पुण्यस्स्यादथ तन्न प्राप्नुयाद्वा-
चा वा एष इन्द्रियेण व्यृध्यते यस्य पिता पितामहः पुण्यो भवत्यथ
तन्न प्राप्नोत्युर इवैतद्यज्ञस्य वागिव यदाग्रयणो वाचैवैनमिन्द्रियेण सम-
र्धयति न ततः पापीयान्भवति ।

என்பது.

உரை

எவ் வேள்வித் தலைவனுடைய பிதாவும் பாட்டனும் தனம் கல்வி முதலியவைகளால் உயர்ந்தவர்களோ, தான் மாத்திரம் அத்தகைய உயர்வை அடைந்திலனோ, அவன், ஆக்கிரயண மென்னுஞ் சோமபாத்திரத்தில் முதலில் சோமரசத்தைப் பிடித்தல் வேண்டும். ஈண்டு, உயர்விலாமை என்பது சபையில் பேசுமாற்றலும் செயலில் இந்திரிய வன்மையும் இன்மை. ஆக்ரயணக்கிரகமானது எக்ஞத்தின் மார்புபோல் வன்மைக்கு இடமும், வாக்கிந்திரியம் போல் உயர் நிலைக்குக் காரணமுமாம். ஆதலின், அதை, முன்னர்க்கிரகிப்பதால் எசமானனுக்கு வாக்குவன்மையையும், இந்திரிய வன்மையையும் உண்டாக்கியதாயிற்று. அதற்கு மேல் எசமானன் அவ்விருவகை வன்மைகளும் இல்லாதவனாகான் என்பது.

---

பிறரால் செய்யப்பட்ட ஏவல் (பில்லி சூனியம்) தன்மேல் அணுகாதிருத்தற் பொருட்டு மற்றொரு முறையை விதிக்கின்றது

பிராமணம் 8

**उक्थ्याग्रान्गृह्णीताऽभिचर्यमाणस्सर्वेषां वा एतत्पात्राणामिन्द्रियं यदुक्थ्य-पात्रꣳ सर्वेणैवैनमिन्द्रियेणाति प्र युङ्क्ते ।**

என்பது

உரை

பிறர் செய்த செய்வினையை நீக்கிக் கொள்ளவிரும்புகின்றவன், உக்த்திய பாத்திரத்தில் முதலில் சோமரசத்தைக்கிரகித்தல் வேண்டும். கிரகிக்கில், எல்லாச் சோமபாத்திரங்கட்குள்ளும் உக்த்தியபாத்திரம் இந்திரியவன்மை யுடன் கூடியதாமாதலின் அதை முதலாவதாகக் கிரகித்தவன், எல்லா வன் மைகளையுந் தாண்டினவனாய், தானே செய்வினை செய்கின்றவனாகின்றான் என் பது.

---

இதில், ஒரு மந்திர விசேடத்தை விதிக்கின்றது

பிராமணம் 9

**सरस्वत्यभि नो नेषि वस्य इति पुरोरुचं कुर्याद्वाग्वै सरस्वती वाचैवैनमतिभि प्र युङ्क्ते ।**

என்பது

**உரை**

சோமரசத்தைப் பிடிப்பதற்கு முன் புரோறுவாக்கியமாக, 'சரஸ்வதி' என்பது முதலிய மந்திரத்தை ஓதல் வேண்டும். ஓதில், அம்மந்திரத்திலுள்ள சரசுவதிதேவி, வாக்கால், ஏவல் வினை செய்தவனைத் தாண்டிக்கொண்டு அருட் டிக்கும்படி செய்கின்றாள். இந்த இருக்கு மந்திரம், பிராமணம் கா. 2-ல் உப ஹோமம் என்னும் பிரபாடகத்தில் உள்ளதாம் என்பது.

---

சரஸ்வதி மந்திரத்தின் நான்காம் பாதமாகிய, "மாத்வத் க்ஷேத்ராணி யரணநி கன்ம" என்பதை எடுத்துக்கொண்டு உரை கூறுகின்றது

பிராமணம் 10

**मा त्वत्क्षेत्राण्यरणानि गन्मेत्याह मृत्योर्वै क्षेत्राण्यरणानि तेनैव मृत्योः क्षत्राणि न गच्छति ।**

என்பது

உரை

"மாத்வத்" என்பது முதலியது, மிருத்துவின் இடங்களையடையாதவர்களாவோமாக, என்கின்றது. அதாவது சரசுவதியே! உனதருளால் யாம் மிருத்துவை யடையாதவர்களாவோமாக என்பது.

---

பிணி நீக்கத்தின் பொருட்டு மற்றொரு முறையை விதிக்கின்றது

பிராமணம் 11

**पूर्णान्ग्रहान्गृह्णीयादामयाविनः प्राणान्वा एतस्य शुगृच्छति यस्याऽऽमयति प्राणा ग्रहाः प्राणानेवास्य शुचो मुञ्चत्युत यदीतासुर्भवति जीवत्येव ।**

என்பது

உரை

நோயாளி, இந்திரவாயவீய முதலான பாத்திரங்களில் சோமரசத்தை நிறைத்து வைத்தல் வேண்டும். நோயுடையவனது பிராணன் துன்புறுகின்றது சோமரசம் நிறைந்த பாத்திரங்கள் பிராணவடிவங்களாதலின் இவ் வெசமானனுடைய துன்பங்களை அவை நீக்கிவிடுகின்றன. நீக்கவே, முகூர்த்தப் போதில் போகும் பிராணனும் பிழைத்துக் கொள்கின்றது என்பது.

---

அம் முறையையே மீண்டும் மழையின் பொருட்டு விதிக்கின்றது

பிராமணம் 12

**पूर्णान्ग्रहान्गृह्णीयाद्यर्हि पर्जन्यो न वर्षेत्प्राणान्वा एतर्हि प्रजानाꣳ शुगृच्छति यर्हि पर्जन्यो न वर्षति प्राणा ग्रहाः प्राणानेव प्रजानाꣳ शुचो मुञ्चति ताजक्प्र वर्षति ।**

என்பது

உரை

மழையை விரும்பில், ஐந்திரவாயவிய முதலான கிரகங்களில் சோம ரசத்தை நிறைத்தல் வேண்டும். சோமரசம் நிறைத்தபாத்திரங்கள் பிராண வடிவங்களாதலின், மழையில்லாமல் வாடிய பிரஜைகளின் பிராணன்களுடைய துன்பம் நீங்குகின்றன. உடனே மழை பெய்யும் என்பது.

ஏழாமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

எட்டாமநுவாகம்

ஏழு பஞ்சாதிக்குமேல் ஒரு பதத்தைக் கொண்டது

வியூடத்தைக் கூறும் பிராமணங்கள்.

गायत्रो वा ऐन्द्रवायवो गायत्रं प्रायणीयमहस्तस्मात्प्रायणीयेऽहन्नैन्द्रवायवो गृह्यते स्व एवैनमायतने गृह्णाति त्रैष्टुभो वै शुक्रस्त्रैष्टुभं द्वितीयमहस्तस्माद्द्वितीयेऽहञ्छुक्रो गृह्यते स्व एवैनमायतने गृह्णाति जागतो वा आग्रयणो जागतं तृतीयमहस्तस्मात्तृतीयेऽहन्नाग्रयणो गृह्यते स्व एवैनमायतने गृह्णात्येतद्वै ॥ २७ ॥ यज्ञमाप्यच्छन्दाꣳसि स्याप्नोति यदाग्रयणश्श्वो गृह्यते यत्रैव यज्ञमदृशन्ततं एवैनं पुनः प्र युङ्क्ते जगन्मुखो वै द्वितीयस्त्रिरात्रो जागत आग्रयणो यच्चतुर्थेऽहन्नाग्रयणो गृह्यते स्व एवैनमायतने गृह्णात्यथो स्वमेव छन्दोऽनु पर्यावर्तन्ते राथंतरो वा ऐन्द्रवायवो राथंतरं पञ्चममहस्तस्मात्पञ्चमेऽहन् ॥ २८ ॥ ऐन्द्रवायवो गृह्यते स्व एवैनमायतने गृह्णाति बार्हतो वै शुक्रो बार्हतꣳ षष्ठमहस्तस्मात्षष्ठेऽहञ्छुक्रो गृह्यते स्व

एवैनमायतने गृह्णात्येतद्वै द्वितीयं यज्ञमापद्यच्छन्दाꣳस्याप्नोति यच्छुक्रश्शस्त्रो गृह्यते यत्रैव यज्ञमदृशन्तत एवैनं पुनः प्र युङ्क्ते त्रिष्टुङ्मुखो वै तृतीयस्त्रिरात्रस्त्रैष्टुभः ॥ २९ ॥ शुक्रो यत्सप्तमेऽह-ञ्छुक्रो गृह्यते स्व एवैनमायतने गृह्णात्यथो स्वमेव छन्दोऽनु पर्या-वर्तन्ते वाग्वा आग्रयणो वागष्टममहस्तस्मादष्टमेऽहन्नाग्रयणो गृह्यते स्व एवैनमायतने गृह्णाति प्राणो वा ऐन्द्रवायवः प्राणो नवममह-स्तस्मान्नवमेऽहन्नैन्द्रवायवो गृह्यते स्व एवैनमायतने गृह्णात्येतत् ॥ ३० ॥ वै तृतीयं यज्ञमापद्यच्छन्दाꣳस्याप्नोति यदैन्द्रवायवश्शस्त्रो गृह्यते यत्रैव यज्ञमदृशन्तत एवैनं पुनः प्र युङ्क्तेऽथो स्वमेव छ-न्दोऽनु पर्यावर्तन्ते पथो वा एतेऽध्यपथेन यन्ति येऽन्येनैन्द्रवाय-वात्प्रतिपद्यन्तेऽन्तः खलु वा एष यज्ञस्य यद्दशममहर्दशमेऽहन्नैन्द्र-वायवो गृह्यते यज्ञस्य ॥ ३१ ॥ एवान्तं गत्वाऽपथात्पन्थामपि यन्त्यथो यथा वहीयसा प्रतिसारं वहन्ति तादृगेव तच्छन्दाꣳस्य-न्योऽन्यस्य लोकमभ्यध्यायन्तान्येतेनैव देवा व्यवाहयन्नैन्द्रवाय-वस्य वा एतदायतनं यच्चतुर्थमहस्तस्मिन्नाग्रयणो गृह्यते तस्मादाग्र-यणस्याऽऽयतने नवमेऽहन्नैन्द्रवायवो गृह्यते शुक्रस्य वा एतदाय-तनं यत्पञ्चमम् ॥ ३२ ॥ अहस्तस्मिन्नैन्द्रवायवो गृह्यते तस्मादैन्द्र-वायवस्याऽऽयतने सप्तमेऽहञ्छुक्रो गृह्यत आग्रयणस्य वा एतदा-यतनं यत्षष्ठमहस्तस्मिञ्छुक्रो गृह्यते तस्माच्छुक्रस्याऽऽयतनेऽष्टमेऽ

हन्नाग्रयणो गृह्यते छन्दांस्येव तद्विवाहयति प्र वस्यसो विवाह-
माप्नोति य एवं वेदाथो देवताभ्य एव यज्ञे संविदं दधाति तस्मा-
दिदमन्योऽन्यस्मै ददाति ॥ ॥ २३ ॥ एतद्वै पञ्चमेऽहन्त्रैष्टुभ एत-
द्गृह्यते यज्ञस्य पञ्चममन्यस्मा एकं च । ॥ ८ ॥

முற்கூறிய துவாதசராத்திரம், சமூடம் வ்யூடம் என இருவகைப்படும். முற்கூறப்பட்டது சமூடமாம், இதில் வ்யூடம் என்பது கூறப்படுகிறது முதலாவது அதில் பிராயணீய உதயனீயங்களை விட்டு விட்டு, நடுவிலுள்ள பத்துநாளுள் முதல் நாள் ஐந்திரவாயவங் கிரகித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிரமாணம் 1

गायत्रो वा ऐन्द्रवायवो गायत्रं प्रायणीयमहस्तस्मात्प्रायणीयेऽहन्नैन्द्रवायवो गृह्यते स्व एवैनमायतने गृह्णाति ।

என்பது

உரை

*சந்தங்களுள் காயத்திரி முதலாவதாம், முதலில் கிரகிக்க வேண்டிய, ஐந்திரவாயு, சுக்கிரம், ஆககிரயணம் என்னும் மூன்றனுள்ளும் முதலாவது ஐந்திரவாயு என்னும் சோமரச பாத்திரமாம். ஈண்டு ஐந்திரவாயுக்கிரகமே முதலில் கிரகித்தல் வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. முதலாவது எனல் ஒப்பாயிருத்தலின் ஐந்திரவாயவம் காயத்திரியாம். மேல்சொல்லவேண்டிய பத்துநாளுள் முதலாவதாகிய நாளும் முதலாவது எனல் ஒப்பாயிருத்தலின் காயத்திரியாம் பத்துநாட்களுள், பிராணீயமாகிய முதல்நாளில் முதலாவதாக ஐந்திரவாயவீயமே கிரகித்தல் வேண்டும் காயத்திரிக்குச் சமமாதலின் என்க. இதனால், முதல் நாளாகிய தினத்தில் ஐந்திரவாயவக்கிரகங் கிரகிக்கப்பட்டதாகின்றது என்பதாம்.*

---

பத்து நாட்களுள், இரண்டாநாளில் சுக்கிரக்கிரகந்தை முதலில் கிரகித்தல் வேண்டும் என விதிக்கின்றது

பிராமணம் 2

त्रैष्टुभो वै शुक्रस्त्रैष्टुभं द्वितीयमहस्तस्माद्द्वितीयेऽहञ्छुक्रो गृह्यते स्व एवैनमायतने गृह्णाति ।

என்பது

துவாதச ராத்திரம்)

உரை

முற் கூறியபடியே, திரிஷ்டுப் சந்தமும், சுக்கிரக்கிரகமும் இரண்டாவதாம் என்பது ஒத்திருக்கின்றது. இரண்டாநாளில் முதலாவதாவதாக திரிஷ்டுப் ஆகிய சுக்கிரக் கிரகத்தையே கிரகித்தல் வேண்டும் என்பது.

---

முன்போல், மூன்றம்நாள், ஆக்கிரயணம் என்னுஞ் சோமபாத்திரத்தில் சோம ரசத்தைப் பிடித்தல் வேண்டும் என விதிக்கின்றது,

பிராமணம் 3

**जागतो वा आग्रयणो आगतं तृतीयमहस्तस्मात्तृतीयेऽहन्नाग्रयणो गृह्यते स्व एवैनमायतने गृह्णाति ।**

என்பது

உரை

முன் போல் ஆக்கிரயணக் கிரகமும், சகதிசசந்தமும் எண்ணிக்கையில் ஒத்தவைகள். அதாவது மூன்றுவகாம் ஆதலின், மூன்றுநாள், ஆக்ரயணக் கிரகத்தில் முதலில் சோமரசத்தைப் பிடித்தல் வேண்டும். இதனால் தனது இடத்திலேயே தன்னைப்பிடித்ததாகின்றது என்பது.

---

ஆக்கிராயணக் கிரகத்தின் முதலாவதாந் தன்மையையே புகழ்கின்றது,

பிராமணம் 4

**एतद्वै यज्ञमापद्यच्छन्दाश्स्याप्नोति यदाग्रयणश्श्वो गृह्यते यत्रैव यज्ञ मदृशन्तत एवैनं पुनः प्र युङ्क्ते ।**

என்பது

உரை

ஆக்கிரயணக் கிரகத்தின் முதலாவதாந்தன்மையை காயத்திரி முதலிய மூன்று சந்தங்கள் வடிவ மூன்று நாளும் அடைகின்றான். அதாவது, முதல் மூன்று நாளும், ஆக்கிரயணத்தைக் கொண்டு முடிதலின் எக்ஞம் இதை அடைகின்றது ஐந்திவராயு, சுக்கிரம், ஆக்ரயணம் என்னும் மூன்றையுமுதலாவதாகத் கொண்டகிரியை திரியநீகமெனப்படும். இம்மூன்று நாளும், ஆக்கிரயணக் கிரகத்தை முதலாவக்கொண்டதில் முடிவு பெறுகின்றன.

மற்றும், மேல்வரும் நான்காம் நாள் இவ்வாக்கிரயணக்கிரகமே முதலில் கிர கிக்கப்படுகின்றது. இவ்வாறு ஆக்கிரயணக் கிரகத்தை முதலாவதாகக் கொண்டமை காணப்படுகின்றதால் ஆக்கிரயணக் கிரகத்தை முதலாவதாகக் கொண்டே மீண்டும் எக்ஞம் பிரயோகஞ் செய்யபடுகின்றது; ஆதலின் இது பெருமையுடையது என்பது.

---

நான்காநாள் ஆக்கிரயணக் கிரகத்தையே முதலாவதாகக் கிரகித்தல் வேண்டு மென்று விதிக்கின்றது

பிரமாணம் 5

जगन्मुखो वै द्वितीयस्त्रिरात्रो जागत आग्रयणो यच्चतुर्थेऽहन्नाग्रयणो गृह्यते स्व एवैनमायतने गृह्णात्यथो स्वमेव छन्दोऽनु पर्यावर्तन्ते ।

என்பது

உரை

சமூடத்தைப்தப்போல் காயத்திரியே முதலில் வரல்வேண்டும். ஐந்திர வாயவீயம் முதலில் தொடங்கப்பெற்றதால் என்க. அங்ஙனமாயினும், ஆக்ரய ணக்கிரகம் சக்தி என்று கூறப்பட்டிருந்தலால் இங்கு, இரண்டாவது மூன் றின் முதல் நாளிலும் சக்தியே முதலில் கிரகிதல் வேண்டும். இவ்வாற்றுல் நான்காம் நாளிலும் ஆக்கரயணக் கிரகத்தையே முதலாவதாகக் கிரகிக்கின், தனதிடத்திலே தான் கிரகிக்கப்பட்டதாகும். மற்றும், ஆக்கிரயணக் கிரக பாத்திரம் தனது சகதிச்சங்கத்தைத் தழுவி மீண்டுஞ் சுற்றி வருகின்றது (புனராவிருத்தி யாகின்றது) என்பது.

---

ஐந்தாநாளில் ஐந்திரவாயுக்கிரகம் முதலில் கிரகித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது,

பிரமாணம் 6

राथंतरो वा ऐन्द्रवायवो राथंतरं पञ्चममहस्तस्मात्पञ्चमेऽहन्नैन्द्रवायवो गृह्यते स्व एवैनमायतने गृह्णाति ।

என்பது

உரை

ப்ரகிருதியாகிய சோதிட்டோமத்தில் சோமம் ரதந்தர சாமமாகில், ஐந்திர வாயவியத்தை முதலில் கிரகித்தல் வேண்டும். ஏனெனின் ? ஐந்திரவாயவியம் முதலாவதாவதற்கு ரதந்தரசாமம் நிமித்தமாதலின் என்க. இதனால் ஐந்திரவா யவியம் ரதந்தரமென்பது பெறப்பட்டது. ஆதலின், ஐந்தாம்நாள் ஐந்திரவாய வியத்தை முதலில் கிரகித்தல் வேண்டும். கிரகிக்கில் தனதிடத்தில் தன்னைக் கிரகித்ததாகின்றது என்பது.

---

ஆறுநாள் சுக்கிரக்கிரகத்தை முதலில் கிரகித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது

பிராமணம் 7

**बार्हतो वै शुक्रो बार्हतꣳ षष्ठमहस्तस्मात्षष्ठेऽहञ्छुक्रो गृह्यते स्व एवैनमा-यतने गृह्णाति ।**

என்பது

உரை

சுக்கிரக்கிரகத்தை முதலில் கிரகிப்பதற்கு பிருகத் சாமம் நிமித்தமாத லின் சுக்கிரக்கிரகம் பிருகத் சாமமெனப்படும். ஆதலின் அது பிருகத்சாம சம் பந்தமானது. ஆகையால் ஆறுநாள் சுக்கிரக்கிரகத்தை முதலில் கிரகித்தல் வேண்டும். கிரகிக்கில், தனதிடத்திலேயே தன்னைக் கிரகித்ததாகின்றது என்பது.

---

துவாதசாரத்திரம்

பிராமணம் 8

**एतद्वै द्वितीयं यज्ञमापद्यच्छन्दाꣳस्याप्नोति यच्छुक्रश्श्वो गृह्यते यत्रैव यज्ञ-महशन्तत एवैनं पुनः प्र युङ्क्ते ।**

என்பது

உரை

சுக்கிரக்கிரகத்தை முதலாவதாகக்கொண்டு இரண்டாவது மூன்றாவது நாட்கள் முடிகின்றதால் இது இரண்டிற்கும் மூன்றிற்கும் பரவுகிறது சுக்கிரக் கிரகம் முதலாவது எனக்கொண்டு இரண்டாவது மூன்று முடியப்படுதல் காணப்படுதலால் ஏழாம்நாளும் சுக்கிரக்கிரகத்தை முதலாவதாகக் கிரகித்தே வேள்வி தொடங்கப்படுகின்றதால் இது பெருமையையுடையது என்பது.

---

ஏழாநாளும் சுக்கிரக்கிரகம் முதலாவதாமென்பதை விதிக்கின்றது

பிராமணம் 9

त्रिष्टुङ्मुखो वै तृतीयस्त्रिरात्रस्त्रैष्टुभश्शुक्रो यत्तृतमेऽहञ्छुक्रो गृह्यते स्व एवै-
नमायतने गृह्णात्यथो स्वमेव छन्दोऽनुपर्यावर्तन्ते ।

என்பது

உரை

திரிராத்திரியிலும் சமூடம்போல் காயத்திரியையே முதலாவதாகக் கொள்ளல் வேண்டும். ஆனாலும் சுக்கிரக்கிரகம் திரிஷ்டுபாமாதலின் திரிஷ்டுப் சந்தத்தையே முதலாவதாகக் கொள்ளல்வேண்டும். ஆதலில் ஏழாநாள் சுக்கிரக் கிரகத்தையே முதலில் கிரகித்தல் வேண்டும். கிரகிக்கில், தனதிடத்தில் தன்னைக்கிரகித்ததாகின்றது. திரிஷ்டுப்சந்தத்தை சுக்கிரக்கிரகம் மீண்டும் ஆவிருத்தி செய்கின்றது என்பது.

---

எட்டாநாள் ஆக்ரயணக்கிரகம் முதலில் கிரகிக்கப்படுகின்றது என்பதை விதிக்கின்றது

பிராமணம் 10

वाग्वा आग्रयणो वागष्टममहस्तस्मादष्टमेऽहन्नाग्रयणो गृह्यते स्व एवैनमा-
यतने गृह्णाति ।

என்பது

உரை

ஆக்ரயணக்கிரகம் வாக் என்று ஆரண்யகாண்டத்திற் கூறியிருத்தலின் எட்டாம்நாள் வாக்காம். ஆகலின், எட்டாநாளில் ஆக்கிரயணக் கிரகத்தை முதலில் கிரகித்தல் வேண்டும் கிரகிக்கில், தன்னிடத்தில் தன்னைக் கிரகித்ததாகின்றது என்பது

---

துவாதசராத்திரம்)

ஒன்பதாம்நாள், ஐந்திரவாயவியக்கிரகத்தை முதலில் கிரகித்தல் வேண்டு மென்று விதிக்கின்றது

பிராமணம் 11

**प्राणो वा ऐन्द्रवायवः प्राणो नवममहस्तस्मान्नवमेऽहन्नैन्द्रवायवो गृह्यते स्व एवैनमायतने गृह्णाति ।**

என்பது

உரை

*பிரகிருதியில் கிருகப்பிராமணத்தில் ஐந்திரவாயவியக்கிரகம் வாக்கு என்று கூறப்பட்டிருத்தலின், வாக்கும் பிராணனுடைய அவாந்தர பேதமாத லின் ஐந்திரவாயவியமும் பிராணனும். ஒன்பதாம் நாளும் பிராணனும் ஆத லின் ஒன்பதாநாள் ஐந்திரவாயவியக்கிரகம் முதலில் கிரகித்தல் வேண்டும். கிரகிக்கில், தன்னிடத்தில் தன்னைக் கிரகித்ததாகின்றது என்பது*

---

ஐந்திரவாயவீயக் கிரகத்தின் முதலாவதாந் தன்மையைப் புகழ்கின்றது

பிராமணம் 12

**एतद्वै तृतीयं यज्ञमापद्यच्छन्दाꣳस्याप्नोति यदैन्द्रवायवश्वो गृह्यते यत्रैव यज्ञमदृशन्तत एवैनं पुनः प्र युङ्क्तेऽथो स्वमेव छन्दोऽनु पर्यावर्तन्ते ।**

என்பது

உரை

*ஐந்திரவாயவீயத்தின் முதலாவதாந்தன்மை மூன்றுவதாம் ஆதலின் மூன்றுகிய எக்ஞத்தையடைகின்றது. இச்சந்தம் நாளைக்கு எக்ஞத்தை யடை கின்றது. மேலும் ஐந்திரவாயவீயத்தை முதலாவதாகக்கொண்டே எக்ஞம் நடத்தப்படுகின்றது. ஆதலின் ஐந்திரவாயவீயம் தனது சந்தத்தால் மீண்டும் ஆவிருத்தி செய்யப்படுகின்றது என்பது.*

---

பத்தாம்நாளும் ஐந்திரவாய்வீயக்கிரகமே முதலில் கிரகிக்கப்படுகின்றதென்று விதிக்கின்றது

பிராமணம் 13

**पथो वा एतेऽध्यपथेन यन्ति येऽन्येनैन्द्रवायवात्प्रतिपद्यन्तेऽन्तः खलु वा एष यज्ञस्य यद्दशममहर्दशमेऽहन्नैन्द्रवायवो गृह्यते यज्ञस्यैवान्तं गत्वाऽपथात्पन्थामपि यन्त्यथो यथा वहीयसा प्रतिसारं वहन्ति तादृगेव तत् ।**

என்பது

உரை

பன்னிருநாள் யாகத்தில் பிராயணீய உதயனீய மிரண்டையும் நீக்கி நடுவிலுள்ள பத்து நாளும் எவ்வெசமானன் ஐந்திர வாயுவை முதலாவதாகக் கொள்வதைத்தவிர்த்து சுக்கிரக்கிரகத்தை முதலாவதாகக் கொள்ளுதல் முதலியதால் நடாத்துகின்றானோ, அவ்வெசமானன் தனது வழியிலிருந்து நழுகியவனாகின்றான். ஆதலின் தசராத்திரம் ஐந்திரவாயுக்கிரகத்தின் முதலாந் தன்மையினாலே தொடங்கல் வேண்டும் அத்தகைய இப் பத்தாம்நாள் முடிவு நாளாம். ஆதலின், முதல்நாளைப்போல் கடைசிநாளும் ஐந்திரவாயவியக்கிரகமே முதலில்கிரகித்தல் வேண்டும். இவ்வாறு செய்யில் எக்ஞம் முடிவுவரை நல்வழியில் நடந்தேறியதாகும். மற்றும், பாரவண்டிகளை ஈர்த்துக்கொண்டுபோகும் வணிகன் குறுக்கு வழிகளை விட்டு விட்டு நேர்வழியாகிய பெரும் வழியில் வண்டிகளைத் தொடர்வாய்கொண்டு செல்கின்றதுபோல் முடிவிலும் தொடக்கத்திலும் ந்திரவாயவீயக்கிரகமே உள்ளதென்பதை யுணர்க என்பது.

---

ஐந்திரவாயவீயக்கிரகத்தை முதலாவதாகக்கொண்ட இவ் வியூடமுறையை உலகில் கல்யாண உவமையால் புகழ்கின்றது

## பிராமணம் 14

छन्दाꣳस्यन्योऽन्यस्य लोकमभ्यध्यायन्तान्येतेनैव देवा व्यवाहयन् ।

என்பது

உரை

கசியபகோத்திரத்திலுள்ள மணமகனுக்கு பரத்துவாசகோத்திரத்திரத்தை விசாரித்து அதிலுள்ள மணமகளை மணஞ்செய்கின்றனர். அவ்வாறே, பரத்துவாச கோத்திரத்திலுள்ள மணமகனுக்கு வேறு கோத்திரத்திலுள்ள மணமகளை மணக்கின்றனர். அவ்வாறே, சந்தோபிமானி தேவதைகள் ந்திரவாயவிய முதலான தேவதைகள் ஒன்றற்கொன்று விசாரித்து தனது இடத்தைவிட்டு மற்றொன்றின் இடத்தில் இருந்துகொள்கின்றன என்பது.

---

ஐந்திரவாயவீயம், ஆக்ரயணம் என்னுமிரண்டின் இடம் மாறியதை விளக்குகின்றது.

## பிராமணம் 15

ऐन्द्रवायवस्य वा एतदायतनं यच्चतुर्थमहस्तस्मिन्नाग्रयणो गृह्यते तस्मादाग्रयणस्याऽऽयतने नवमेऽहन्नैन्द्रवायवो गृह्यते ।

என்பது

உரை

சமூடம் என்னும் துவாதசாஹம் வியூடம் என்பதற்கு பிரகிருதியாம். சமூடபக்ஷத்தில் பிராயணீயம் உதயனீயம் பத்தாநாள் என்னுமூன்றையும் விட்டு விட்டு எஞ்சிய ஒன்பதுநாட்களுள் மூன்றுநாள் மூன்றுமுறையாக வருகின்றன. அவற்றுள் இரண்டாவது மூன்றில் ஒன்பதாம் நாளில் நான்காநாள் கொடக்கமாதலின் அந்நாள் ஐந்திரவாயவீயத்தின் இடமாம். அதில் முற்கூறிய வியூடமுறையாக இரண்டவதாகிய ஆக்கிரயணங் கிரகிக்கப்பட்டிருக்கின்றது. ஒன்பதாம் நாள் சமூடத்தில் ஆக்கிரயணத்தின் இடமாம் அதில் வியூடமுறையாய் இரண்டாவதாகிய ஐந்திரவாயவீயங் கிரகிக்கப்பட்டிருக்கின்றது. இதுவே ஐந்திரவாயு ஆக்ரயணம் என்னும் இரண்டின் விவஹாமாம். விவாஹம்—இடமாற்றம் என்பது.

---

சுக்கிரம், ஐந்திரவீயம் என்னும் இரண்டிற்கும் விவாஹம் (இடாற்றம்) விளக்கப்படுகின்றது

பிரமாணம் 16

शुक्रस्य वा एतदायतनं यत्पञ्चममहस्तस्मिन्नैन्द्रवायवो गृह्यते तस्मादैन्द्रवायवस्याऽऽयतने सप्तमेऽहञ्छुक्रो गृह्यते ।

என்பது

உரை

சமூடபக்ஷ நவராத்திரியில் ஐந்தாநாள் இரண்டாவது மூன்றுனுள் அடங்கியதால் சுக்கிரக்கிரகத்தினுடைய இடமாம். அதில், வியூடமுறையாய் ஐந்திரவாயவீயம் கிரகிக்கப் பட்டிருக்கின்றது. ஏழாநாள் மூன்ருவது மும்மையின் முதல் நாளாதலின் ஐந்திரவாயவத்தின் இடமாம். அதில், இரண்டாவது செய்த சுக்கிரக்கிரகங் கிரகிக்கப் பட்டிருக்கின்றது. இதுவே, சுக்கிர, ஐந்திர வாயவம் ஆவிருத்தி என்னும் மிரண்டிற்குள்ள விவாஹமாம் என்பது.

---

சுக்கிரம், ஆக்கிரயணம் என்னும் இரண்டின் முதலாந்தன்மைகளின் விவாஹத்தை விளக்குகின்றது

பிராமணம் 17

आग्रयणस्य वा एतदायतनं यत्षष्ठमहस्तस्मिञ्छुक्रो गृह्यते तस्माच्छुक्रस्याऽऽयतनेऽष्टमेऽहन्नाग्रयणो गृह्यते ।

என்பது

உரை

ஆறுநாள் இரண்டாவது மூன்றின் கடைசி நாளாமாதலின் அது ஆக்கிரயணத்தின் இடமாம். அதில், வியூடமுறையாய் ஆவிருத்திசெய்த முதலாவது சுக்கிரம் கிரகிக்கப் பட்டிருக்கிறது. எட்டாநாள் மூன்றாவது மூன்றின் நடுவிலிருக்கின்றதால் சுக்கிரத்தின் இடமாம். அதில், வியூடமுறையாய் ஆக்கிரயணங் கிரகிக்கப் பட்டிருக்கிறது. இது சுக்கிரம் ஆக்கிரயணங்களின் விவாஹமாம் என்பது.

---

இதையுணர்ந்தவனைப் புகழ்கின்றது

பிராமணம் 18

छन्दाꣳस्येव तद्विवाहयति प्र वस्यसो विवाहमाप्नोति य एवं वेदाथो देवताभ्य एव यज्ञे संविदं दधाति तस्मादिदमन्योऽन्यस्मै ददाति ।

என்பது.

உரை

எவன் இவ்வாறு ஐந்திரவாயவியம் முதலியவைகளின் முதலாந்தன்மைகளையறிகின்றானோ, அவன் சந்த அபிமானிதேவதைகட்கு விவாஹஞ் செய்துவைத்தவனாகின்றான். தானும், மிகுந்த தனமுடையவன் வீட்டில் விவாஹஞ்செய்து கொள்வன். மற்றும், எக்ஞத்தை யநுட்டிக்கும்போது தேவதைகளின் உணர்ச்சியையுமடைகின்றான். இவ்வாறு சந்தங்களின் விவாஹம் ஆனபடியால் உலகிலும் அன்னிய கோத்திரத்திற் பிறந்த மருகனுக்கு அன்னிய கோத்திரத்தான் தன் மகளைக் கொடுக்கின்றான் என்பது.

எட்டாம் அநுவாகம்
முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### ஒன்பதாம் அநுவாகம்

மூன்று பஞ்சாதிக்குமேல் ஐந்து பதங்களைக் கொண்டது.

துவாதசாஹத்தின் நாள் விசேடத்தை விதிக்கும் பிராமணங்கள்

प्रजापतिरकामयत प्र जायेयेति स एतं द्वादशरात्रमपश्यत्तमाऽहरत्तेनायजत ततो वै स प्राजायत यः कामयेत प्र जायेयेति स द्वादशरात्रेण यजेत प्रैव जायते ब्रह्मवादिनो वदन्त्यग्निष्टोमप्रायणा

यज्ञा अथ कस्मादतिरात्रः पूर्वः प्र युज्यत इति चक्षुषी वा एते यज्ञस्य यदतिरात्रौ कनीनिके अग्निष्टोमौ यत् ॥ ३४ ॥ अग्निष्टोमं पूर्वं प्रयुञ्जीरन्बहिर्धा कनीनिके दध्युस्तस्मादतिरात्र पूर्वः प्र युः-ज्यते चक्षुषी एव यज्ञे धित्वा मध्यतः कनीनिके प्रति दधाति यो वै गायत्रीं ज्योतिःपक्षां वेद ज्योतिषा भासा सुवर्गं लोकमेति याव-ग्निष्टोमौ तौ पक्षौ येऽन्तरेऽष्टावुक्थ्यास्स आत्मैषा वै गायत्री ज्योतिःपक्षा य एवं वेद ज्योतिषा भासा सुवर्गं लोकम् ॥३५॥ एति प्रजापतिर्वा एष द्वादशधा विहितो यद्द्वादशरात्रो यावतिरात्रौ तौ पक्षौ येऽन्तरेऽष्टावुक्थ्यास्स आत्मा प्रजापतिर्वावैष सन्त्सद्ध वै सत्रेण स्पृणोति प्राणा वै सत्प्राणानेव स्पृणोति सर्वासां वा एते प्रजानां प्राणैरासते ये सत्रमासते तस्मात्पृच्छन्ति किमेते सत्रिण इति प्रियः प्रजानामुत्थितो भवति य एवं वेद ॥ ३६ ॥ अग्निष्टोमो यत्सुवर्गं लोकं प्रियः प्रजानां पञ्च च । ॥ ९ ॥

இதில், துவாதசாஹம் என்பதன் நாள் விசேடங்கள் கூறப்படுகின்றன.

துவாதசாஹத்தை விதிக்கின்றது

பிரமாணம் 1

प्रजापतिरकामयत प्र जायेयेति स एतं द्वादशरात्रमपश्यत्तमाऽहरत्तेना-यजत ततो वै स प्राजायत यः कामयेत प्र जायेयेति स द्वादशरात्रेण यजेत प्रैव जायते ।

என்பது.

உரை

பிரமன் பிரசைகளைப் படைக்க விருப்புற்றவனாய்த் துவாதசராத்திரம் என்னும் இவ்வேள்வியைக் கண்டுபிடித்து தேடி அநுட்டித்து அதனால் பிரசைகளைப் படைத்தனன். ஆதலின் பிரசையை யுண்டாக்க விரும்புகின்றவன் துவாதச ராத்திரமென்னும் யாகத்தைச் செய்யில் பிரசையை உண்டாக்குகின்றான் என்பது.

---

கடாவிடைகளால் முதல்நாளை விதிக்கின்றது

பிராமணம் 2

ब्रह्मवादिनो वदन्त्यग्निष्टोमप्रायणा यज्ञा अथ कस्मादतिरात्रः पूर्वः प्र यु-
ज्यत इति चक्षुषी वा एते यज्ञस्य यदतिरात्रौ कनीनिके अग्निष्टोमौ य-
दग्निष्टोमं पूर्वं प्रयुञ्जीरन्बहिर्धा कनीनिके दध्युस्तस्मादतिरात्रः पूर्वः
प्र युज्यते चक्षुषी एव यज्ञे धित्वा मध्यतः कनीनिके प्रति दधाति ।

என்பது

உரை

சோமயாகங்கள் அக்கினிஷ்டோமத்தை முதலாவதாகக் கொண்டவைகள்; அதைவிட்டு, துவாதசநாள் யாகத்தில் அதிராத்திரம் முதலில் கொள்ளப்படுதற்குக் காரணம்யாது? என்று பிரமவாதிகள் வினவுகின்றனர். அவ்வினவிற்கு, ஒருமனிதன் போன்ற துவாதசநாள் யாகத்திற்கு, அதிராத்திரிகளிரண்டும் கண்கள். கோளகங்களைப்போன்ற அக்கினிஷ்டோமங்கள் கண்களின் கருவிழிகள் எனப்படும். இவ்வாறாகும்போது, எசமானன் முதலில் அக்கினிஷ்டோமத்தை எடுத்துக்கொள்ளில் அதற்கு இடமான கோளகங்கள் இன்றெனின்கருவிழிகளை எங்கு வைக்கலாம்? ஆதலின் ஆகாரமாகிய அதிராத்திரமே முதல்நாளிற் செய்தல்வேண்டும். 'செய்யில்' துவாதசாஹம் மனிதனுக்கு கண்ணின்கோளகங்களை முதலில் வைத்துவிட்டு அவற்றின் நடுவில் கருவிழிகளை வைத்ததுபோலாகும் என்று விடைகூறுகின்றனர் என்பது.

---

இனி, அதற்குப்பின்வரும் பத்துநாளையும் பறவைவடிவாகக் கற்பித்து விதிக்கின்றது

பிராமணம் 3

यो वै गायत्रीं ज्योतिःपक्षां वेद ज्योतिषा भासा सुवर्गलोकमेति यावग्नि-
ष्टोमौ तौ पक्षौ येऽन्तरेऽष्टावुक्थ्यास्स आत्मैषा वै गायत्री ज्योतिःपक्षा
य एवं वेद ज्योतिषा भासा सुवर्गं लोकमेति

என்பது.

துவாதசராத்திரம்)

உரை

எட்டு உக்தியங்களான எட்டு நாள்களையுங் காயத்திரியாகிய பறவை என்பது, அப்பறவைக்கு சோதிகள் சிறகுகள் என்று உணர்ந்து செய்யும் எஜமானனுக்கு அச்சோதியே சுவர்க்க மார்க்கத்தை விளக்கும் விளக்காகின்றது என்பதாம். அதனால் அவன் சுவர்கத்தை யடைகின்றான். அப்பறவை வடிவமும், சிறகுகளும் யாவையெனின்? பன்னிருநாளில், பிராயணீய உதயனீயமிரண்டையும் விட்டு விடில் இடையிலுள்ளது பத்துநாளாம். அவற்றினும், முதலினும் கடையினுஞ் செய்யும் அக்கினிஷ்டோமங்கள் சிறகுகள் அதற்கிடையில் எட்டு நாள் உக்தியங்களும் காயத்திரியாகிய பறவை வடிவாம். இவ்வாறு பத்துநாளுஞ் செய்தல்வேண்டும் என்பதாம்.

---

சத்திரம், அஹீனம் எனப்படும் இருவகைத் துவாதசராத்திரத்தில் சத்திரத்தை விதித்தற் பொருட்டு முன்னுரை கூறுகின்றது,

பிராமணம் 4

प्रजापतिर्वा एष द्वादशधा विहितो यद्द्वादशरात्रो यावतिरात्रौ तौ पक्षौ येऽन्तरेऽष्टावुक्थ्यास्स आत्मा प्रजापतिर्वावैष सन्त्सद्ध वै सत्रेण स्पृणोति प्राणा वै सत्प्राणानेव स्पृणोति ।

என்பது

உரை

பன்னிரண்டு விதங்களாக எழுந்தது பிரசாபதியே யாகும். அப்பிரசாபதியை ஒரு பறவையாகக் கற்பிக்கின்றதாம். முன் சிறகுகளாகக் கூறிய அக்கினிஷ்டோமங்கட்கு அருகிலுள்ள பிராயணீய உதயனீய மென்னும் அதிராத்திரங்களும் சிறகுகளின் நுனிகள் போன்றவைகளா மாதலின், பிரசாபதியாகிய பறவைக்கு அவ்விரண்டுஞ் சிறகுகளாகின்றன முற்கூறிய எட்டுநாள் உக்தியங்களும் பறவையின்வடிவமாம். இவ்வாறு பன்னிரண்டு விதங்களாகின்றன. பிரசாபதி, தனது சத்திரரூபப் பிரயோகத்தால், சத், என்பதன் பொருளான பிரசைகளின் பிராணன்களைக் களிப்படையச் செய்கின்றான் என்பது.

---

எடுத்துக்கொண்ட சத்திரரூபத்தை விதிக்கின்றது.

பிராமணம் 5

सर्वासां वा एते प्रजानां प्राणैरासते ये सत्रमासते तस्मात्पृच्छन्ति किमेते सत्रिण इति ।

என்பது.

உரை

துவாதசதினமாகிய சத்திரத்தை அநுட்டிக்கின்றவன், எல்லாப் பிரசைகளின் பிராணன்களானது என்னு நிமித்தத்தால் அதை அநுட்டிக்கின்றான். அதாவது இதனால், உலகநிர்வாகப் பிராணன்கள் பிரியமடைகின்றன என்பதாம். சத்திரயாகம் எல்லாப் பிராணிகளின் பிராணன்களுக்கு பிரியகாரணமாயிருத்தலால் அனைவரும் அன்போடு சத்திரயாகத்தையநுட்டிக்கின்றவர்கள் யாவர்? என்று வினவுகின்றனர். இதனால் இது பெருமையுடையது என்பது.

---

இதையுணர்ந்தவனைப் புகழ்கின்றது

பிராமணம் 6

**प्रियः प्रजानामुत्थितो भवति य एवं वेद ।**

என்பது

உரை

இவ்வாறு சத்திரயாகத்தையுணர்ந்தவன் எல்லாப் பிராணிகட்கும் பிரியனாய் உலகில் சிறந்தவனாயிருப்பன் என்பது

ஒன்பதாமநுவாகம்

முற்றிற்று

---

**ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்**

பத்தாம் அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்குமேல் நான்கு பதங்களைக் கொண்டது

பன்னிரண்டாவது நாளை விதிக்கும்பிராமணங்கள்

न वा एषोऽन्यतोवैश्वानरात्सुवर्गाय लोकाय प्राभवदूर्ध्वो ह वा एष आतत आसीत्ते देवा एतं वैश्वानरं पर्यौहन्त्सुवर्गस्य लोकस्य प्रभूत्या ऋतवो वा एतेन प्रजापतिमयाजयन्तेष्वार्ध्नोदधि तदृध्नोति ह वा ऋत्विक्षु य एवं विद्वान्द्वादशाहेन यजते तेऽस्मिन्नैच्छन्त स रसमह वसन्ताय प्रायच्छन् ॥ ३७ ॥ यवं ग्रीष्मायौषधीर्वर्षाभ्यो

व्रीहीञ्छरदे माषतिलौ हेमन्तशिशिराभ्यां तेनेन्द्रं प्रजापतिरयाजयत्ततो वा इन्द्र इन्द्रोऽभवत्तस्मादाहुरानुजावरस्य यज्ञ इति स ह्येतेनाग्रेऽयजतैष ह वै कुणपमत्ति यस्सत्रे प्रतिगृह्णाति पुरुषकुणपमश्वकुणपं गौर्वा अन्नं येन पात्रेणान्नं बिभ्रति यत्तन्न निर्णेनिजति ततोऽधि ॥ ३८ ॥ सर्वं जायत एक एव यजेतैको हि प्रजापतिराध्नोद्द्वादश रात्रीर्दीक्षितस्स्याद्द्वादश मासास्संवत्सरस्संवत्सरः प्रजापतिः प्रजापतिर्वावैष एष ह त्वै जायते यस्तपसोऽधि जायते चतुर्धा वा एतास्तिस्रस्तिस्रो रात्रयो यद्द्वादशोपसदो याः प्रथमा यज्ञं ताभिः सं भरति या द्वितीया यज्ञं ताभिरा रभते ॥ ३९ ॥ यास्तृतीयाः पात्राणि ताभिर्निर्णेनिक्ते याश्चतुर्थीरपि ताभिरात्मानमन्तरतश्शुन्धते यो वा अस्य पशुमत्ति मा॰सꣳ सोऽत्ति यः पुरोडाशं मस्तिष्कꣳ स यः परिवापं पुरीषꣳ स य आज्यं मज्जानꣳ स यस्सोमꣳ स्वेदꣳ सोऽपि ह वा अस्य शीर्षण्या निष्पदः प्रति गृह्णाति यो द्वादशाहे प्रतिगृह्णाति तस्माद्द्वादशाहेन न याज्यं पाप्मनो व्यावृत्त्यै ॥ ४० ॥ अयच्छदधि रभते द्वादशाहेन चत्वारि च । ॥ १० ॥

*இதில், பன்னிருநாள் விதிக்கப்படுகின்றன.*

*அதன்விதி*

பிராமணம் 1

न वा एषोऽन्यतोवैश्वानरस्सुवर्गाय लोकाय प्राभवदूर्ध्वो ह वा एष आतत आसीत्ते देवा एतं वैश्वानरं पर्यौहन्त्सुवर्गस्य लोकस्य प्रभूत्यै ।

உரை

வைசுவாநரம் என்னும் அக்கினியால் காணப் பெற்றதால் அதிராத்திரம் வைசுவானரம் எனப்படும். அது, ஓரேபாகத்தில் வைசுவனரம் எனப்படுகின்ற அதிராத்திரத்தை யுடையதாம். துவாதசராத்திரத்தின் முடிவில் அதிராத்திரமாம் முதலில் இல்லை என்பது. இந்தகைய துவாதசதினயாகம் மேல் திக்கை நோக்கி விரிந்திருத்தலின் முடிவை நியமிக்கவே றொன்று மில்லாததால் சுவர்க்கத்தைக் கொடுக்கும் வன்மையற்றதாம். ஆதலின் தேவர்கள், வைசுவாநர அதிராத்திரத்தை நாற்புறமும் முடிவாக வைத்தனர் பிறகு அதிராத்ரத்தால் நியமித்ததால் துவாதசதினம் என்பது பரிமாணத்தால் முடிவு பெற்றமையின் சுவர்க்கத்தைத் தேடவல்லது ஆகின்றது. ஆதலின் இதுவே மேல் அதிராத்திரஞ் செய்தல் வேண்டுமென்னும் விதியாயிற்று என்பது.

---

துவாதசதினம் என்னும் இதற்கு அஹீநரூபம் உண்டென்பதை விதிக்கின்றது.

பிராமணம் 2

ऋतवो वा एतेन प्रजापतिमयाजयन्तेष्वार्ध्नोदधि तदृध्नोति ह वा ऋत्विक्षु य एवं विद्वान्द्वादशाहेन यजते ।

என்பது.

உரை

முன்னொருகால் இருது அபிமானி தேவதைகள் வேள்விச் செயலாளர்களாய், பிரமனை, துவாதசதின மென்னும் வேள்வியைச் செய்யும்படி செய்தனர். பிரமன், துவாதசதினத்தைச் செய்ததால் இருத்துக்களுள் மிகுந்தசம்பத்துடைய வனுயினன். ஆகலின், பிறரும் அதைச் செய்யில் மிகுந்தசம்பத்தை யடைவார்கள் என்பது

ஈண்டு, முன்னர் வேள்வித் தலைவர்கள் பல்லோர்களானதாலும், அநுட்டித்தல் வேண்டுமென்று விதித்ததாலும். சத்ரமிமாம் இங்கே, வேள்வித் தலைவன் ஒருவனுனதாலும் வேட்க என விதித்ததாலும் அஹீனமாம் என்பது.

---

முற்கூறிய துவாதசதினத்தையே புகழ்தற்பொட்டு முற்கூறிய பிரமனுடைய சம்பத்தை விரித்துரைக்கின்றது.

பிராமணம் 3

तेऽस्मिन्नैच्छन्त स रसमह वसन्ताय प्रायच्छद्यवं ग्रीष्मायौषधीर्वर्षाभ्यो व्रीहीञ्छरदे माषतिलौ हेमन्तशिशिराभ्याम् ।

என்பது

உரை

வசந்தகாலமுதலிய இருத்துக்கள் பிரசாபதியின் சம்பத்தில் பாகம் வேண்டுமென விரும்பின. ஆதலின், பிரசாபதி, வசந்தரிதுவிற்கு எல்லா இரசங்களையுங் கொடுத்துவிட்டனன். கோதுமை முதலான தானியங் ஏனைய வேனிற்கால முதலானவைகட்குக் கொடுத்துவிட்டனன். இதுபற்றியே வசந்தத்தில் நல்ல போகப்பொருள்களும், ஏனைய ரிதுக்களில் தானியங்களும் உண்டாகின்றன என்பது.

---

இவ்வாறு உயர்வுக்குக் காரணமாதல் பற்றி துவாதசதினத்தைப் புகழ்ந்துவிட்டு, இனி, தாழ்மையைப் போக்குதற்குக் காரணமாயிருத்தல் பற்றி புகழ்கின்றது,

பிராமணம் 4

तेनेन्द्रं प्रजापतिरयाजयत्ततो वा इन्द्र इन्द्रोऽभवत्तस्मादाहुरानुजावरस्य यज्ञ इति स ह्येतेनाग्रेऽयजत ।

என்பது

உரை

இந்திரன் சிறந்தோனைப் போற்றப்பெற்றிருந்தும் தேவர்கள் அவனை தாழ்மைப்படுத்திவிட்டனர். அதை நீக்குதற்குப் பிரசாபதியை யடைந்து அவனால், துவாதசதினத்தைச் செய்விக்கப்பெற்று மிகுந்த ஐசுவரியமுடைய வனாய் இந்திரனாயினன். ஆதலின், தாழ்த்தப்பட்டவன் இந்தயாகத்தைச் செய்யில் பெரியோனாய் உயர்வையடைகின்றான். ஆதலின் இது, அநுஜாவா யாகம் (தாழ்ந்தவன்யாகம்) எனப்படுகின்றது என்பது.

---

இனி, சத்திரமாகிய துவாதசதினப் பிரயோகத்தில் தட்சிணை கூடாதெனப், பழித்துக் காட்டுகின்றது

பிராமணம் 5

एष ह वै कुणपमत्ति यस्सत्रे प्रतिगृह्णाति पुरुषकुणपमश्वकुणपं गौर्वा अन्नं येन पात्रेणान्नं बिभ्रति यत्तन्न निर्णेनिजति ततोऽधि मलं जायते ।

என்பது

உரை

சத்திரயாகத்தில் தம்முன் எசமானன் வேள்விச்செயலாளர்கள் என்னும் வழக்கு இருப்பினும் தட்சிணைவாங்குதல் இல்லை, தட்சிணைவாங்கில், அவன்

பிணத்தைத் தின்னுவதால் வருங்கேட்டையடைவன். ஈண்டு ஐந்துநகங்களு டைய உடும்பு முதலியன தின்னற்குரியவைகளாதலின் அவற்றின் பிணங் களன்று, மற்றோ, மனிதரின்பிணமாம். இந்தயாகத்தால் உணவருந்தில் அது கோவின்மாமிசத்தை தின்னுவதற்கு ஒப்பாம். தானம் வாங்குகின்றவனைக் குறித்து அவற்றை பாண்டத்தில்வைக்கில் அப்பாண்டம் நால்வழியால் புனிதமாகாது. ஆதலின் அதுஉள்ளவீடு மலமாய் விடுகின்றது என்பது.

---

இவ்வாறு தட்சிணை கூடாதேன்பதால் சத்திரயாகப் பிரயோகத்தை உறுதிப் படுத்திக்கொண்டு எசமானன் ஒருவனுயிருத்தலால் அஹீனப் பிரயோகத்தை வலுப் படுத்துகின்றது,

பிராமணம் 6

**एक एव यजेतैको हि प्रजापतिरार्ध्नोत् ।**

என்பது.

உரை

பிரசாபதி ஒருவனுக்கே சம்பத்துண்டாகின்றது. வேள்வி செய்து வைத்த இருதுக்களுக்கு இல்லை. ஆதலின் ஒருதலைவனானதாலும் பயனை யநுபவித்தலானும் அஹீனமாம் என்பது.

---

இனி, தீட்சையின் விசேடத்தை விதிக்கின்றது

பிராமணம் 7

**द्वादश रात्रीर्दीक्षितस्स्याद्द्वादश मासास्संवत्सरस्संवत्सरः प्रजापतिः प्रजापतिर्वावैष एष ह त्वै जायते यस्तपसोऽधि जायते ।**

என்பது

உரை

பன்னிருமாதம் ஒருவருடமாம். ஒருவருடமோ, பிரமனால்படைக்கப்பட் டது. ஆதலின் பிரமனுடையவடிவமாம். எசமானன், பன்னிரண்டு தீட்சை செய்து கொள்கின்றான் ஆதலின், பிரசாபதிவடிவனாகின்றான். மற்றும் மாதா பிதாக்களிடத்திலிருந்து பிறந்தது முக்கியமானதன்று. மற்றோ, தீட்சையாகிற தவத்தாலுண்டாகிய பிறப்பே எசமானனுக்கு முக்கியமான தாம் என்பது.

---

உபசத் விசேடத்தை விதிக்கின்றது

பிராமணம் 8

चतुर्थो वा एतास्तिस्रस्तिस्रो रात्रयो यद्द्वादशोपसदो याः प्रथमा यज्ञं ताभिस्सं भरति या द्वितीया यज्ञं ताभिरा रभते यास्तृतीयाः पात्राणि ताभिर्निर्णेनिक्ते याश्चतुर्थीरपि ताभिरात्मानमन्तरतश्शुन्धते ।

என்பது

உரை

பன்னிரண்டு நாட்களிலும் அநுட்டிக்கவேண்டிய உபசத்துக்களை நான் காய்ப்பகுக்கில் நான்கு மூன்றாகின்றன. அவற்றுள் முதலாவது நான்கால்எக்ஞ சாதனஞ் சேடப்பெற்றதாகும். இரண்டாவது மூன்றால் எக்ஞந்தொடங்கப் படுகின்றது. மூன்றாவது மூன்றால் எக்ஞபாத்திரங்கள் புநிதப்படுக்தப்படுகின்றன. நான்காவது மூன்றால் ஆன்மாவின் உட்சுத்தியுண்டாகின்றது என்பது.

---

மீண்டும் சத்திரயாகத்தில் உலோபமிகுதியால் தட்சிணை வாங்குதல் கூடுமென அதையும் பழிக்கின்றது.

பிராமணம் 9

यो वा अस्य पशुमत्ति मांसꣳ सोऽत्ति यः पुरोडाशं मस्तिष्कꣳ स यः परिवापं पुरीषꣳ स य आज्यं मज्जानꣳ स यः सोमꣳ स्वेदꣳ सोऽपि ह वा अस्य शीर्षण्या निष्पदः प्रति गृह्णाति यो द्वादशाहे प्रतिगृह्णाति तस्माद्द्वादशाहेन न याज्यं पाप्मनो व्यावृत्त्यै ।

என்பது

உரை

பன்னிருநாள் யாகமாகிற சத்திரத்தில் தட்சிணை வாங்கினவன் சோம யாகஞ் செய்வானேல், அச்சோமயாகத்தில் இருத்துவிக்குக்களாகவந்து அக்கினி ஷோமீய பசு அவிகள்முதலானவற்றின் சேடத்தை எவன் அருந்துகின்றானோ, அவன் மனிதனுடைய மாமிசத்தையருந்தியவனாவன். அதில் புரோடாசசேடத்தை அருந்தியவன் மனிதன் தலையிலுள்ளமாமிசத்தை யருந்தியவனாவன். அதில் பொரியின்சேடத்தை யருந்தியவன் மலத்தை யருந்தியவனாவன். ஆச்ய இடாபாகத்தை யருந்தியவன் கொழுப்பை யருந்தியவனாகின்றான். சோமரசசேடத்தை யருந்தியவன் வேர்வையை யருந்தியவனாகின்றான். மற்றும் அவ்வேள்வித்தலைவன் இறக்கில் தலையிலுள்ள துளைகளால் வெளிப்பட்டு தாழ்ந்தசாதியில் பிறக்கின்றான். இவைகளை அஹீனமாகிய துவாதசராத்திரத்திலும் யூகித்துக் கொள்க. இவ்வாறு அஹீனமாகிய

துவாதசதினத்திலும் தானம்வாங்கல் பழிக்கப்பட்டிருக்கலின் இருத்துவிக்குக்களால் துவாதசதினத்தைப் பண்ணிவைத்தல்கூடாது. செய்துவையாமை பாவிகளை நீக்குகின்றது. அவ்வாறு செய்யிலோ, சாத்திரப்படி பிராயச்சித்தஞ் செய்தல் வேண்டும். ஈண்டு, சத்திரத்தில் தட்சிணையே இல்லை. அஹீனத்தில் தானம் வாங்கில் பிராயச்சித்தஞ் செய்தல் வேண்டும் என்பதைஉணர்க.

பத்தாமநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங்காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## பதினோராவது அநுவாகம்

ஒருபஞ்சாதிக்கு மேல் இருபத்தொரு பதங்களைக் கொண்டது

அசுவமேதத்தில் அன்னஹோம மந்திரங்களைக் கூறும் மந்திரங்கள்

एकस्मै स्वाहा द्वाभ्याꣳ स्वाहा त्रिभ्यः स्वाहा चतुर्भ्यस्स्वाहा पञ्चभ्यः स्वाहा षड्भ्यः स्वाहा सप्तभ्यः स्वाहाऽष्टाभ्यः स्वाहा नवभ्यः स्वाहा दशभ्यः स्वाहैकादशभ्यः स्वाहा द्वादशभ्यः स्वाहा त्रयोदशभ्यः स्वाहा चतुर्दशभ्यः स्वाहा पञ्चदशभ्यः स्वाहा षोडशभ्यः स्वाहा सप्तदशभ्यः स्वाहाऽष्टादशभ्यः स्वाहैकान्न विꣳशत्यै स्वाहा नवविꣳशत्यै स्वाहैकान्न चत्वारिꣳशते स्वाहा नवचत्वारिꣳशते स्वाहैकान्न षष्ट्यै स्वाहा नवषष्ट्यै स्वाहैकान्नाशीत्यै स्वाहा नवाशीत्यै स्वाहैकान्न शताय स्वाहा शताय स्वाहा द्वाभ्याꣳ शताभ्याꣳ स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४१ ॥ नवचत्वारिꣳशते स्वाहैकान्नैकविꣳशतिश्च । ॥ ११ ॥

இது முதற்கொண்டு எஞ்சிய பத்தநுவாகங்களிலும் அசுவமேதமந்திரங்கள் கூறப்படுகின்றன.

அசுவமேதம்)

ஒற்றைப்படும் ஆகுதிமந்திரங்கள் இரட்டைப்படும் ஆகுதிமந்திரங்கள் என இருவகைப்படும் அவைமேல்வரும். இப்போது இருவகை எண்களுங்கூடிய கூட்டமுடைய அந்த மந்திரத்தைக் கூறுகின்றது.

மந்திரங்கள்

एकस्मै स्वाहा द्वाभ्याꣳ स्वाहा त्रिभ्यः स्वाहा चतुर्भ्यस्स्वाहा पञ्चभ्यः स्वाहा षड्भ्यः स्वाहा सप्तभ्यः स्वाहाऽष्टाभ्यः स्वाहा नवभ्यः स्वाहा दशभ्यः स्वाहैकादशभ्यः स्वाहा द्वादशभ्यः स्वाहा त्रयोदशभ्यः स्वाहा चतुर्दशभ्यः स्वाहा पञ्चदशभ्यः स्वाहा षोडशभ्यः स्वाहा सप्तदशभ्यः स्वाहाऽष्टादशभ्यः स्वाहैकान्न विꣳशत्यै स्वाहा नवविꣳशत्यै स्वाहाहैकान्न चत्वारिꣳशते स्वाहा नवचत्वारिꣳशते स्वाहैकान्न षष्ट्यै स्वाहा नवषष्ट्यै स्वाहैकान्नाशीत्यै स्वाहा नवाशीत्यै स्वाहैकान्न शताय स्वाहा शताय स्वाहा द्वाभ्याꣳ शताभ्याꣳ स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது.

உரை

ஒன்று இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது பத்து, பதினொன்று, பன்னிரண்டு, பதின்மூன்று, பதினான்கு, பதினைந்து, பதினாறு, பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது, இருபது, இருபத்தொன்பது, முப்பத்தொன்பது, நாற்பத்தொன்பது, ஐம்பத்தொன்பது, அறுபத்தொன்பது, எழுபத்தொன்பது, எண்பத்தொன்பது, தொண்ணூற்றொன்பது, நூறு, இருநூறு என்னும் பிரமனுடைய எல்லாப்பொருள்கட்கும், ஒன்றாகிய பிரமனுக்கும் இவைகள் அருப்பணமாகுக. மற்றும், எல்லாப்பொருள்கட்கும் இது அர்ப்பணமாகுக. என்று முப்பது அன்ன ஆகுதிகளைச் நெய் ஆகுதிகளையுஞ் செய்தல்வேண்டும் என்பது

பதினோராமநுவாகம்
முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## பன்னிரண்டாமநுவாகம்

*ஒருபஞ்சாதியைக் கொண்டது*

அன்னஹோம மந்திரங்களைக் கூறும் மந்திரங்கள்

एकस्मै स्वाहा त्रिभ्यः स्वाहा पञ्चभ्यः स्वाहा सप्तभ्यः स्वाहा नवभ्यः स्वाहैकादशभ्यः स्वाहा त्रयोदशभ्यः स्वाहा पञ्चदशभ्यः

स्वाहा॑ सप्तदशभ्यः स्वाहै॑कान्न वि॑ꣳशत्यै स्वाहा नव॑विꣳशत्यै स्वाहै॑कान्न च॑त्वारिꣳशते स्वाहा नव॑चत्वारिꣳशते स्वाहै॑कान्न षष्ट्यै स्वाहा नव॑षष्ट्यै स्वाहै॑कान्नाशीत्यै स्वाहा नवा॑शीत्यै स्वाहै॑कान्न शताय स्वाहा॑ शताय स्वाहा सर्व॑स्मै स्वाहा॑ ॥४२॥ एक॑स्मै त्रिभ्यः प॑ञ्चाशत् । ॥ १२ ॥

ஒன்றிலிருந்து ஒற்றைப்படும் எண் கூட்டம் இதில் கூறப்படுகின்றது.

மந்திரங்கள்

एकस्मै स्वाहा त्रिभ्यः स्वाहा पञ्चभ्यः स्वाहा सप्तभ्यः स्वाहा नवभ्यः स्वाहैकादशभ्यः स्वाहा त्रयोदशभ्यः स्वाहा पञ्चदशभ्यः स्वाहा सप्तदशभ्यः स्वाहैकान्न विꣳशत्यै स्वाहा नवविꣳशत्यै स्वाहैकान्न चत्वारिꣳशते स्वाहा नवचत्वारिꣳशते स्वाहैकान्न षष्ट्यै स्वाहा नवषष्ट्यै स्वाहैकान्नाशीत्यै स्वाहा नवाशीत्यै स्वाहैकान्न शताय स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது

உரை

ஒன்று, மூன்று, ஐந்து, ஏழு ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதினைந்து, பதினேழு, பத்தொன்பது, இருபத்தொன்பது, முப்பத்தொன்பது, நாற்பத்தொன்பது, ஐம்பத்தொன்பது, அறுபத்தொன்பது, எழுபத்தொன்பது, எண்பத்தொன்பது, தொண்ணூற்றொன்பது, நூறு என்னும் பொருள்களுக்கு இவை அருப்பணமாகுக. முன் அநுவாகத்திற்கூறியதே மீண்டுங்கூறப்படுகின்றதென்பது இல்லை, கூறியபடி அநுட்டிக்கவேண்டியதாமாதலின் என்க. மற்றும், இவைகள், எண்ணிறந்த பிரமனுடைய அவயவங்களுள் சிலவற்றைக் கற்பித்துக்கொள்ளுகின்றன. என்னு இவ்வெண்களால் இருபது நெய் ஆகுதிகள் செய்தல் வேண்டுமென்பதாம்.

பன்னிரண்டாமநுவாகம்

முற்றிற்று.

ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

பதின்மூன்றுவது அநுவாகம்

இருபத்தாறு பதங்களைக் கொண்டது.

அன்னஹோம மந்திரங்கள்

द्वाभ्याᳺ स्वाहा चतुर्भ्यः स्वाहा षड्भ्यः स्वाहाऽष्टाभ्यः स्वाहा दशभ्यः स्वाहा द्वादशभ्यः स्वाहा चतुर्दशभ्यः स्वाहा षोडशभ्यः स्वाहाऽष्टादशभ्यः स्वाहा विᳺशत्यै स्वाहाऽष्टानवत्यै स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४३ ॥ द्वाभ्यामष्टानवत्यै षड्विᳺशतिः । ॥ १३ ॥

இதில் இரட்டைப்படும் எண் கூட்டங் கூறப்படுகின்றது.

மந்திரங்கள்

द्वाभ्याᳺ स्वाहा चतुर्भ्यः स्वाहा षड्भ्यः स्वाहाऽष्टाभ्यः स्वाहा दशभ्यः स्वाहा द्वादशभ्यः स्वाहा चतुर्दशभ्यः स्वाहा षोडशभ्यः स्वाहाऽष्टादशभ्यः स्वाहा विᳺशत्यै स्वाहाऽष्टानवत्यै स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது

உரை

இரண்டு, நான்கு, ஆறு, எட்டு, பத்து, பன்னிரண்டு, பதினான்கு, பதினாறு, பதினெட்டு, இருபது, தொண்ணூற்றெட்டு, நூறு என்னுமிவை கட்கு அருப்பணங்களாகுக. இவைகளால் பதின்மூன்று அன்ன ஆகுதிகள் செய்தல் வேண்டும் என்பதாம்.

பதின்மூன்றுமநுவாகம்

முற்றிற்று.

## ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### பதினான்காவது அநுவாகம்

நாற்பத்தெட்டுப் பதங்களைக்கொண்டது

அன்னஹோம மந்திரங்கள்.

त्रिभ्यः स्वाहा पञ्चभ्यः स्वाहा सप्तभ्यः स्वाहा नवभ्यः स्वाहैकादशभ्यः स्वाहा त्रयोदशभ्यः स्वाहा पञ्चदशभ्यः स्वाहा सप्तदशभ्यः स्वाहैकान्न विंशत्यै स्वाहा नवविंशत्यै स्वाहैकान्न चत्वारिंशते स्वाहा नवचत्वारिंशते स्वाहैकान्न षष्ट्यै स्वाहा नवषष्ट्यै स्वाहैकान्नाशीत्यै स्वाहा नवाशीत्यै स्वाहैकान्नशताय स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४४ ॥ त्रिभ्योऽष्टाचत्वारिंशत् ॥
॥ १४ ॥

இதில், மூன்றிலிருந்து மாறுபட்ட எண்களின் கூட்டங் கூறப்படுகின்றது.

மந்திரங்கள்

त्रिभ्यः स्वाहा पञ्चभ्यः स्वाहा सप्तभ्यः स्वाहा नवभ्यः स्वाहैकादशभ्यः स्वाहा त्रयोदशभ्यः स्वाहा पञ्चदशभ्यः स्वाहा सप्तदशभ्यः स्वाहैकान्न विंशत्यै स्वाहा नवविंशत्यै स्वाहैकान्न चत्वारिंशते स्वाहा नवचत्वारिंशते स्वाहैकान्न षष्ट्यै स्वाहा नवषष्ट्यै स्वाहैकान्नाशीत्यै स्वाहा नवाशीत्यै स्वाहैकान्न शताय स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது

உரை

மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதினைந்து, பதினேழு, பத்தொன்பது, இருபத்தொன்பது, முப்பத்தொன்பது, நாற்பத்தொன்பது, ஐம்பத்தொன்பது, அறுபத்தொன்பது, எழுபத்தொன்பது, எண்பத்தொன்பது, தொண்ணூற்றொன்பது, நூறு என்னுமிவைகட்கு அருப்

பணங்களாகுக, என்னுமிவைகளால் பத்தொன்பது நெய் ஆகுதிகள் செய்தல் வேண்டும் என்பது.

பதினான்காமநுவாகம்

முற்றிற்று.

---

ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

பதினைந்தாவது அநுவாகம்

பதினாறு பதங்களைக்கொண்டது

அன்னஹோம மந்திரங்கள்

चतुर्भ्यः स्वाहाऽष्टाभ्यः स्वाहा द्वादशभ्यः स्वाहा षोडशभ्यः स्वाहा विꣳशत्यै स्वाहा षण्णवत्यै स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४५ ॥ चतुर्भ्यः षण्णवत्यै षोश । ॥ १५ ॥

மந்திரங்கள்

चतुर्भ्य :स्वाहाऽष्टाभ्यः स्वाहा द्वादशभ्यः स्वाहा षोडशभ्यः स्वाहा विꣳशत्यै स्वाहा षण्णवत्यै स्वाहा शताय स्वाहा सर्व स्मै स्वाहा ।

என்பது.

உரை.

நான்கு, எட்டு, பன்னிரண்டு, பதினாறு, இருபது, தொண்ணூற்றாறு, நூறு, மற்றும் எல்லாம் என்னுமிவைகட்கு இவை அருப்பணமாகுக. இம் மந்திரங்களால் எட்டு அன்ன ஆகுதிசெய்தல் வேண்டுமென்பதாம்.

பதினைந்தாமநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

### பதினாறுவது அநுவாகம்

பதினான்கு பதங்களைக்கொண்டது

அன்னஹோம மந்திரங்கள்

पञ्चभ्यः स्वाहा दशभ्यः स्वाहा पञ्चदशभ्यः स्वाहा विꣳशत्यै स्वाहा पञ्चनवत्यै स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४६ ॥

पञ्चभ्यः पञ्चनवत्यै चतुर्दश । ॥ १६ ॥

இதில், ஐந்து முதற்கொண்டு ஐந்திற்குமேல் ஒத்ததும் மாறுபட்டதுமான எண்களின்கூட்டங் கூறப்படுகின்றன

மந்திரங்கள்

पञ्चभ्यः स्वाहा दशभ्यः स्वाहा पञ्चदशभ्यः स्वाहा विꣳशत्यै स्वाहा पञ्च-नवत्यै स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது

உரை

ஐந்து, பத்து பதினைந்து, இருபது தொண்ணூற்றைந்து, நூறு, மற்றும் எல்லாம் என்னுமிவைகட்கு அருப்பணமாகுக. என்னுமிவைகளால் ஏழு நெய் ஆகுதிகள் செய்தல்வேண்டும் என்பதாம்.

பதினாறுமநுவாகம்

முற்றிற்று.

---

### பதினேழாவது அநுவாகம்

இருபத்திரண்டு பதங்களைக்கொண்டது

அன்னஹோம மந்திரங்கள்

दशभ्यः स्वाहा विꣳशत्यै स्वाहा त्रिꣳशते स्वाहा चत्वारिꣳ-शते स्वाहा पञ्चाशते स्वाहा षष्ट्यै स्वाहा सप्तत्यै स्वाहाऽशीत्यै

स्वाहा नवत्यै स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४७ ॥ दश-
भ्यो द्वाविंशतिः । ॥ १७ ॥

இதில், பத்திலிருந்து மேன்மேலும் பத்துக்கொண்ட எண் கூறப்படுகின்றது

மந்திரங்கள்

दशभ्यः स्वाहा विंशत्यै स्वाहा त्रिंशते स्वाहा चत्वारिंशते स्वाहा पञ्चाशते स्वाहा षष्ट्यै स्वाहा सप्तत्यै स्वाहाऽशीत्यै स्वाहा नवत्यै स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது.

உரை

பத்து, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது, தொண்ணூறு, நூறு, மற்றும் எல்லாம் என்னுமிவைகட்கு அருப்பண மாகுக, என்னும் இம்மந்திரங்களால் பதினொரு அன்ன ஆகுதிகள் செய்தல் வேண்டும் என்பதாம்.

பதினேழாமநுவாகம்
முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## பதினெட்டாவது அநுவாகம்

*பன்னிரண்டு பதங்களைக் கொண்டது*

அன்னஹோம மந்திரங்கள்

विंशत्यै स्वाहा चत्वारिंशते स्वाहा षष्ट्यै स्वाहाऽशीत्यै स्वा-
हा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४८ ॥ विंशत्यै द्वादश ।
॥ १८ ॥

இதில், இருபதிலிருந்து மேன்மேலும் இருபதுகொண்டு வரும் எண்களின் கூட்டங் கூறப்படுகின்றது

மந்திரங்கள்

विंशत्यै स्वाहा चत्वारिंशते स्वाहा षष्ट्यै स्वाहाऽशीत्यै स्वाहा शताय स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது.

உரை

இருபது, நாற்பது, அறுபது, எண்பது, நூறு, மற்றும் எல்லாம் என்னு மிவைகட்கு அருப்பணமாகுக. இம் மந்திரங்களால் ஆறு அன்ன ஆகுதிகள் செய்தல் வேண்டும் என்பதாம்.

பதினெட்டாமநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் இரண்டாம் பிரபாடகம்

## பத்தொன்பதாமநுவாகம்

முப்பத்திரண்டு பதங்களைக்கொண்டது

அன்னஹோம மந்திரங்கள்

पञ्चाशते स्वाहा शताय स्वाहा द्वाभ्याᳪ शताभ्याᳪ स्वाहा त्रिभ्यः शतेभ्यः स्वाहा चतुर्भ्यः शतेभ्यः स्वाहा पञ्चभ्यः शतेभ्यः स्वाहा षड्भ्यः शतेभ्यः स्वाहा सप्तभ्यश्शतेभ्यः स्वाहाऽष्टाभ्यः शतेभ्यः स्वाहा नवभ्यः शतेभ्यः स्वाहा सहस्राय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४९ ॥ पञ्चाशते द्वात्रिंशत् । ॥ १९ ॥

இதில், ஐம்பதிலிருந்து மேன்மேலும் ஐம்பது கொண்டு வரும் நூற்றிற்குமேம் பட்ட நூறுகொண்ட எண்கூறப்படுகின்றது

மந்திரங்கள்

पञ्चाशते स्वाहा शताय स्वाहा द्वाभ्याᳪ शताभ्याᳪ स्वाहा त्रिभ्यः शतेभ्यः स्वाहा चतुर्भ्यः शतेभ्यः स्वाहा पञ्चभ्यः शतेभ्यः स्वाहा षड्भ्यः शतेभ्यः स्वाहा सप्तभ्यः शतेभ्यः स्वाहाऽष्टाभ्यः शतेभ्यः स्वाहा नवभ्यः शतेभ्यः स्वाहा सहस्राय स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது

உரை

ஐம்பது, நூறு, இருநூறு, முன்னூறு, நானூறு, ஐநூறு, அறுநூறு, எழுநூறு, எண்ணூறு, தொளாயிரம், ஆயிரம், மற்றும் எல்லாம் என்னு மிவைகட்கு அர்ப்பணமாகுக. இம்மந்திரங்களால் பன்னிரண்டு அன்ன ஆகுதி கள் செய்தல் வேண்டும் என்பதாம்.

பத்தொன்பதாமநுவாகம்
முற்றிற்று.

---

## இருபதாமநுவாகம்

முப்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

அன்னஹோம மந்திரங்கள்

शताय स्वाहा सहस्राय स्वाहाऽयुताय स्वाहा नियुताय स्वाहा प्रयुताय स्वाहाऽर्बुदाय स्वाहा न्यर्बुदाय स्वाहा समुद्राय स्वाहा मध्याय स्वाहाऽन्ताय स्वाहा परार्धाय स्वाहोषसे स्वाहा व्युष्टयै स्वाहोदेष्यते स्वाहोद्यते स्वाहोदिताय स्वाहा सुवर्गाय स्वाहा लोकाय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ५० ॥ शतायाष्टात्रिंशत् ।
॥ २० ॥

இப்பிரபாடகத்தின் அநுவாகங்களின் எண்களைக் காட்டுந் தலைப்புச் சொற்கள் :—

साध्याः षड्रात्रं कुसुरुबिन्दः सप्तरात्रं बृहस्पतिरष्टरात्रं प्रजापतिः क्षुधंनवरात्रं प्रजापतिर्दश होतारमृतवं ऐन्द्रवायवाग्रान्गायत्रीवै प्रजापतिः सद्वादशरात्रं नवा एकस्मा एकस्मैद्वाभ्यां त्रिभ्यश्चतुर्भ्यः पञ्चभ्यो दशभ्यो विंशत्यै पञ्चाशते शताय विंशतिः ॥ २० ॥

பஞ்சாதிகளின் எண்களைக்காட்டுந்தலைப்புச் சொற்கள் :—

साध्या अस्मा इमे लोका गायत्रं वै तृतीयमेकस्मै पञ्चाशत्

॥ ५० ॥

இவ்விருபதாமநுவாகத்தில், நூறுமுதற்கொண்டு பத்துப்பேருக்கைக் கொண்ட எண்களின் கூட்டம் கூறப்படுகின்றது

மந்திரங்கள்

शताय स्वाहा सहस्राय स्वाहाऽयुताय स्वाहा नियुताय स्वाहा प्रयुताय स्वाहाऽर्बुदाय स्वाहा न्यर्बुदाय स्वाहा समुद्राय स्वाहा मध्याय स्वाहाऽन्ताय स्वाहा परार्धाय स्वाहोषसे स्वाहा व्युष्ट्यै स्वाहोदेष्यते स्वाहोद्यते स्वाहोदिताय स्वाहा सुवर्गाय स्वाहा लोकाय स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது

உரை

நூறு, ஆயிரம், பதினாயிரம், (அயுதம்,) நூறாயிரம், (நியுதம் = லட்சம்) பத்து லட்சம், (பிரயுதம்) நூறுலட்சம், (அற்புதம்) கோடி, ஆயிரம்லட்சம், (நியர்ப்புதம், (பத்துக்கோடி) நூறுகோடி, (சமுத்திரம்) மத்தியம், (ஆயிரங்கோடி) அந்தம், (பதினாயிரங்கோடி) பரார்த்தம், (நூறாயிரங்கோடி) உஷாக்காலம், சிறிதுவிடியற்காலம், விடியற்காலம், சூரியஉதயத்திற்குமுன்காலம், சூரியஉதயகாலம், சூரிய உதயத்திற்குப் பிந்தியகாலம், விண்ணுலகம், விளக்கமுடைய பூதமுதலியவைகள், மற்றும் எல்லாவற்றிற்கும் இவைகள் அர்ப்பணங்களாகுக. என்னும் இம்மந்திரங்களாலும் ஆகுதிகள்செய்தல்வேண்டும் மென்பதாம்.

இருபதாமநுவாகம்

முற்றிற்று

ஏழாங்காண்டத்தில் இரண்டாம் பிரபாடகம் முடிந்தது.

---

மூன்றாம் பிரபாடக விடயச் சுருக்கம்.

अविवाक्यं तृतीयाद्ये द्वितीयेक्रतु संस्तवः ।
यस्त्रयोदशरात्रोऽसौ तृतीयेऽथचतुर्थके ॥ १ ॥
स्याच्चतुर्दशरात्रोऽथ पञ्चमेऽन्यश्चतादृशः ।

षष्ठसप्तमयोः स्यातांद्वा पञ्चदशरात्रकौ ॥ २ ॥

यः सप्तदशरात्रोऽय मष्टमेनवमेपुनः ।

भवेद्विंशतिरात्रोऽथदशमे समुदीरिताः ॥ ३ ॥

एकविंशतिरात्रोऽथ मन्त्रास्सर्वेऽश्वमेधकाः ।

अर्वाङ्ष्टावाप्तिमन्त्रा भूतंपर्याप्तयोनव ॥ ४ ॥

आभूमन्त्रास्त्रयोह्या मे ह्यनुभूमन्त्रकापुनः ।

चतुर्विंशति संख्यास्युरग्निनेत्येवमादयः ॥ ५ ॥

दीक्षाहोममन्त्रास्तु स्वाहा द्वाविंशतिर्मताः ।

ददूभ्योऽङ्गमन्त्राः पञ्चाशदन्ज्येषड्विंशतिस्तथा ॥ ६ ॥

कृष्णा त्रयोविंशतिः स्युर्मिलित्वा रूपमन्त्रकाः ।

द्वादशौषधिमन्त्राः स्युस्त्रयोविंशतिरीरिताः ॥ ७ ॥

वनस्पतिभ्यो वृक्षाख्यमन्त्रा उक्ताः प्रपाठके ।

இம்மூன்றும்பிரபாடக முதலநுவாகததில் அவிவாக்கியமும், இரண்டாவதில் துவாதசாஹத்தின் துதியும், மூன்றுவதில் திரயோதசராத்திரமும், நான்காவதில் சதுர்த்தசராத்திரமும், ஐந்தாவதில் மற்றொரு சதுர்த்தசராத்திரமும், ஆறுவதிலும் ஏழாவதிலும பஞ்சதசராத்திரங்களும், எட்டாவதில் ஸப்ததசராத்திரமும், ஒன்பதாவதில் விம்சதிராத்திரமும், பத்தாவதில் ஏகவிம்சதிராத்ரமும், பதினொன்றுவதிலிருந்து பிரபாடகம் முடியும்வரை அசுவமேதத்தைப் பற்றிய ஹோம மந்திரங்களுங் கூறப்படுகின்றன. அவற்றுள் பதினொன்றுவதில் ஆப்தி என்னும் ஹோமமந்திரங்களும், பன்னிரண்டாவதில் பர்யாப்த்தி என்னும் மந்திரங்களும், பதின்மூன்றுவதில் ஆபூ:, என்னும் மந்திரங்களும், பதினான்காவதில் அநுபூ:, என்னும் மந்திரங்களும, பதினைந்தாவதில் வைசுவதேவ ஹோமங்களும், பதினாறுவதில் அங்கஹோமங்களும் பதினேழாவது பதினெட்டாவதுகளில் அசுவரூப ஹோமங்களும், பத்தொன்பதாவதில் ஓஷதி ஹோமங்களும், இருபதாவதில் வனஸ்பதி ஹோமமுங் கூறப்படுகின்றன என்பது. அவிவாக்கியம் = மறப்பிலாமற் செய்தல்.

## ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

### முதலாவது அநுவாகம்

*நான்கு பஞ்சாதிகட்குமேல் ஒருபதத்தைக் கொண்டது.*

இதில், முற்கூறிய துவாதசாஹ சேடமாக பத்தாநாளில் சில விசேடங்களைக் கூறுகின்ற பிராமணங்கள்.

प्रजवं वा एतेन यन्ति यद्दशममहः पापावहीयं वा एतेन भवन्ति यद्दशममहर्यो वै प्रजवं यतामपथेन प्रतिपद्यते यः स्थाणु२ हन्ति यो भ्रेषं न्येति स हीयते स यो वै दशमेहन्नविवाक्य उपहन्यते स हीयते तस्मै य उपहताय व्याह तमेवान्वारभ्य समश्नुतेऽथ यो व्याह सः ॥ १ ॥ हीयते तस्माद्दशमेऽहन्नविवाक्य उपहताय न व्युच्यमथो खल्वाहुर्यज्ञस्य वै समृद्धेन देवाः सुवर्गं लोकमायन्यज्ञस्य व्यृद्धेनासुरान्पराऽभावयन्निति यत्खलु वै यज्ञस्य समृद्धं तद्यजमानस्य यद्व्यृद्धं तद्भ्रातृव्यस्य स यो वै दशमेऽहन्नविवाक्य उपहन्यते स एवार्ति रेच्छति ते ये बाह्या दृशीकवः ॥ २ ॥ स्युस्ते वि ब्रूयुर्यदि तत्र न विन्देयुरन्तः सदसाद्व्युच्यं यदि तत्र न विन्देयुर्गृहपतिना व्युच्यं तद्व्युच्यमेवाथ वा एतत्सर्पराज्ञिया ऋग्भिः स्तुवन्तीयं वै सर्पतो राज्ञी यद्वा अस्यां किं चार्चन्ति यदानृचुस्तेनेय२ सर्पराज्ञी ते यदेव किं च वाचाऽऽनृचुर्यदतोऽध्यर्चितारः ॥ ३ ॥ तदुभयमाप्त्वाऽवरुध्योत्तिष्ठामेति ताभिर्मनसा स्तुवते न वा इमामश्वरथो नाश्वतरीरथः सद्यः पर्याप्तुमर्हति मनो वा इमा२ सद्यः पर्याप्तुमर्हति मनः परिभवितुमथ ब्रह्म वदन्ति परि-

मिता वा ऋचः परिमितानि सामानि परिमितानि यजूꣳष्यथैत-
स्यैवान्तो नास्ति यद्ब्रह्म तत्प्रतिगृणत आ चक्षीत स प्रतिगरः
॥ ४ ॥ व्याह स दशीकयोऽर्चितारः स एकं च । ॥ १ ॥

மறதியால் நினைப்பற்றசில அங்கத்தை நினைப்பூட்டுவதற்கு பிறருடைய வாக்கியங் கூடாதெனக்கூறுகின்றது,

பிராமணம் 1

**प्रजवं वा एतेन यन्ति यद्दशममहः पापावहीयं वा एतेन भवन्ति यद्दशम-
महर्यो वै प्रजवं यतामपथेन प्रतिपद्यते यः स्थाणुꣳ हन्ति यो भ्रेषं न्येति
स हीयते स यो वै दशमेऽहन्नविवाक्य उपहन्यते स हीयतेतस्मै य उपह-
ताय व्याह तमेवान्वारभ्य समश्नुतेऽथ यो व्याह स हीयते तस्माद्द-
शमेऽहन्नविवाक्य उपहताय न व्युच्यम् ।**

என்பது

உரை

துவாதசராத்திரத்தில் உள்ள பத்தாநாள் பாவத்தைப்போக்குவதாமாதலின் அன்றுமிக வேகமாக அநுட்டானஞ்செய்தல்வேண்டும். அதாவது பிரயாசத்தைப் பொறுத்துக்கொண்டு அநுட்டித்தல் வேண்டும் எனபதாம். அவ்வாறு அநுட்டிக்கும்போது, புலி, கள்வர் முதலியவைகளின் பயத்தால் காட்டில் மிகவேகமாய்ச் செல்கின்றவர்களுள், ஒருவன் தன்னை அறிவாளியென்று எண்ணிக்கொண்டு பெரியவழியைவிட்டு விட்டுச் சிறியதோர்வழி சென்று மற்றையோர்களுக்கு முன்வந்துவிடல் வேண்டுமென்று மிக வேகமாய்ப்போய் எதுவோ ஒருவழியிற் போய்க்கொண்டிருக்கின்றவனும், மற்றொருவன் நேராகவேசென்று வழியிலுள்ளகட்டையில் காலடிபட்டுக் கொள்ளுகின்றவனும், இன்னுமொருவன், முள் வழியிற்போய் பிணிவாய்ப்பட்டு செல்ல முடியாமற்போகின்றவனும் என்னும் இம்மூவரும் பாதுகாப்பிற்குரிய வழிநடப்போர்களுடைய உதவியை இழந்து விடுகின்றார்கள். இவ்வாறே பத்தாநாள் அங்காநுட்டானத்தை மறந்தவனும் இருத்துவிக்குக்களின் கூட்டத்தை இழந்துவிடுகின்றான். ஏனெனில்? ஏனையயாகங்களில் மறந்துவிடில் பிறர் அறிவித்தல்கூடும், இதிலோ மறந்த அங்கத்தை பிறன் தெரிந்திருக்கினுஞ் சொல்லுதல்கூடாது. மற்றும், மறந்தவனுக்குமற்றொரு இருத்துவிக்கு நீ இதை மறந்துவிட்டனை, என்று

கூறில், அவ் வங்கா நுட்டானம் அவ்வாறு கூறியவனைப் பற்றிநடப்பதால் அவன் அநுட்டானத்தில் வல்லுநனுகின்றான். மற்றும், அவ்வாறு சொல்லியவன் இவ்வாறு ஆராய்ச்சி செய்ததாகிய குற்றத்தால் ஏனைய இருத்துவிக்குக் களிலிருந்து விடுபட்டுப்போகின்றான். மறதியைச்சொல்லக்கூடாத பத்தாநாளில்மறந்ததை அநுட்டிக்க வேண்டுமென்று மற்றொருவன் சொல்லுதல் கூடாது என்பது.

---

அதில் மற்றொரு பக்ஷத்தைக் கூறுகின்றது.

பிராமணம் 2

अथो खल्वाहुर्यज्ञस्य वै समृद्धेन देवाः सुवर्गं लोकमायन्यज्ञस्य व्यृद्धेनासु-
रान्पराऽभावयन्निति यत्खलु वै यज्ञस्य समृद्धं तद्यजमानस्य यद्व्यृद्धं
तद्भ्रातृव्यस्य स यो वै दशमेऽहन्नविवाक्य उपहन्यते स एवाति रेच-
यति ते ये बाह्या दृशीकवः स्युस्ते विब्रूयुः ।

என்பது.

உரை.

முழுதும் பழுதுபடாத எக்ஞாநுட்டானத்தால் தேவர்கள் சுவர்க்கத்தையடைந்தனர். முழுப்பயன் எசமானனைச்சேரும், குறைந்தபயன் பகைவனைச் சேரும். இவ்வாற்றால், பத்தாநாள் சிறிது அநுட்டானத்தை மறந்துவிட்டவன் சாத்திரவழியைத்தாண்டினவனுவன், தாண்டவே பயன் குறையும் குறைந்தபோது பகைவனையுண்டாக்கும் அக்குற்றத்தைநீக்குவதற்கு யாதேனும் ஒரு பிரயாச்சித்தஞ்சொல்லல்வேண்டும். அதாவது இருத்துவிக்குக்கள் மறந்ததைக் கூறில் குற்றமாகுமாதலின் என்க. எக்ஞத்தைப் பார்க்கவந்தவர்களுள் விடயந்தெரிந்தவர் சொல்லுதல்கூடும் அதனுல் குற்றம் இல்லை என்பது.

---

மற்றொரு பக்ஷத்தை விதிக்கின்றது.

பிரமாணம் 3

यदि तत्र न विन्देयुरन्तः सदसाद्व्युच्यम् ।

என்பது

உரை

எக்ஞத்தைப் பார்க்கவந்தவர்களுள் பிரயோகஉணர்ச்சியுடையவர் ஒருவருங்கிடைத்தல் இன்றெனின், எக்ஞத்திற்குள்ளிருக்கின்றவர்களுள் யாராகிலுமொருவர்மறந்து விட்டதைக்கூறலாம் என்பது.

மீண்டும் மற்றொரு பக்ஷத்தைக் கூறுகின்றது.

பிராமணம் 4

**यदि तत्र न विन्देयुर्गृहपतिना व्युच्यम् ।**

என்பது.

உரை

மேற்கூறியபடி எக்ஞத்திலுள்ளார்களுள் ஒருவரும் அத்தகையவுணர்ச்சியுடையார் கிடைக்காவிடின் வேள்வித்தலைவனே மறந்துவிட்டதைக்கூறலாம் என்பது.

---

எல்லாப் பக்ஷங்களின் கருத்தையும் நியமஞ் செய்கின்றது.

பிராமணம் 5

**तद्व्युच्यमेव ।**

என்பது

உரை

விரிப்பதிலென்? பார்க்கவந்தவரேனும், அல்லது இருத்துவிக்கேனும், அல்லது எசமானனாகிலும் மறந்துவிட்ட அநுட்டானத்தை எடுத்துக்சொல்லல் வேண்டும். அற்றேல்? மறந்ததைச் சொல்லாதநாள் என்பது மாறுபடாதோ எனின்? மாறுபடாது. என்னை? மறந்ததைச்சொல்லல் என்பதே அத்தினத்தில் வரக்கூடாது. அதாவது அன்றுமறந்துவிடில் பிராயச்சித்தமின்மையின் மறதியில்லாமலே அநுட்டானஞ்செய்தல் வேணடுமென்பது பொருள்என்பதாம்.

---

இப் பத்தாநாளில், மனதிற்குள் மந்திரத்தை ஓதிக்கொண்டு சோமரசத்தைப் பிடிக்கும்போது செய்யவேண்டிய துதிவிசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம் 6

**अथवा एतत्सर्पराज्ञिया ऋग्भिः स्तुवन्तीयं वै सर्पतो राज्ञी यद्वा अस्यां किं चार्चन्ति यदानृचुस्तेनेय१ँ सर्पराज्ञी ते यदेव किं च वाचाऽऽनृचुर्यदतोऽध्यर्चितारस्तदुभयमाप्त्वाऽवरुध्योत्तिष्ठामेति ।**

என்பது

உரை

இந்நாளில் சர்ப்பராக்ஞீ என்னும் பூமியின் துதிசெய்தல்வேண்டும். இப்பூமி, சஞ்சரிக்கும் எல்லாப்பிராணிகட்கும் தலைமையானதால் சர்ப்பராக்ஞி எனப்படுகின்றது. மற்றும், பூசிப்போர் பூசிக்கப்பெறுவோர் என்னும் இரு வகைப் பிராணிகட்கும் இப்பூமி ஆதாரமாயிருத்தலின் சர்ப்பராக்ஞி எனல் அமையும். இவ்வாற்றால் சர்ப்பராக்ஞியென்னும் பூமியின்சம்பந்தமான இருக்குக்களாம், அதாவது, "பூமிர்பூம்நா,, என்பது முதலியவைகளாகின்றது. இதனால் "பூமிர்பூம்நா,, என்பது முதலியமந்திரங்களால் இத்தினத்தில் துதிசெய்தல் வேண்டுமென்பதாம். இத்துதிசெய்வதன் கருத்தோ, இப்பூமியில், அர்ச்சிப்போர் அர்ச்சிக்கப்படுவோர் என்னுமிருவகையாரும் யாமேயாகி அவற்றை தம்வயப்படுத்திக்கொண்டு துதிக்கின்றவர்களாக யாம் பிறகு எழுவோமாக என்பதாம்.

---

வேறு துதிகளினின்று இதற்கு ஒருவிசேடத்தைவிதிக்கின்றது.

பிராமணம் 7

**तामिर्मनसा स्तुवते न वा इमामश्वरथो नाश्वतरीरथः सद्यः पर्याप्तुमर्ह-
ति मनो वा इमा१ सद्यः पर्याप्तुमर्हति मनः परिभवितुम्।**

என்பது

உரை

ஏனையதுதிகள் வாக்கால்துதிக்கப்படுகின்றன. இதுவோ மனதால் செய்யப் படுகின்றது. ஏனெனின்? மிகுந்தவன்மையுள்ள ஆண்குதிரைகள் பூட்டிய தேரும், பெண்குதிரைகள் பூட்டியதேரும் ஒருநாளில் இப்பூமியைப்பரவியோடல் முடியாது. ஒரேகணத்தில் மனம் இப்பூமியைச்சுற்றிக்கொண்டுவந்துவிடும் ஆதலின் மனதால் துதித்தல்வேண்டும் என்பது.

---

சூத்திரப்படி, ஹோதாவானவன் சதுர்ஹோதாமந்திரங்களை ஓதல்வேண்டும் என்பதை விதிக்கின்றது.

பிராமணம் 8

**अथ ब्रह्म वदन्ति परिमिता वा ऋचः परिमितानि सामानि परिमितानि
यजूꣳष्यथैतस्यैवान्तो नास्ति यद्ब्रह्म तत्प्रतिगृणत आ चक्षीत स प्र-
तिगरः।**

என்பது

உரை

முற்கூறியஇருக்குக்களால் துதிக்கும்போது எங்கு எங்கு அத்வரியு பிரதிகரஞ் சொல்கின்றுனே, அங்கு அங்கு பிரதிகரஞ்சொல்லப்படும் போது பிரமம் என்னும் சதுர்ஹோதா மந்திரங்களை ஹோதா கூறல் வேண்டும். சதுர் ஹோதாமந்திரம் பிரமம் என்பதை வேறிடத்திற் காண்க. அது, "பிருதிவீஹோதா" என்பது முதலிய ஆரணியகாண்ட மந்திரமாம். பிரதிகரம் என்பது துதிப்போனை உற்சாகப் படுத்துவதற்கு ஓம் என்பதாற் கூறல். இதனுல், பத்து ஹோதா மந்திரங்களையும் ஓதல்வேண்டும் என்பது பெற்ரும். இருக்கு எசுர், சாம மந்திரங்களுக்கு அளவுண்டு எனெனின்? அவைகட்கு சிலவிடங்களில்மாத்திரம் பிரயோகமானதால் என்க. இதுவோ, எல்லாவிடங்களிலும் பிரயோகிக்கப் படுதலின் அளவில்லை. ஆதலின் இது பிரமம் எனப்பட்டது. ஹோதா, மந்திரங்களை ஓதுகின்ருன். பிரதிகரஞ் சொல்வதன் பொருட்டு எழுந்த அத்துவர்யுவின் பொருட்டு ஹோதா ஓதல்வேண்டும். இதனுல், இதுபிரதிகரம் எனப்பட்டது என்பது.

முதலநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

### இரண்டாவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் நாற்பத்தொரு பதங்களைக் கொண்டது.

துவாதசாஹத்தைக் கூறும் பிராமணங்கள்.

ब्रह्मवादिनो वदन्ति किं द्वादशाहस्य प्रथमेनाहृत्विजां यजमानो वृङ्क्त इति तेज इन्द्रियमिति किं द्वितीयेनेति प्राणानन्नाद्यमिति किं तृतीयेनेति त्रीनिमाँल्लोकानिति किं चतुर्थेनेति चतुष्पदः पशूनिति किं पञ्चमेनेति पञ्चाक्षरां पङ्क्तिमिति किं षष्ठेनेति षडृतूनिति किं सप्तमेनेति सप्तपदां शक्करीमिति ॥ ५ ॥ किमष्टमेनेत्यष्टाक्षरां गायत्रीमिति किं नवमेनेति त्रिवृतं स्तोममिति किं दशमेनेति दशाक्षरां विराजमिति किमेकादशेनेत्येकादशाक्षरां त्रि-

ष्टुभमिति किं द्वादशेनेति द्वादशाक्षरां जगतीमित्येतावद्वा अस्ति यावदेतद्यावदेवास्ति तदेषां वृङ्क्ते ॥ ६ ॥ शक्करीमित्येकचत्वारिꣳशच्च ।॥ २ ॥

இதில், வினாவிடைகளால் அஹீனமாகிய துவாதசாஹங் கூறப்படுகின்றது.

இருத்துவிக்கைப் பழிக்குமொழியிலாக அதைச் செய்யும் எசமானனைப் புகழ்கின்றது.

பிராமணம் 1

ब्रह्मवादिनो वदन्ति किं द्वादशाहस्य प्रथमेनाहर्त्विजां यजमानो वृङ्क्त इति तेज इन्द्रियमिति किं द्वितीयेनेति प्राणानन्नाद्यमिति किं तृतीयेनेति त्रीनिमाँल्लोकानिति किं चतुर्थेनेति चतुष्पदः पशूनिति किं पञ्चमेनेति पञ्चाक्षरां पङ्क्तिमिति किꣳ षष्ठेनेति षड्ऋतूनिति किꣳ सप्तमेनेति सप्तपदाꣳ शक्करीमिति किमष्टमेनेत्यष्टाक्षरां गायत्रीमिति किं नवमेनेति त्रिवृतꣳ स्तोममिति किं दशमेनेति दशाक्षरां विराजमिति किमेकादशेनेत्येकादशाक्षरां त्रिष्टुभमिति किं द्वादशेनेति द्वादशाक्षरां जगतीमित्येतावद्वा अस्ति यावदेतद्यावदेवास्ति तदेषां वृङ्क्ते ।

என்பது.

உரை

துவாதசாஹத்தில் ஒவ்வொரு நாளிலும் இருத்துவிக்களுக்குள் எசமானன் என்ன பயனையடைகின்றான்? என்று பிரமவாதிகள் வினவுகின்றனர். அதற்கு, முதல்நாள் தேசையும் இந்திரிய வன்மையையும், இரண்டாம்நாள் பிராணனையும் உணவுப் பொருளையும், மூன்றுநாள் மூன்று லோகங்களையும், நான்காம்நாள் நாற்காற் பிராணிகளான பசுக்களையும், ஐந்தாநாள் ஐந்து எழுத்துக்களைக் கொண்ட பந்திச்சந்தத்தையும், ஏழாநாள் ஏழு பாதங்களையுடைய சக்வரி என்னுஞ் சந்தத்தையும், எட்டாநாள் எட்டெழுத்துக்களைக் கொண்ட காயத்திரியையும், ஒன்பதாநாள் மும்மூன்றாகும் ஸ்துதி ஸ்தோமத்தையும், பத்தாநாள் பத்து எழுத்துக்களைக் கொண்ட விராட் என்னுஞ் சந்தத்தையும், பதினோராநாள் பதினொரு எழுத்துக்களைக் கொண்ட திருஷ்டுப் என்னுஞ் சந்தத்தையும், பன்னிரண்டாநாள் பன்னிரண்டு எழுத்துக்களைக் கொண்ட சகதிச் சந்தத்தையும் அடைகின்றான் என்பது விடையாம். அதா

பதின்மூன்றுநாள்)

வது மேற்கூறப்பட்ட பன்னிரண்டு நாட்களிலுமுள்ள பயன்களே இருத்து விக்குக்களின் பயன்களாம். இவற்றையெல்லாம் எசமானனே அடைகின்றான் என்பதாம்.

இரண்டமநுவாகம்

முற்றிற்று.

---

## மூன்றுவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் நாற்பத்துமூன்று பதங்களைக் கொண்டது.

திரயோதசராத்திரத்தைக் கூறும் பிராமணங்கள்.

एष वा आप्तो द्वादशाहो यत्त्रयोदशरात्रः समानꣳ ह्येतदहर्यत्प्रायणीयश्चोदयनीयश्च त्र्यतिरात्रो भवति त्रय इमे लोका एषां लोकानामाप्त्यै प्राणो वै प्रथमोऽतिरात्रो व्यानो द्वितीयोऽपानस्तृतीयः प्राणापानोदानेष्वेवान्नाद्ये प्रति तिष्ठन्ति सर्वमायुर्यन्ति य एवं विद्वाꣳसस्त्रयोदशरात्रमासते तदाहुर्वाग्वा एषा वितता ॥ ७ ॥ यद्द्वादशाहस्तां विच्छिन्द्युर्यन्मध्येऽतिरात्र कुर्युरुपदासुका गृहपतेर्वाक्स्यादुपरिष्टाच्छन्दोमानां महाव्रतं कुर्वन्ति संततामेव वाचमव रुन्धतेऽनुपदासुका गृहपतेर्वाग्भवति पशवो वै छन्दोमा अन्नं महाव्रतं यदुपरिष्टाच्छन्दोमानां महाव्रतं कुर्वन्ति पशुषु चैवान्नाद्ये च प्रति तिष्ठन्ति ॥ ८ ॥ वितता त्रिचत्वारिꣳशच्च । ॥ ३ ॥

இதில் பதின்மூன்று இரவு கொண்ட யாகங் கூறப்படுகின்றது.

அதைக்கூறுகின்றது.

பிராமணம் 1

एष वा आप्तो द्वादशाहो यत्त्रयोदशरात्रः समानꣳ ह्येतदहर्यत्प्रायणीयश्चोदयनीयश्च ।

என்பது

உரை

விதிக்கப்படும் இப்பதின்மூன்று நாட்கொண்ட யாகம் துவாதசாஹமே யாகும். இதில் ஒரு நாள் மிகுதியாதலின் இதுவே நிறைந்த பன்னிரு நாளாகும் என்க. நாள் மிகுதியாயாயிருத்தலின் இது எவ்வாறு துவாதசாஹத்திற்கு ஒப்பாகும் எனின்? துவாதசாஹத்திற் செய்வதுபோன்றே இதிலும் உதயனீயம் பிராணீயம் என்னும் இரண்டு அதிராத்திரங்களுமாம் ஆதலின் ஒப்பாம் என்பது.

---

இனி, இதன் விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம் 2

**अतिरात्रो भवति त्रय इमे लोका एषां लोकानामाप्त्यै ।**

என்பது

உரை

துவாதசாஹத்தில் பிராணீயம், உதனீயம் என்னும் இரண்டே அதிராத்திரங்களாம். இதில், மூன்று அதிராத்ரங்களுள்ளன; இவைகளால் மூவுலகத்தையுமடைகின்றான் என்பது.

---

திரயோதசத்தை (பதின்மூன்றுநாளை) விதிக்கின்றது

பிராமணம் 3

**प्राणो वै प्रथमोऽतिरात्रो व्यानो द्वितीयोऽपानस्तृतीयः प्राणापानोदाने-ष्वेवान्नाद्ये प्रति तिष्ठन्ति सर्वमायुर्यन्ति य एवं विद्वाꣳसस्त्रयोदशरात्र-मासते ।**

என்பது

உரை

முதலாவது அதிராத்திரம் பிராணனும், இரண்டாவது அதிராத்திரம் வியானனும், மூன்றாவது அதிராத்திரம் அபானனும், இம்மூன்றும் அன்ன முதலியவற்றில் நிலைக்கின்றன. இவ்வாறுணர்ந்து திரயோதசராத்திரம் என்னும் யாகத்தைச் செய்கின்றவன் முழுஆயுளையுமடைகின்றான் என்பது.

---

பதின்மூன்றுநாள்)

முற்கூறியமத்திய (நடுவிலுள்ள) அதிராத்திரத்தை சந்தோமங்கட்கு முன்செய்தல் வேண்டுமென்பதைமறுத்து சந்தோமங்கட்கு பின்செய்யவேண்டுமென்று விதிக்கின்றது.

பிரமாணம் 4

**तदाहुर्वाग्वा एषा वितता यद्वादशाहस्तां वि च्छिन्द्युर्यन्मध्येऽतिरात्रं कुर्युरुपदासुका गृहपतेर्वाक्स्यादुपरिष्टाच्छन्दोमानां महाव्रतं कुर्वन्ति संततामेव वाचमव रुन्धतेऽनुपदासुका गृहपतेर्वाग्भवति ।**

என்பது.

உரை

துவாதசஹமானது விரிந்தவாக்குவடிவாம் அங்குள்ள ஸ்தோமங்கள் விடுபடல்கூடாதென்று பிரகிருதியில் உறுதியானதால் ஷடஹசந்தோமங்களுக்கு நடுவில் சர்வஸ்தோமாகிய அதிராத்திரத்தையநுட்டிக்கில் துவாதசாஹத்திற் கூறிய வாக்குத்தொடர்பை விட்டுவிடுகின்முன். அதனுல், எசமானுடைய வாக்குப்பழுதுபடும். ஆதலின், சந்தோமங்கட்குமேல் துவாதசாத்திலுள்ள அவிவாக்கிய (மறந்ததைச்சொல்லாத) நாளை, சர்வஸ்த்தோம அதிராத்திரமாகச் செய்தல்வேண்டும். அதில் மகாவிரதத்தின் தர்மங்களிருப்பதாகக் கூறுங்கருத்துக்கொண்டு அதுமகா விரதமெனப்படுகின்றது. இவ்வாறு மேல் அநுட்டிக்கில் வாக்குத் தொடர்ச்சியுமாகிறது எசமானனுடைய வாக்குங் கெடாது என்பதாம்.

---

அத்தகைய மேலநுட்டானத்தையே மற்றேநவகையால் புகழ்கின்றது,

பிராமணம் 5

**पशवो वै छन्दोमा अन्नं महाव्रतं यदुपरिष्टाच्छन्दोमानां महाव्रतं कुर्वन्ति पशुषु चैवान्नाद्ये च प्रति तिष्ठन्ति ।**

என்பது

உரை

சந்தோமங்கள் கோக்களாம். மகாவிரதம், அதாவது சந்தோமங்கட்கு பின் அநுட்டிக்கப்படுவது அன்னமாம் என்பதுபொருந்தும். ஆதலின், அன்னமாகிய மகாவிரததர்மங்களை அதிராத்ரத்திற்குப்பிறகு செய்தல் வேண்டுமென்பது நியாயமாம். கோக்களிருக்கில் பால்முதலியன உண்டாமாதலின் என்க.

மூன்றுமநுவாகம்

முற்றிற்று

---

ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

நான்காவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் முப்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

சதுர்த்தசராத்திரத்தைக் கூறும் பிராமணங்கள்.

आदित्या अकामयन्तोभयोर्लोकयोर्ऋध्नुयामेति त एतं चतुर्दशरात्रमपश्यन्तमाऽहरन्तेनायजन्त ततो वै त उभयोर्लोकयोराध्नुवन्नस्मिꣳश्चामुष्मिꣳश्च य एवं विद्वाꣳसश्चतुर्दशरात्रमासत उभयोरेव लोकयोर्ऋध्नुवन्त्यस्मिꣳश्चामुष्मिꣳश्च चतुर्दशरात्रो भवति सप्तग्राम्या ओषधयः सप्ताऽऽरण्या उभयीषामवरुद्ध्यै यत्पराचीनानि पृष्ठानि ॥ ९ ॥ भवन्त्यमुमेव तैर्लोकमभि जयन्ति यत्प्रतीचीनानि पृष्ठानि भवन्तीममेव तैर्लोकमभि जयन्ति त्रयस्त्रिꣳशौ मध्यतः स्तोमौ भवतः साम्राज्यमेव गच्छन्त्यधिराजौ भवतोऽधिराजा एव समानानां भवन्त्यतिरात्रावभितो भवतः परिगृहीत्यै ॥ १० ॥

पृष्ठानि चतुस्त्रिꣳशच्च । ॥ ४ ॥

இதில், பதினான்கு இரவுகள் கொண்ட யாகம் கூறப்படுகின்றது.

அதை விதித்தல்.

பிராமணம் 1

आदित्या अकामयन्तोभयोर्लोकयोर्ऋध्नुयामेति त एतं चतुर्दशरात्रमपश्यन्तमाऽहरन्तेनायजन्त ततो वै त उभयोर्लोकयोराध्नुवन्नस्मिꣳश्चामुष्मिꣳश्च य एवं विद्वाꣳसश्चतुर्दशरात्रमासत उभयोरेव लोकयोर्ऋध्नुवन्त्यस्मिꣳश्चामुष्मिꣳश्च ।

என்பது.

பதினைந்துநாள்)

உரை

ஆதித்தர்கள் இவ்வுலக பரவுலகங்களின் சம்பத்தைவிரும்பி இச்சதுர்த்தசராத்திர யாகத்தைக் கண்டுபிடித்துத் தேடிச்செய்து இருவித வுலகச் சம்பத்துக்களை யடைந்தனர். இவ்வாறுணர்ந்து இச்சதுர்த்தசராத்திரயாகத்தைச் செய்கின்றவன் இவ் வுலக பரவுலகங்களின் சம்பத்தையடைகின்றான் என்பது.

---

இதன் நாளின் எண்ணைப் புகழ்கின்றது.

பிராமணம் 2

**चतुर्दशरात्रो भवति सप्त ग्राम्या ओषधयस्सप्ताऽऽरण्या उभयीषामवरुध्यै ।**

என்பது

உரை

பதினான்கு இரவுயாகமானது ஏழு கிராமத்திலுள்ள பசுக்கள், ஏழு அரணியத்திலுள்ள பசுக்கள் ஆதலின் இது இருவகைப்பசுக்களையும் அடைதற் பொருட்டாம் என்பது.

---

பிராயணீய உதயனீயமென்னும் இரண்டிற்கும் நடுவிலுள்ள பன்னிரண்டு நாட்களை விதிக்கின்றது.

பிராமணம் 3

**यत्पराचीनानि पृष्ठानि भवन्त्यमुमेव तैर्लोकमभि जयन्ति यत्प्रतीचीनानि पृष्ठानि भवन्तीममेव तैर्लोकमभि जयन्ति ।**

என்பது

உரை

ரதந்தரம், பிருகத், வைரூபம்; வைராசம், சாக்வரம், ரைவதம் என்னும் முறையாய் பிருஷ்டத் துதிகளுடன்கூடிய ஆறு நாட்களாலும் பரலோகமடையப்படுகின்றது. மாறுபட்ட இந்த பிருஷ்டத் துதிகளுடன் கூடிய ஆறுநாட்களாலும் இவ்வுலகம் அடையப்படுகின்றது என்பது.

---

இந்த ஆரோகணம் அவரோகணம் என்னு முறைகளையே மீண்டும் புகழ்கின்றது.

பிராமணம் 4

त्रयस्त्रिꣳशौ मध्यतः स्तोमौ भवतः साम्राज्यमेव गच्छन्त्यधिराजौ भवतोऽधिराजा एव समानानां भवन्ति ।

என்பது.

உரை

மும்முறைதிருப்புதலால், பதினைந்து, பதினேழு, இருபத்தொன்று, இருபத்தேழு, முப்பத்து மூன்றுஎன்னும் இம்முறை ஆறுஸ்தோமங்கள் ஆரோகமுறையாம். முப்பத்துமூன்று, இருபத்தேழு, இருபத்தொன்று, பதினேழு, பதினைந்து, திரிவிருத் (9) என்னும் இம்முறை அவரோகமுறையாம். இவ்வாற்றால் பன்னிருநாட்களுள், ஆறுவது ஏழாவதுநாட்களில் இடையின்றி முப்பத்துமூன்றுருவதாகிய இரண்டு ஸ்தோமங்களும் அமைகின்றன. அதனால் எசமானன் சாம்ராச்சியத்தை யடைகின்றான் இவ்விரண்டும் ஏனைய ஸ்தோமங்களுக்கு அதிராசனும் அதில் நம்போன்றார்கள் அதிலடங்கியிருத்தலின் என்க. இவ்வாற்றால் எசமானனும் எல்லா அரசர்கட்கும் மேலாகிய அரசனாகின்றான் என்பது.

---

பிராயணீய, உதயனீயம்என்னும் விசேடநாட்களிரண்டையும் விதிக்கின்றது.

பிராமணம் 5

अतिरात्रावभितो भवतः परिगृहीत्यै ।

என்பது

உரை

முன்னும் பின்னும் இரண்டு அதிராத்திரங்களாகின்றன இது பரிக்கிரகத்தின் பொருட்டாம் என்பது.

நான்காமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் மூன்றும் ப்ரபாடகம்

### ஐந்தாவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிக்குமேல் முப்பத்தொருபதங்களைக் கொண்டது.*

வேறொரு சதுர்த்தசராத்திரத்தைக்கூறும் பிராமணங்கள்

प्रजापतिस्सुवर्गं लोकमैत्तं देवा अन्वायन्तानादित्याश्च पशव-
श्चान्वायन्ते देवा अब्रुवन्यान्पशूनुपाजीविष्म त इमेऽन्वाग्मन्निति
तेभ्य एतं चतुर्दशरात्रं प्रत्यौहन्त आदित्याः पृष्ठैस्सुवर्गं लोकमा-
रोहन्त्र्यहाभ्यामस्मिँल्लोके पशून्प्रत्यौहन्पृष्ठैरादित्या अमुष्मिँल्लोक
आर्ध्नुवन्त्र्यहाभ्यामस्मिन् ॥ ११ ॥ लोके पशवो य एवं विद्वाꣳ-
सश्चतुर्दशरात्रमासत उभयोरेव लोकयोर्ऋध्नुवन्त्यस्मिꣳश्चामुष्मिꣳश्च
पृष्ठैरेवामुष्मिँल्लोक ऋध्नुवन्ति त्र्यहाभ्यामस्मिँल्लोके ज्योतिर्गौरायु-
रिति त्र्यहो भवतीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुरिमानेव लो-
कानभ्यारोहन्ति यदन्यतः पृष्ठानि स्युर्विविवधꣳ स्यान्मध्ये पृष्ठा-
नि भवन्ति सविवधत्वाय ॥ १२ ॥ ओजो वै वीर्यं पृष्ठान्योज
एव वीर्यं मध्यतो दधते बृहद्रथंतराभ्यां यन्तीयं वाव रथंतरमसौ
बृहदाभ्यामेव यन्त्यथो अनयोरेव प्रति तिष्ठन्त्येते वै यज्ञस्याञ्ज-
सायनी स्रुती ताभ्यामेव सुवर्गं लोकं यन्ति पराञ्चो वा एते
सुवर्गं लोकमभ्यारोहन्ति ये पराचीनानि पृष्ठान्युपयन्ति प्रत्यङ्त्र्यहो
भवति प्रत्यवरूढ्या अथो प्रतिष्ठित्या उभयोर्लोकयोर्ऋद्ध्वोत्तिष्ठ-
न्ति चतुर्दशैतास्तासां या दश दशाक्षरा विराडन्नं विराड्विराजै-
वान्नाद्यमव रुन्धते याश्चतस्रश्चतस्रो दिशो दिक्ष्वेव प्रति तिष्ठन्त्य-

तिरात्रावभितो भातः परिगृहीत्यै ॥ १३ ॥ आध्रुवन्त्यहाभ्याम-स्मिन्त्संविवधत्वाय प्रतिष्ठित्या एकत्रिंशच्च ॥ ॥ ५ ॥

இதில், வேறொரு சதுர்த்தசராத்திரம் கூறப்படுகின்றது.

அதைவிதிப்பதற்கு முன்னுரை கூறுகின்றது,

பிராமணம் 1

प्रजापतिस्सुवर्गं लोकमैत्तं देवा अन्वायन्तानादित्याश्च पशवश्चान्वायन्ते देवा अब्रुवन्यान्पशूनुपाजीविष्म त इमेऽन्वाग्मन्निति तेभ्य एतं चतुर्दश-रात्रं प्रत्यौहन्त आदित्याः पृष्ठैस्सुवर्गं लोकमारोहन्त्र्यहाभ्यामस्मिँल्लो-के पशून्प्रत्यौहन्पृष्ठैरादित्या अमुष्मिँल्लोक आर्ध्नुवन्त्र्यहाभ्यामस्मिन् लोके पशवः ।

என்பது

உரை

பிரசாபதி சுவர்க்கத்திற்குச் சென்றபோது பிரசாபதியைப்பின்பற்றி எல்லாத்தேவர்களும்போனார்கள். அத்தேவர்களைப்பின்பற்றி ஆதித்தர்களும் பசுக்களுஞ்சென்றன. ஆதித்தர்களையும் பசுக்களையுங்கண்டு, மனிதர்களும் யாமும் எப்பசுக்களையடைந்து பிழைப்போமோ, அப்பசுக்களும் நம்பின்னால் வந்துவிட்டன ஆதித்தர்கள் பசுக்கள் என்னுமிருவகையில் ஆதித்தர்கள் சுவர்க்கத்திற்கு ஏறுவார்களாக. பசுக்கள்மீண்டும் பூமிக்குப்போதல்வேண்டும் இதற்கு உபாயம் யாதென ஆராய்ந்து சதுர்த்தசராத்திர யாகத்தைக்கண்டு பிடித்து முறையாய் தேவர்கள் அநுட்டித்தனர். அதில், முதலாவது ஒரு அதி ராத்திரம், பிறகு, சோதி, கௌ, ஆயுள் என்னும் ஆரோகணமாகிய மூன்று ராத்திரம். பிறகு, பிருஷ்டிய ஷடஹம், பிறகு, ஆயுர், கௌ, சோதி என்னும் அவரோகண மூன்றுராத்திரம். பிறகு, அதிராத்திரம் என்பன நாட்களாம் என்றிவ்வாறு அநுட்டிக்கும்போது பிருஷ்டம் என்னும் ஆறு நாட்களில் ஆதித்தர்கள் சுவர்க்கத்தையடைந்தனர். பிரத்தியா விருத்தியுடன்கூடிய மூன்று நாளில் தேவர்களும் பசுக்களும் இவ்வுலகத்திற்குத் திரும்பி வந்து விட்டனர். அவற்றுள், ஆதித்தர்கள் பிருஷ்டங்களால் சுவர்க்கத்தையடைந்து அங்கு நல்ல சம்பத்தையடைந்தனர். பசுக்கள் மூன்று நாளில் இவ்வுலகில் நல்ல சம்பத்தையடைந்தன என்பது. பிரத்தியாவிருத்தி = மீண்டுந்திரும்பர்

அதை இப்போது விதிக்கின்றது

பிராமணம் 2

**य एवं विद्वाꣳसश्चतुर्दशरात्रमासत उभयोरेव लोकयोर्ऋध्नुवन्त्यस्मिꣳश्चा-मुष्मिꣳश्च पृष्ठैरेवामुष्मिँल्लोक ऋध्नुवन्ति त्र्यहाभ्यामस्मिँल्लोके ।**

என்பது

உரை

இவ்வாறுணர்ந்து சதுர்த்தசராத்திரம் என்னும் யாகத்தைச் செய்கின்றவன், இவ்வுலக பரஉலக சம்பதநுக்களையடைகின்றான். அதாவது பிருஷ்டத்துதி நாள்களால் பரஉகை சம்பத்தையும், மூன்று நாட்களால் இவ்வுலக சம்பத்தையுமடைகின்றான் என்பது.

---

ஆரோகணமாகிய முதலாவது மூன்று நாளை விதிக்கின்றது.

பிராமணம் 3

**ज्योतिर्गौरायुरिति त्र्यहो भवतीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुरिमा-नेव लोकानभ्यारोहन्ति ।**

என்பது.

உரை

சோதிட்டோமம், கோஷ்டோமம், ஆயுஷ்டோமம் என்பன மூன்று நாட்களாம். இவைகளால் மூன்றுலகங்களையுமடைகின்றான் என்பது.

---

ஆறு நாட்களின் தின விசேடங்களை விதிக்கின்றது.

பிராமணம் 4

**यदन्यतः पृष्ठानि स्युर्विविवधꣳ स्यान्मध्ये पृष्ठानि भवन्ति सविवधत्वा-यौजो वै वीर्यं पृष्ठान्योज एव वीर्यं मध्यतो दधते ।**

என்பது

உரை

பிருஷ்ட நாட்கள் இரண்டுபக்கங்களிலும் இருக்கின் இருநுனிகளிலுஞ் சுமை கட்டும் தடிபோலாகும் இக்கருமம். ஆகலின், அதைப்போன்றிருப்பதற்கு நடுவில் பிருஷ்டநாட்களிருத்தல் வேண்டும். இப்பிருஷ்டம்,

உடம்பின் வன்மைக்கும் இந்திரியவன்மைக்குங் காரணமாதலின் நடுவில் அநுட்டிக்கில் நடுவில் வீரியத்தையும் வன்மையையும் வைத்ததாகின்றது என்பது.

---

அந்நாட்களில், விதியால்வந்த வைரூப வைராச முதலான சாமப்பாடல்களை விலக்குதற் பொருட்டு விதிக்கின்றது.

பிராமணம் 5

**बृहद्रथंतराभ्यां यन्तीयं वाव रथंतरमसौ बृहदाभ्यामेव यन्त्यथो अनयोऽ रेव प्रति तिष्ठन्त्येते वै यज्ञस्याञ्जसायनी स्रुती ताभ्यामेव सुवर्गं लोकं यन्ति ।**

என்பது.

உரை

முதலாவது, மூன்றாவது, ஐந்தாவது நாட்களில் ரதந்தரம் என்னும் பிருஷ்டத்துதி செய்தல் வேண்டும். இரண்டாவது, நான்காவது, ஆறாவது நாட்களில் பிருகத் சாமம் என்னும் பிருஷ்டத் துதிகளைச் செய்தல் வேண்டும். ஏனையவற்றிற்கு உரை கூறப்பட்டது என்பது.

---

அவரோகணமாகிய மூன்று நாளை விதிக்கின்றது.

பிராமணம் 6

**पराञ्चो वा एते सुवर्गं लोकमभ्यारोहन्ति ये पराचीनानि पृष्ठान्युपयन्ति प्रत्यङ्त्र्यहो भवति प्रत्यवरूढ्या अथो प्रतिष्ठित्या उभयोर्लोकयोऋर्द्ध्वोत्तिष्ठन्ति ।**

என்பது

உரை

முறை மாறிச் செய்யும் பிருஷ்டநாளை அநுட்டிக்கின்ற எசமானர்கள் மீண்டும் வராத சுவர்க்கத்தையடைகின்றனர். ஆதலின், சுவர்க்கத்திலிருந்து இறங்காதிருத்தற் பொருட்டு, ஆயுள், கோ, சோதியென மாறிச் செய்யப்படுகின்றன. மற்றும், இம்மூன்றுநாளும் இவ்வுலகப் பெருமையை யடைதற் பொருட்டுமாகின்றன. ஆதலின், இரண்டுலகப் பெருமைகளையுமடைந்து பெருமையுடனிருக்கின்றான் என்பது.

---

(பதினைந்துநாள்)

நாட்கள்கொண்ட எண் புகழப்படுகின்றது.

பிராமணம் 7

चतुर्दशैतास्तासां या दश दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धते याश्चतस्रश्चतस्रो दिशोदिक्ष्वेव प्रति तिष्ठन्ति ।

என்பது

சதுர்த்தச நாட்களுள் பதினான்கு இரவுகளிருக்கின்றன. அவ்விரவுகளுள், பத்து இரவுகள் பத்து எழுத்துக்கள் கொண்ட விராட் சந்தவாயிலாக உணவுப் பொருளைக் கொடுக்கின்றன. மேலேயுள்ள நான்கு இரவுகளும் எண் ஒப்பால் நான்கு திக்குக்களிலும பெருமையை யுண்டாக்குகின்றன என்பது.

---

பிராயணீய உதயனீயங்களை விதிக்கின்றது.

பிராமணம் 8

अतिरात्रावभितो भवतः परिगृहीत्यै ।

என்பது.

உரை

இரண்டு பக்கங்களிமுள்ள அதிராத்திரங்களிரண்டும் பரிக்கிரகணத்தின் பொருட்டு ஆகின்றன என்பது.

ஐந்தாம் அநுவாகம்
முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## ஆறுவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் ஒரு பதத்தைக் கொண்டது.

பஞ்சதசராத்திரத்தைக் கூறும் பிராமணங்கள்.

इन्द्रो वै सदृङ्देवताभिरासीत्स न व्यावृतमगच्छत्स प्रजापति- मुपाधावत्तस्मा एतं पञ्चदशरात्रं प्रायच्छत्तमाऽहरत्तेनायजत ततो वै सोऽन्याभिर्देवताभिर्व्यावृतमगच्छद्य एवं विद्वाꣳसः पञ्चदश-

रात्रमासते व्यावृतमेव पाप्मना भ्रातृव्येण गच्छन्ति ज्योतिर्गौरायु-
रिति त्र्यहो भवतीयं वाव ज्योतिरन्तरिक्षम् ॥ १४ ॥ गौरसावायु-
रेष्वेव लोकेषु प्रति तिष्ठन्त्यसत्रं वा एतद्यदछन्दोमं यच्छन्दोमा
भवन्ति तेन सत्रं देवता एव पृष्ठैरव रुन्धते पशूञ्छन्दोमैरोजो वै
वीर्यं पृष्ठानि पशवश्छन्दोमा ओजस्येव वीर्ये पशुषु प्रति तिष्ठन्ति
पञ्चदशरात्रो भवति पञ्चदशो वज्रो वज्रमेव भ्रातृव्येभ्यः प्र हर-
न्त्यतिरात्रावभितो भवत इन्द्रियस्य परिगृहीत्यै ॥ १५ ॥ अन्त-
रिक्षमिन्द्रियस्यैकं च । ॥ ६ ॥

*இதில் பதினைந்து நாள் கொண்டயாகங் கூறப்படுகின்றது.*

அதை விதித்தல்.

பிராமணம் 1

**इन्द्रो वै सदङ्देवताभिरासीत्स न व्यावृतमगच्छत्स प्रजापतिमुपाधाव-
त्तस्मा एतं पञ्चदशरात्रं प्रायच्छत्तमाऽहरत्तेनायजत ततो वै सोऽन्या-
भिर्देवताभिर्व्यावृतमगच्छद्य एवं विद्वाꣳसः पञ्चदशरात्रमासते व्या-
वृतमेव पाप्मना भ्रातृव्येण गच्छन्ति ।**

என்பது.

உரை

இந்திரன், தேவர்கட்கு இறைவனாயிருந்தும் எல்லாத் தேவர்களைப் போன்று இருந்தனனேயல்லாது அவர்களினும் வேறாய் தனிப் பெருமை யுடையோனாயிருந்திலன். பிறகு, பிரமனையடைந்து அவன்பால் உபதேசம் பெற்று பதினைந்து இரவுகள் கொண்ட யாகஞ் செய்து தேவர்களினின்று தனிப்பெருமையை யடைந்தனன். அவ்வாறே, இத்தன்மையை யுணர்ந்து செய்கின்றவர்களும், பாவத்தினின்றும் பகைவனிலிருந்தும் விடுபட்டிருக் கின்றார்கள் என்பது.

---

அதில், ஒரு மூன்று நாளை விதிக்கின்றது.

பிராமணம் 2

**ज्योतिर्गौरायुरिति त्र्यहो भवतीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुरेष्वेव लोकेषु प्रति तिष्ठन्ति ।**

என்பது

உரை

சோதி, கௌ, ஆயுள் என்பன மூன்றுநாள். இவைகளால் முறையே மூன்றுலகங்களிலும் பெருமையை யடைகின்றார்கள் என்பது.

---

நான்கு சந்தங்களையுடைய பிருஷ்டியத்தையும், ஷடஹத்தையும் விதிக்கின்றது

பிராமணம் 3

**असत्रं वा एतद्यदच्छन्दोमं यच्छन्दोमा भवन्ति तेन सत्रं देवता एव पृष्ठैरव रुन्धते पशूञ्छन्दोमैरोजो वै वीर्यं पृष्ठानि पशवश्छन्दोमा ओजस्येववीर्ये पशुषु प्रति तिष्ठन्ति ।**

என்பது

உரை

இங்கு, சந்தஸ்தோமங்களின்றிய சத்திரத்தைப் பழிப்பதில் கருத்தில்லை மற்றே, சந்தோமங்களையுடையவைகளைப் புகழ்வதில் கருத்தாம். சந்தோம மின்றியது சத்திரமாகாது சந்தோமமுடையதே சத்திரமாம். மற்றும், பிருஷ்டமென்னும் நாட்களால் தேவதைகளையடைகின்றார்கள். சந்தோம நான்கால் பசுக்களையடைகின்றார்கள். பிருஷ்டம் ஆறுநாளும் வன்மை வீரியவடிவமாதலால், அவ்விரண்டின் அநுட்டானத்தால் வீரியம் வன்மை முதலானவைகளையடைகின்றான். ஆதலின், பிருஷ்டிய ஆறு, சந்தோம நாட்களும் அநுட்டிக்கத் தக்கவைகள் என்பது.

---

கிருதுவிலுள்ள நாளின் எண்ணைப் புகழ்கின்றது.

பிராமணம் 4

**पञ्चदशरात्रो भवति पञ्चदशो वज्रो वज्रमेव भ्रातृव्येभ्यः प्रहरन्ति ।**

என்பது

உரை

பதினைந்து இரவுகளாகின்றன. பதினைந்து ஸ்தோமமும் துன்பகாரணமாதலின் வச்சிரமாம். இவ்வாற்றல் இதை அறுட்டிக்கின்றவன் பகைவர்களின் பொருட்டு வச்சிராயுதத்தை ஏவுகின்றவனுகின்ருன என்பது.

---

பிராயணீய உதயனீயங்களை விதிக்கின்றது.

பிராமணம் 5

अतिरात्रावभितो भवत इन्द्रियस्य परिगृहीत्यै ।

என்பது

உரை

இருபுறங்களும் அதிராத்திரங்களாகின்றன. இது இந்திரியத்தைக் கிரகித்தற் பொருட்டாம் என்பது.

ஆறுவது அநுவாகம்
முற்றிற்று

---

ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

ஏழாவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்குமேல் இரண்டு பதங்களைக்கொண்டது.

மற்றேரு பஞ்சதசராத்திரத்தைக்கூறும் பிராமணங்கள்

इन्द्रो वै शिथिल इवाप्रतिष्ठित आसीत्सोऽसुरेभ्योऽबिभेत्स प्रजापतिमुपाधावत्तस्मा एतं पञ्चदशरात्रं वज्रं प्रायच्छत्तेनासुरान्पराभाव्य विजित्य श्रियमगच्छदग्निष्टुता पाप्मानं निरदहत पञ्चदशरात्रेणौजो बलमिन्द्रियं वीर्यमात्मन्नधत्त य एवं विद्वांसः पञ्चदशरात्रमासते भ्रातृव्यानेव पराभाव्य विजित्य श्रियं गच्छन्त्यग्निष्टुता पाप्मानं निः ॥ १६ ॥ दहन्ते पञ्चदशरात्रेणौजो बलमिन्द्रियं वीर्यमात्मन्दधत एता एव पशव्याः पञ्चदश वा अर्धमासस्य रात्र-

योऽर्धमासशस्संवत्सर आप्यते संवत्सरं पशवोऽनु प्र जायन्ते तस्मा-
त्पशव्या एता एव सुवर्ग्याः पञ्चदश वा अर्धमासस्य रात्रयोऽर्ध-
मासशस्संवत्सर आप्यते संवत्सरस्सुवर्गो लोकस्तस्मात्सुवर्ग्या ज्यो-
तिर्गौरायुरिति त्र्यहो भवतीयं वाव ज्योतिरन्तरिक्षम् ॥ १७ ॥
गौरसावायुरिमानेव लोकानभ्यारोहन्ति यदन्यतः पृष्ठानि स्युर्विवि-
वधः स्यान्मध्ये पृष्ठानि भवन्ति सविवधत्वायौजो वै वीर्यं मध्यतो
दधते बृहद्रथंतराभ्यां यन्तीयं वाव रथंतरमसौ बृहदाभ्यामेव यन्त्य-
थो अनयोरेव प्रति तिष्ठन्त एते वै यज्ञस्याञ्जसा यनी स्रुती ता-
भ्यामेव सुवर्गं लोकम् ॥ १८ ॥ यन्ति पराञ्चो वा एते सुवर्गं
लोकमभ्यारोहन्ति ये पराचीनानि पृष्ठान्युपयन्ति प्रत्यङ्त्र्यहो भव-
ति प्रत्यवरूढ्या अथो प्रतिष्ठित्या उभयोर्लोकयोर्ऋद्ध्वोत्तिष्ठन्ति
पञ्चदशैतास्तासां या दश दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्य-
मव रुन्धते याः पञ्च पञ्च दिशो दिक्ष्वेव प्रति तिष्ठन्त्यतिरात्राव-
भितो भवत इन्द्रियस्य वीर्यस्य प्रजायै पशूनां परिगृहीत्यै ॥१९॥
गच्छन्त्यग्निष्टुता पाप्मानं निरन्तरिक्षं लोक प्रजायै द्वे च । ॥७॥

*இதில், மற்றொரு பஞ்சதசராத்திரம் கூறப்படுகின்றது.*

*அதைவிதிக்கின்றது*

பிராமணம் 1

इन्द्रो वै शिथिल इवाप्रतिष्ठित आसीत्सोऽसुरेभ्योऽबिभेत्स प्रजापतिमुपा-
धावत्तस्मा एतं पञ्चदशरात्रं वज्रं प्रायच्छत्तेनासुरान्पराभाव्य विजित्य
श्रियमगच्छदग्निष्टुता पाप्मानं निरदहत पञ्चदशरात्रेणौजो बलमिन्द्रियं
वीर्यमात्मन्नधत्त ।

*என்பது.*

உரை.

ஒருக்கால் இந்திரன் வன்மைகுன்றியவனுய் போரிடமுடியாமல் தனித்தொருவனுயும் வெறுமையுடையவனுயும் உட்காருதற்கு ஓரிடமுமின்றியிருந்தனன். பிறகு, அவன், அசுரர்கட்குப்பயந்து கொண்டு பிரசாபதியின் உபதேசத்தால்மேல்வரும் பஞ்சதசராத்திர யாகத்தைச் செய்து அசுரர்களைத் தோற்கடித்து சம்பத்தையடைந்தனன். மற்றும்இவ்வேள்வியின் 'அக்கினிஷ்டுத், என்னும் இரண்டாவது நாளால் இளைத்துப் போனதற்குக் காரணமாகிய பாவமுழுதையும் போக்கினன். எஞ்சிய பஞ்தசராத்திரத்தால் வன்மைக்குக் காரணமாகிய ஏழாந்தாதுவையும், உடம்பின்வன்மையையும் இந்திரியங்களின் வன்மையையும் போரில்உற்சாகதனையுந் தேடிக்கொண்டனன் என்பது.

---

இதையுணர்ந்தவர்களைப் புகழ்கின்றது

பிராமணம் 2

य एवं विद्वाꣳसः पञ्चदशरात्रमासते भ्रातृव्यानेव पराभाव्य विजित्य श्रियं गच्छन्त्यग्निष्टुता पाप्मानं निर्दहन्ते पञ्चदशरात्रेणौजो बलमिन्द्रियं वीर्यमात्मन्दधते ।

என்பது

உரை

இத்தன்மையை யுணர்ந்து பஞ்சதசராத்திரயாகத்தைச் செய்கின்றவர்கள் பகைவனைவென்று சம்பத்தையடைகின்றார்கள். எவ்வாற்றாலெனின்? அக்கினிஷ்டுத் என்னும் இரண்டாம் நாளால் பாவமுழுதையும் போக்குகின்றார்கள். எஞ்சிய பஞ்சதசராத்திரத்தால் வீரியம் வன்மை முதலியவைகளை யடைகின்றார்கள் என்பது.

---

இவ்வேள்வியிலுள்ள பதினைந்து இரவுகளைப் புகழ்கின்றது,

பிராமணம் 3

एता एव पशव्याः पञ्चदश वा अर्धमासस्य रात्रयोऽर्धमासशस्संवत्सर आप्यते संवत्सरं पशवोऽनुप्रजायन्ते तस्मा पशव्याः ।

என்பது.

பதினைந்து நாள்)

உரை

இவ்வேள்வியிலுள்ள இரவுகள் பசுக்கட்கு இனியவைகள், பசுக்களை யடையக் காரணமாதலினென்க. என்னை? ஒருமாதத்தின் பாதிக்குபதினைந்து இரவுகள் அப்பாதி மாதமும் முறை ஒருவருடமாய் விடுகின்றது பசுக்களும் ஒருவருடம் கருப்பத்திலிருந்து பிறக்கின்றன. ஆதலின் எண்ணிக்கைவாயி லாக இரவுகள் பசுக்கட்குக் காரணங்களாகின்றன என்பது.

---

மீண்டும் மற்றொருவகையால் புகழ்கின்றது,

பிராமணம் 4

**एता एव सुवर्ग्याः पञ्चदश वा अर्धमासस्य रात्रयोऽर्धमासशस्संवत्सर आप्यते संवत्सरस्सुवर्गो लोकस्तस्मात्सुवर्ग्याः ।**

என்பது.

உரை

இப் பதினைந்து இரவுகளும் சுவர்க்கத்திற்கு அநுகூலங்கள் பாதிமாதத் தின் பதினைந்து இரவுகள் முறையாய் எண்வாயிலாக வருடமாகும்போது அவ்வருடம் வசந்தகாலசோதிட்டோம அநுட்டானவாயிலாக சுவர்க்கத்தை யடைவதற்குக்காரணமாம். ஆதலின், இவ்விரவுகள் சுவர்க்கத்தின்பொருட்டு நல்லவைகளாகின்றன என்பது.

---

இனி நாள்விசேடங்களை விதித்தல்வேண்டும்; அதில், அக்கினிஷ்டுத், என்னு மோருநாளானது துதிகொண்டு விதியையூகித்துக்சொள்ளத்தகுந்ததாம் அதன்விஷ யம் முன்கூறப்பட்டது. அதற்குமேல் மூன்றுநாட்கள் விதிக்கப்படுகின்றன.

பிராமணம் 5

**ज्योतिर्गौरायुरिति त्र्यहो भवतीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुरिमानेव लोकानभ्यारोहन्ति ।**

என்பது.

உரை

சோதி, கௌ, ஆயுள் என்பன மூன்று நாட்கள் இவைகளால் மூன்றுல கங்களும் அடையப்படுகின்றனஎன்பது.

பிருஷ்டிய ஆறுநாட்களின்தினங்களை விதிக்கின்றது,

பிராமணம் 6

यदन्यतः पृष्ठानि स्युर्विविवधꣳ स्यान्मध्ये पृष्ठानि भवन्ति सविवधत्वायौ-
जो वै वीर्यं पृष्ठान्योज एव वीर्यं मध्यतो दधते बृहद्रथंतराभ्यां यन्तीयं
वाव रथंतरमसौ बृहदाभ्यामेव यन्त्यथो अनयोरेव प्रति तिष्ठन्त्येते वै
यज्ञस्याञ्जसायनी स्रुती ताभ्यामेव सुवर्गं लोकं यन्ति ।

என்பது.

உரை

இதன் உரையை முன்மந்திரம்போல் உரைத்துக்கொள்க. அதாவது ஐந்தாமநுவாகத்தின் நான்காம் பிராமாணத்தின் உரைபோன்றது என்பது.



ஆரோகணமாகிய மூன்றுநாட்கள்விதிக்கப்பட்டன. இப்போது அவரோகண மாகிய மூன்றுநாட்கள் விதிக்கப்படுகின்றன.

பிராமணம் 7

पराञ्चो वा एते सुवर्गं लोकमभ्यारोहन्ति ये पराचीनानि पृष्ठान्युपयन्ति
प्रत्यङ्त्र्यहो भवति प्रत्यवरूढ्या अथो प्रतिष्ठित्या उभयोर्लोकयोर्ऋ-
द्ध्वोत्तिष्ठन्ति ।

என்பது.

உரை

இதன்உரையும் ஐந்தாம்அநுவாகத்தின் ஆறுவது பிராமணத்தின் உரை போன்றது என்பது.



வேள்வியிலுள்ள இரவுகளின் எண்ணைப் புகழ்கின்றது.

பிரமாணம் 8

पञ्चदशैतास्तासां या दश दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव
रुन्धते याः पञ्च पञ्च दिशो दिक्ष्वेव प्रति तिष्ठन्त्यतिरात्रावभितो
भवत इन्द्रियस्य वीर्यस्य प्रजायै पशूनां परिगृहीत्यै ।

என்பது.

பதினேழுநாள்)

உரை

மேல்திசையுடன் திசைகள் ஐக்து. இதன் உரையை முன்போல் உரைத்துக் கொள்க என்பது.

ஏழாமநுவாகம்
முற்றிற்று

## ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## எட்டாவது அநுவாகம்

ஒருபஞ்சாதிக்குமேல் முப்பத்தேழு பதங்களைக் கொண்டது

சப்ததசராத்திரத்தைக் கூறும் பிராமணங்கள்.

प्रजापतिरकामयतान्नादस्स्यामिति स एतꣳ सप्तदशरात्रमप-
श्यत्तमाऽहरत्तेनायजत ततो वै सोऽन्नादोऽभवद्य एवं विद्वाꣳसः
सप्तदशरात्रमासतेऽन्नादा एव भवन्ति पञ्चाहो भवति पञ्च वा
ऋतवस्संवत्सर ऋतुष्वेव संवत्सरे प्रति तिष्ठन्त्यथो पञ्चाक्षरा पङ्-
क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धतेऽसत्रं वा एतत् ॥ २० ॥ यद्-
छन्दोमं यच्छन्दोमा भवन्ति तेन सत्रं देवता एव पृष्ठैरव रुन्धते
पशूञ्छन्दोमैरोजो वै वीर्यं पृष्ठानि पशवश्छन्दोमा ओजस्येव वीर्ये
पशुषु प्रति तिष्ठन्ति सप्तदशरात्रो भवति सप्तदशः प्रजापतिः प्रजाप-
तेराप्त्या अतिरात्रावभितो भवतोऽन्नाद्यस्य परिगृहीत्यै ॥ २१ ॥
एतत्सप्तत्रिꣳशच्च ॥ ॥ ८ ॥

இதில் பதினேழு நாள் யாகங் கூறப்படுகின்றது.

அதைவிதிக்கின்றது

பிராமணம் 1

प्रजापतिरकामयतान्नादस्स्यामिति स एतꣳ सप्तदशरात्रमपश्यत्तमाऽह-
रत्तेनायजत ततो वै सोऽन्नादोऽभवद्य एवं विद्वाꣳसस्सप्तदशरात्रमा-
सतेऽन्नादा एव भवन्ति ।

என்பது

பிராசபதி, அன்னத்தை நன்கு அருந்தல் வேண்டுமென்று விரும்பி இப்பதினேழு இரவுகள் கொண்டயாகத்தைக் கண்டுபிடித்துத் தேடிச்செய்து நன்கு அன்னமருந்து கின்றவனுயினன். அதுபோல் பதினேழு இரவுகள் கொண்டயாகத்தைச் செய்கின்றவனும் இனிது மிகுந்த உணவருந்துகின்றவனுகின்முன் என்பது.

---

இந்நாட்களுள், சோதி, கௌ, ஆயுள் என்பது போன்ற ஐந்து நாட்களை விதிக்கின்றது

பிராமணம் 2

**पञ्चाहो भवति पञ्च वा ऋतवस्संवत्सर ऋतुष्वेव संवत्सरे प्रति तिष्ठन्त्य-थो पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धते ।**

என்பது.

உரை

சோதி, கௌ, ஆயுள் என்பதை இரண்டு பங்காக்கில் ஆறுகின்றன ஆறில் இரண்டாவதாகிய சோதியை விட்டுவிடில் ஐந்து நாளாகின்றன. இவ்வாறே பனிக்காலத்தையும் குளிர்காலத்தையும் ஒன்றுபடுத்தில் இருதுக்களும் ஐந்தாகின்றன. இருதுக்கள்வருடத்திலும் வருடம்இருதுக்களிலும் நிலைக்கின்றன. இவ்வாற்றுல் ஐந்தெழுத்துக்களைகொண்டது பந்திச் சந்தமாம் எக்ஞம் பாந்தமாம் ஆதலின் இதனுல் எக்ஞத்தையடைகின்முன் என்பது.

---

பிருஷ்டிய ஆறுநாளையும், சந்தோமநான்குநாளையும் விதிக்கின்றது

பிராமணம் 3

**असत्रं वा एतद्यदछन्दोमं यच्छन्दोमा भवन्ति तेन सत्रं देवता एव पृष्ठैरव रुन्धते पशूञ्छन्दोमैरोजो वै वीर्यं पृष्ठानि पशवश्छन्दोमा ओ-जस्येव वीर्ये पशुषु प्रति तिष्ठन्ति ।**

என்பது.

உரை.

இதன், உரையை முன்போல் உரைத்துக் கொள்க என்பது.

வேள்வியிலுள்ள இரவிகளின் எண்புகழப்படுகின்றது

பிராமணம் 4

**सप्तदशरात्रो भवति सप्तदशः प्रजापतिः प्रजापतेराप्त्यै ।**

என்பது.

உரை

*பதினேழு இரவுகளாகின்றன. ஆசிராவய, என்பது முதலியதும் பதினேழு எழுத்துக்களாமாதலின் அவ்வெழுத்துவடிவமாகிய பிரசாபதியை அடைதற்கு இது காரணம் என்பது.*

---

பிராயணீய உதயனீய மென்னும் முதல் கடை வேள்விகளிரண்டையும் விதிக்கின்றது.

பிரமாணம் 5

**अतिरात्रावभितोभवतोऽन्नाद्यस्य परिगृहीत्यै ।**

என்பது

உரை

*முன் பின் செய்யப்படும் அதிராத்திரங்களிரண்டும் அன்னமுதலியவற்றைக் கொள்வதற்குக் காரணமாம் என்பது.*

எட்டாமநுவாகம்
முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

### ஒன்பதாவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிக்குமேல் இருபத்துமூன்று பதங்களைக் கொண்டது.*

விம்சதிராத்திரத்தைக் கூறும் பிராமணங்கள்.

सा विराड्विक्रम्यातिष्ठद्ब्रह्मणा देवेष्वन्नेनासुरेषु ते देवा अका-

मयन्तोभयꣳ सं वृञ्जीमहि ब्रह्म चान्नं चेति त एता विꣳशतिꣳ-

रात्रीरपश्यन्ततो वै त उभय२ँ समवृञ्जत ब्रह्म चान्नं च ब्रह्मवर्चसिनोऽन्नादा अभवन्य एवं विद्वा२ँस एता आसत उभयमेव सं वृञ्जते ब्रह्म चान्नं च ॥ २२ ॥ ब्रह्मवर्चसिनोऽन्नादा भवन्ति द्वे वा एते विराजौ तयोरेव नाना प्रति तिष्ठन्ति विश्शो वै पुरुषो दश हस्त्या अङ्गुलयो दश पद्या यावानेव पुरुषस्तामाप्त्वोत्तिष्ठन्ति ज्योतिर्गौरायुरिति त्र्यहा भवन्तीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुरिमानेव लोकानभ्यारोहन्त्यभिपूर्वं त्र्यहा भवन्त्यभिपूर्वमेव सुवर्गं ॥ २३ ॥ लोकमभ्यारोहन्ति यदन्यतः पृष्ठानि स्युर्विविवध२ँ स्यान्मध्ये पृष्ठानि भवन्ति सविवधत्वायौजो वै वीर्यं पृष्ठान्योज एव वीर्यं मध्यतो दधते बृहद्रथंतराभ्यां यन्तीयं वाव रथंतरमसौ बृहदाभ्यामेव यन्त्यथो अनयोरेव प्रति तिष्ठन्त्येते वै यज्ञस्याञ्जसायनी स्रुती ताभ्यामेव सुवर्गं लोकं यन्ति पराञ्चो वा एते सुवर्गं लोकमभ्यारोहन्ति ये पराचीनानि पृष्ठान्युपयन्ति प्रत्यङ्त्र्यहो भवति प्रत्यवरूढ्या अथो प्रतिष्ठित्या उभयोर्लोकयोर्ऋद्ध्वोत्तिष्ठन्त्यतिरात्रावभितो भवतो ब्रह्मवर्चसस्यान्नाद्यस्य परिगृहीत्यै ॥ २४ ॥ वृञ्जते ब्रह्म चान्नं च सुवर्गमेते सुवर्गं त्रयोविँ२शतिश्च । ॥ ९ ॥

இதில் இருபது இரவுகள் கொண்டயாகங் கூறப்படுகின்றது.

இருபதுநாள்)

அதை விதிக்கின்றது

பிராமணம் 1

**सा विराड्विक्रम्यातिष्ठद्ब्रह्मणा देवेष्वन्नेनासुरेषु ते देवा अकामयन्तोभयꣳ सं वृञ्जीमहि ब्रह्म चान्नं चेति त एता विꣳशतिꣳ रात्रीरपश्यन्ततो वै त उभयꣳ समवृञ्जत ब्रह्म चान्नं च ब्रह्मवर्चसिनोऽन्नादा अभवन्य एवं विद्वाꣳस एता आसत उभयमेव सं वृञ्जते ब्रह्मचान्नंच ब्रह्मवर्चसिनो-ऽन्नादा भवन्ति ।**

என்பது

உரை

தசராத்திராபிமானியாகிய 'விராட்' என்னுந் தேவதை தேவர்களிடத்தில் பிரமவொளியாகவும், அசுரர்களிடத்தில்உணவுப்பொருள் முதலானவடிவமாக வுமிருக்கின்றது.தேவர்கள், அவ்விருவகைகளேயும் யாமே அடைதல் வேண்டு மென விரும்பி மேல்வரும் இருபது இரவுகள் கொண்ட யாகத்தைக்கண்டு பிடித்துச் செய்து அசுரர்களிடத்திலிருந்ததையும் பிடுங்கிக்கொண்டு இவர்க ளே, பிரமவொளி, உணவுப்பொருள் என்னுமிரண்டையுமடைந்தனர். இவ்வா றுணர்ந்து அதைச் செய்கின்றவன் அவ்விருவகைப் பயன்களேயுமடைகின் ருன். மற்றும், உணவு மிக்கருந்துகின்றவனுமாகின்ருன் என்பது. பன்மை பிரமவொளியாகிய வேள்வி நாள்களேப்பற்றியது. ஒருமை வேள்வியைப்பற்றி யீது என்பது.

---

வேள்வியிலுள்ள இருபது இரவுகளேப்புகழ்கின்றது

பிராமணம் 2

**द्वे वा एते विराजौ तयोरेव नाना प्रति तिष्ठन्ति विꣳशो वै पुरुषो दश हस्त्या अङ्गुलयो दश पद्या यावानेव पुरुषस्तमाप्त्वोत्तिष्ठन्ति ।**

என்பது

உரை

இருபதை இரண்டாய்ப் பிரிக்கில் பத்தாகிறது ஆகவே இரண்டு விராட் ஆகின்றன. அவ்விரண்டு பத்தும் தனித்தனி நின்று பிரமவொளியையும், உணவுப் பொருள் முதலியவற்றையுங் கொடுப்பதால் நிறைந்த சம்பத்தை யடைகின்ருன். அல்லது, அறிஞர்கழகத்தும், வணிகர் கழகத்தும் பெருண்ம

யைக் கொடுக்கின்றன. மற்றும், ஒருவனுடைய கைகால்களில் இருபது விரல்களிருக்கின்றன. இதனால் ஒருவனுக்கு எவ்வளவு வேண்டுமோ, அவ்வளவு குணங்களையுமடைகின்றான் என்பது.

---

இனி, அதில், ஒன்பது நாளை விதிக்கின்றது.

பிராமணம் 3

**ज्योतिर्गौरायुरिति त्र्यहा भवन्तीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुरिमानेव लोकानभ्यारोहन्त्यभिपूर्वं त्र्यहा भवन्त्यभिपूर्वमेव सुवर्गं लोकमभ्यारोहन्ति ।**

என்பது

உரை

சோதி, கௌ, ஆயுள் என்னு முதல் மூன்று நாட்களைப்போலவே மற்றைய இரண்டு மூன்று நாட்களும், சோதி கௌ, ஆயுள் என்னும் மூன்றையுமே முறையாய்க் கொண்டவைகளையன்றி மாறுபாடடைந்தில. ஆதலின் மூன்றுலகங்களை யடைவதுடன் முறையாய்ச் சுவர்க்கத்திலும் ஏறுகின்றனன் என்பது.

---

இந்த மும்மைநாட்களுக்கும் மேல் கூறப்போகும் மூன்றுநாட்களுக்கும் இடையில் பிருஷ்டத்தை விதிக்கின்றது.

பிராமணம் 4

**यदन्यतः पृष्ठानि स्युर्विविवधः स्यान्मध्ये पृष्ठानि भवन्ति सविवधत्वायौजो वै वीर्यं पृष्ठान्योज एव वीर्यं मध्यतो दधते बृहद्रथंतराभ्यां यन्तीयं वाव रथंतरमसौ बृहदाभ्यामेव यन्त्यथो अनयोरेव प्रति तिष्ठन्त्येते वै यज्ञस्याञ्जसायनी स्रुती ताभ्यामेव सुवर्गं लोकं यन्ति ।**

என்பது.

உரை

முற்கூறிய மூன்று நாட்களுக்குள் முடிவிலுள்ள மூன்றுநாட்கும், மேல்வரும் மூன்று நாட்களுக்கும் நடுவில் பிருஷ்டங்களிருத்தலின் இருபுறத்தும் உறிக்கட்டிச் சுமை எடுக்கும் தடிபோலாயிற்று. மற்றவை முன் போன்றன என்பதாம்.

---

இருபத்தோர்நாள்)

அவரோகணமாகிய மூன்று நாளை விதிக்கின்றது

பிராமணம் 5

**पराञ्चो वा एते सुवर्गं लोकमभ्यारोहन्ति ये पराचीनानि पृष्ठान्युपयन्ति प्रत्यङ्त्र्यहो भवति प्रत्यवरूढ्या अथो प्रतिष्ठित्या उभयोर्लोकयोर्ऋध्वोत्तिष्ठन्ति ।**

என்பது

உரை

இதன் உரை முன்போல் உரைத்துக் கொள்க என்பது.

---

பிராயணீய உதயனீயங்களை விதிக்கின்றது.

பிராமணம் 6

**अतिरात्रावभितो भवतो ब्रह्मवर्चसस्यान्नाद्यस्य परिगृहीत्यै ।**

என்பது.

உரை

இதன் உரையையும் முன்போல் உரைத்துக் கொள்க.

ஒன்பதாமநுவாகம்
முற்றிற்று.

---

**ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்**

**பத்தாவது அநுவாகம்**

ஐந்து பஞ்சாதிக்குமேல் இருபத்தொரு பதங்களைக் கொண்டது.

ஏகவிம்சதிராத்திரத்தைக் கூறும் பிராமணங்கள்.

**असावादित्योऽस्मिँल्लोक आसीत्तं देवाः पृष्ठैः परिगृह्य सुवर्गं लोकमगमयन्परैरवस्तात्पर्यगृह्णन्दिवाकीर्त्येन सुवर्गे लोके प्रत्यस्थापयन्परैः परस्तात्पर्यगृह्णन्पृष्ठैरुपावारोहन्त्स वा असावादित्योऽ-**

मुष्मिँल्लोके परैरुभयतः परिगृहीतो यत्पृष्ठानि भवन्ति सुवर्गमेव तैर्लोकं यजमाना यन्तिपरैरवस्तात्परिगृह्णन्ति दिवाकीर्त्येन ॥२५॥ सुवर्गे लोके प्रति तिष्ठन्ति परैःपरस्तात्परि गृह्णन्ति पृष्ठैरुपावरोहन्ति यत्परे परस्तान्न स्युः पराञ्चस्सुवर्गाल्लोकान्निष्पद्येरन्यदवस्तान्न स्युः प्रजा निर्दहेयुरभितो दिवाकीर्त्यं परस्सामानो भवन्ति सुवर्ग एवैनाँल्लोक उभयतः परि गृह्णन्ति यजमाना वै दिवाकीर्त्यꣳ संवत्सरःपरस्सामानोऽभितो दिवाकीर्त्यं परस्सामानो भवन्ति संवत्सर एवोभयतः ॥ २६ ॥ प्रति तिष्ठन्ति पृष्ठं वै दिवाकीर्त्यं पार्श्वे परःसामानोऽभितो दिवाकीर्त्यं परस्सामानो भवन्ति तस्मादभितः पृष्ठं पार्श्वे भूयिष्ठा ग्रहा गृह्यन्ते भूयिष्ठꣳ शस्यते यज्ञस्यैव तन्मध्यतो ग्रन्थिं ग्रथ्नन्त्यविस्रꣳसाय सप्तगृह्यन्ते सप्त वै शीर्षण्याः प्राणाः प्राणानेव यजमानेषु दधति यत्पराचीनानि पृष्ठानि भवन्त्यमुमेव तैर्लोकमभ्यारोहन्ति यदिमं ल कं न ॥ २७ ॥ प्रत्यवरोहेयुरुद्वा माद्येयुर्यजमानाः प्र वा मीयेरन्यत्प्रतीचीनानि पृष्ठानि भवन्तीममेव तैर्लोकं प्रत्यवरोहन्त्यथो अस्मिन्नेव लोके प्रति तिष्ठन्त्यनुन्मादायेन्द्रो वा अप्रतिष्ठित आसीत्स प्रजापतिमुपाधावत्तस्मा एतमेकविꣳशतिरात्रं प्रायच्छत्तमाऽहरत्तेनायजत ततो वै स प्रत्यतिष्ठद्ये बहुयाजिनोऽप्रतिष्ठिताः ॥ २८ ॥ स्युस्त एकविꣳशतिरात्रमासीरन्द्वादश मासाः पञ्चर्तवस्त्रय इमे लोका असावादित्य एकविꣳश एतावन्तो वै देवलोकास्तेष्वेव यथापूर्वं प्रति तिष्ठन्त्यसावादित्यो न

व्यरोचत स प्रजापतिमुपाधावत्तस्मा एतमेकविꣳशतिरात्रं प्राय-
च्छत्तमाऽहरत्तेनायजत ततो वै सोऽरोचत य एवं विद्वाꣳस एक-
विꣳशतिरात्रमासते रोचन्त एवैकविꣳशतिरात्रो भवति रुग्वा एक-
विꣳशो रुचमेव गच्छन्त्यथो प्रतिष्ठामेव प्रतिष्ठा ह्येकविꣳशोऽति-
रात्रावभितो भवतो ब्रह्मवर्चसस्य परिगृहीत्यै ॥ २९ ॥ गृह्णन्ति
दिवाकीर्त्यनैवोभयतो नाप्रतिष्ठिता आसत एकविꣳशतिश्च ।॥१०॥

இதில், இருபத்தொரு இரவுகள்கொண்ட யாகம் கூறப்படுகின்றது. அதில், முதலில் அதிராத்திரம், பிறகு பிருஷ்டிய நாட்கள், ஸ்வராசமான மூன்று விசேட நாட்கள், திவாகீர்த்தியம் என்பது ஒருநாள். மீண்டும், ஸ்வராசமான மூன்றுநாட்கள், மீண்டும் பிருஷ்டிய ஷட்நாட்கள், பிறகு அதிராத்திரம் என்பது நாட்களின் முறையாம்.

அதை விதிப்பதற்கு முன்னுரை கூறுகின்றது.

பிராமணம் 1

**असावादित्योऽस्मिँल्लोक आसीत्तं देवाः पृष्ठैः परिगृह्य सुवर्गं लोकमगमय-न्परैरवस्तात्पर्यगृह्णन्दिवाकीर्त्येन सुवर्गे लोके प्रत्यस्थापयन्परैः परस्तात्प-र्यगृह्णन्पृष्ठैरुपावारोहन्त्स वा असावादित्योऽमुष्मिँल्लोके परैरुभयतः परि-गृहीतः।**

என்பது

**உரை**

சுவர்க்கத்தில் காணப்படும் சூரியன் முன்னர் பூலோகத்திலிருந்தனன் அச்சூரியனை, தேவர்கள் அச்சூரியனை எடுத்து பிருஷ்டம் என்னும் ஆறுநாட்களாலும் சுவர்க்கத்தில் நிறுவினார்கள். அங்கு, பரம் என்னும் சாமவிசேடத்தாலாய நாள்விசேடங்களாலும் சுவர்க்கத்திலேயே பாடத்தககது. (திவாகீர்த்தனம்.) சாமத்தாலாய நாள் விசேடங்களாலும கீழேவராதபடி தடை செய்து விட்டனர் என்பதாம். பிறகு, அநுட்டித்த பரா என்னும் அந்நாட்களால் சூரியன் அதற்கு மேல் போகாதபடி தடை செய்துவிட்டனர். இவ்வாறு அச்சூரியன் இரண்டிடத்துந் தடை செய்யப்பட்டதமையின் கீழும் மேலும் போகாமல் அங்கேயே யிருக்கும்படி பிருஷ்ட ஆறுநாட்களால் செய்துவிட்டனர் என்பது.

அந்த நாட்களை விதிக்கின்றது.

பிராமணம் 2

यत्पृष्ठानि भवन्ति सुवर्गमेव तैर्लोकं यजमाना यन्ति परैरवस्तात्परिगृह्ण-
न्ति दिवाकीर्त्येन सुवर्गे लोके प्रति तिष्ठन्ति पैरः परस्तात्परि गृह्णन्ति
पृष्ठैरुपावरोहन्ति ।

என்பது

உரை

இவ் வேள்வியைச் செய்த எசமானனும் சூரியனைப் போலவே வடிவை அடைகின்றான். ஆகலின் சூரியனுக்குரைத்ததுபோல் உரைத்துக்கொள்க என்பது.

---

திவாகீர்த்தியம் என்னுநாளுக்கு முன்னும் பின்னும் அநுட்டிக்க வேண்டிய பரா என்னும் நாட்களை எதிர்மறை முகத்தால் புகழ்கின்றது

பிராமணம் 3

यत्परे परस्तान्न स्युः पराञ्चः सुवर्गाल्लोकान्निष्पद्येरन्यदवस्तान्न स्युः प्रजा
निर्दहेयुरभितो दिवाकीर्त्यं परस्सामानो भवन्ति सुवर्ग एवैनाँल्लोक उभ-
यतः परि गृह्णन्ति ।

என்பது

உரை

மேலேயுள்ள பரா என்னும் நாட்கள் இல்லையேல், சுவர்க்கத்தையடைந்த எசமானனைத் தடைப்படுத்துவது ஒன்றும் இல்லாமையால் சுவர்க்கத்திற்கு மேலேயுஞ் செல்வன், கீழேயும் பரா என்னும் நாட்கள் இல்லாவிடில் தடையொன்றுமின்மையின் ஆதித்தவடிவர்களான எசமானர்களனைவரும பூமியிலுள்ள பிரசைகளனைத்தையும் ஒரு கணத்தில் எரித்துவிடுவார்கள். ஆதலின், திவாகீர்த்தி என்னு நாளுக்கு முன்னும் பின்னும் பரா என்னுஞ் சாபத்தாலாய பரா என்னு நாட்கள் அநுட்டிக்க வேண்டியவைகள் என்பது.

---

இருபத்தோருநாள்)

மற்றேருவகையால், திவாகீர்த்தியம் என்னும் நாளையும், பராஎன்னும் சாம நாளையும் புகழ்கின்றது

பிரமாணம் 4

**यजमाना वै दिवाकीर्त्यꣳ संवत्सरः परस्सामानोऽभितो दिवाकीर्त्यं परःसामानो भवन्ति संवत्सर एवोभयतः प्रति तिष्ठन्ति ।**

என்பது.

உரை

திவாகீர்த்தியம் எசமானனும், பரா என்னும் சாமம் வருடமாம். ஆதலின், இருபக்கமும் அவற்றை அநுட்டானஞ் செய்யில் எசமானர்கள் மேலும் கீழும் வருட தேவதையில் நிலைத்திருக்கின்றார்கள் என்பது.

---

மீண்டும் மற்றேருவகையாற் புகழ்கின்றது

பிராமணம் 5

**पृष्ठं वै दिवाकीर्त्यं पार्श्वे परस्सामानोऽभितो दिवाकीर्त्यं परस्सामानो भवन्ति तस्मादभितः पृष्ठं पार्श्वे भूयिष्ठा ग्रहा गृह्यन्ते भूयिष्ठꣳ शस्यते यज्ञस्यैव तन्मध्यतो ग्रन्थिं ग्रथ्नन्त्यविस्रꣳसाय ।**

என்பது

உரை

ஒரு மனிதனுடைய பின்புறத்தில், நடு எலும்பு இருபுறமும் இருப்பது போல் திவாகீர்த்தியம் பின்புறமாம். பர சாமாக்கள் இரண்டும் நடுப் பக்கங்கள் போன்றதாம். மற்றும், இந்த பரசாமாவில் அதிக்கிராகியக் கிரகங்களும் மிகுதியாகக் கிரகிக்கப்படுகின்றன. மற்றும், திவாகீர்த்தியமும் பரசாமாகும் கவாமயனத்தில் உண்டானவைகள். அதில், விதிவாக்கியத்தால் வந்த அதிக்கிராகியங்களை விட மூன்று அதிக்கிராகியங்கள் மிகுதியாக மூன்றாங் காண்டத்தில் 'அத்ப்ய;, என்பது முதலிய மந்திரத்தால் விதிக்கப்பட்டிருக்கின்றன. அதனுடைய விகிருதியாமாதலின இங்கும் அதிக்கிராகியங்கள் கிரகிக்கப்படுகின்றன. இதனால், சஸ்திரங்களும் அதிகமாய்ப்பாடப்படுகின்றன. இவ்வாறு மிகுந்த அநுட்டானத்தால் இருபத்தொரு இரவுகொண்ட எக்ஞம் உறுதியாக்கப்படுகின்றது. இதுவும், எக்ஞம் நழுகிவிடாதிருத்தற் பொருட்டு என்பது.

---

மீண்டும் திவாகீர்த்தியத்தில் விசேடத்தை விளக்குகின்றது

### பிராமணம் 6

**सप्त गृह्यन्ते सप्त वै शीर्षण्याः प्राणाः प्राणानेव यजमानेषु दधति ।**

என்பது

உரை

திவாகீர்த்தியத்திற்கு முந்திய நாட்களில் ஒவ்வொரு அதிக்கிரககியங்கள் முறையாய் மூன்று கிரகிக்கப்படுகின்றன. பிந்திய தினங்களில் அவைகளை அவரோகணமாய்க் கிரகிக்கப்படுகின்றன. இவ்வாறு திவாகீர்த்தியதினத்தில் ஆறு கிரகிக்கப்படுகின்றன. அவற்றின் நடுவில், "உதுத்யம், என்பது முதலிய மந்திரத்தால் ஏழாவதுங்கிரகிக்கப்படுகின்றது. இவ்வாறு அத்தினத்தில ஏழு அதிக்கிரகங்களாகின்றன. அவ்வேழும் தலையின் ஏழு துளைகளிலும் உள்ள பிராணன்கள் போன்றவைகள். ஆதலின் இதை அநுட்டித்தால் எசமானர்களிடத்தில் பிராணன்களை நிறுவுகின்றார்கள். இவ்வாற்றால் திவாகீர்த்தியமமானது பெருமையுடையதாம் என்பது.

---

அவரோகணமாகிய பிருஷ்டிய ஆறுநாளை விதிக்கின்றது

### பிராமணம் 7

**नत्पराचीनानि पृष्ठानि भवन्त्यमुमेव तैर्लोकमभ्यारोहन्ति यदिमं लोकं न प्रत्यवरोहेयुरुद्वा माद्येयुर्यजमानाः प्र वा मीयेरन्यत्प्रतीचीनानि पृष्ठानि भवन्तीममेव तैर्लोकं प्रत्यवरोहन्त्यथो अस्मिन्नेव लोके प्रति तिष्ठन्त्य-नुन्मादाय ।**

என்பது.

உரை

திவாகீர்த்தியங்கட்கு ஒப்பான பரசாமங்கட்குமுன் அநுட்டிக்கப்படும் ஆரோகணமான பிருஷ்டசாம நாட்களால் எசமானர்கள் சுவர்க்கத்திலேறுகின்றார்கள். அதற்குமேல், அவரோகண நாட்கள் அநுட்டிக்கவில்லையேல் இவ்வுலகை மறந்து பைத்தியங் கொள்வர். அல்லது இறப்பர். ஆதலின் அவரோகணமான பிருஷ்ட நாள்கள் அநுட்டித்தக்கவைகள். இவைகளால் இவ்வுலகிற்கு இறங்குகின்றார்கள். இவ்வுலகிலும் பெருமையுடையவர்களும் பைத்திய மற்றவர்களுமாகின்றார்கள் என்பது.

---

இருபத்தொருநாள்)

முன், சுவர்க்கத்தின் பொருட்டு இவ்வேள்வி விதிக்கப்பட்டது. இப்போது பெருமையின் பொருட்டு விதிக்கப்படுகின்றது.

பிராமணம் 8

इन्द्रो वा अप्रतिष्ठित आसीत्स प्रजापतिमुपाधावत्तस्मा एतमेकविंशतिरात्रं प्रायच्छत्तमाऽहरत्तेनायजत ततो वै स प्रत्यतिष्ठद्ये बहुयाजिनोऽप्रतिष्ठिताः स्युस्त एकविंशतिरात्रमासीरन्द्वादश मासाः पञ्चर्तवस्त्रय इमे लोका असावादित्य एकविंश एतावन्तो वै देवलोकास्तेष्वेव यथापूर्वं प्रति तिष्ठन्ति ।

என்பது.

உரை

இந்திரன், பெருமையில்லாதவனாயிருந்து பிரசாபதியின் உபதேசத்தால் இருபத்தொருநாள் கொண்ட யாகத்தை யுணர்ந்து தேடிச் செய்து பெருமை யடைந்தனன். அவ்வாறே பல்வகை யாகஞ் செய்தும் பெருமையடையாத எசமானர்கள், இந்த ஏகவிம்சதிராத்திர யாகத்தைச் செய்தால் இருபத்தொருஎண் ஒப்பாகிய பன்னிரண்டு மாதாபிமானி தேவதைகளிலும், ஐந்து இருது அபிமானி தேவதைகளிடத்தும், மூன்றுலகங்களிலும், ஆதித்திய லோகத்திலும முறையாய் முன்போல் பெருமையயைடகின்றார்கள். அதாவது, அவ்வுலகில் வாழ்கின்றவர்களைப் போல் பெருமையாய் வாழ்கின்றார்கள் என்பது.

---

இனி மற்றெருபயனைக்குறித்து மீண்டும் விதிக்கின்றது

பிராமணம் 9

असावादित्यो न व्यरोचत स प्रजापतिमुपाधावत्तस्मा एतमेकविंशतिरात्रं प्रायच्छत्तमाऽहरत्तेनायजत ततो वै सोऽरोचत य एवं विद्वांस एक विंशति रात्रमासते रोचन्त एवैकविंशतिरात्रो भवति रुग्वा एकविंशो रुचमेव गच्छन्त्यथो प्रतिष्ठामेव प्रतिष्ठाह्येकविंशः ।

என்பது.

உரை

இச்சூரியன், அசுரர்கள் மேகங்கள் பனி என்பன முதலானவைகளால் மறைக்கப்பட்டு நன்கு விளங்காமலிருந்தனன். பிறகு, பிரசாபதியின் உபதேசத்தால் இருபத்தொரு நாட்கொண்ட இவ்வேள்வியைச் செய்து மிகுந்த

பிரகாசத்துடன்விளங்கினன். அதுபோல் எசமானர்களும், வித்தை முதலான குணங்களால் விளக்கமுடையவர்ளாகாமலிருக்கின் இவ்வேள்வியைச் செய்யில் மிகுந்த பிரகாசத்துடன் விளங்குவார்கள். மற்றும், இருபத்தொன்று எண்ணுமாதலின் இருபத்தொரு ஸ்தோமங்களால் சம்பத்தித்து விளக்கப்படும் ஆதலின் ஈண்டுப்பிரமவொளியே கொள்ளத் தக்கது. அது, திரிவிருத் முதலான ஸ்தோமங்களிலிருந்து பெரிதாமாதலின் விளக்கமுடையதாம். அவ்வாறே இதை அநுட்டிக்கின்றவர்களும் ஏகவிம்சதிஸ்தோமம் பெருமைக்கு ஆதாரமாதலின் பிரகாசத்தையடைகின்றார்கள் என்பது.

---

பிரயாணீய உதயனீயங்களை விதிக்கின்றது

பிராமணம் 10

अतिरात्रावभितो भवतोब्रह्मवर्चसस्य परि गृहीत्यै ।

என்பது

உரை

முன்னும் பின்னும் இரண்டு அதிராத்திரங்களாம். இவை, வித்தை முதலியவற்றை விளக்குவதற்குக் காரணமாதலின் ஈண்டுப் பிரமவொளியையடைதற்குக் காரணமாம் என்பது.

பத்தாமநுவாகம்

முற்றிற்று.

---

ஏழாங் காண்டம் மூன்றாம் பிரபாடகம்

பதினோராவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிகட்குமேல் முப்பத்திரண்டு பதங்களைக் கொண்டது.

ஆப்தி மந்திரங்கள்.

अर्वाङ्यज्ञस्सं क्रामत्वमुष्मादधि मामभि । ऋषीणां यःपुरोहितः ।
निर्दवं निर्वैर कृत्वा विष्कन्धं तस्मिन्हीयतां योऽस्मान्द्वेष्टि । शरीरं
यज्ञशमलं कुसीदं तस्मिन्त्सीदतु योऽस्मान्द्वेष्टि । यज्ञयज्ञस्य यत्तेज-

ஆப்தி மந்திரம்)

स्तेन सं क्राममामभि । ब्राह्मणानृत्विजो देवान्यज्ञस्य तपसा ते सवाहमा हुवे । इष्टेन पक्कमुप ॥ ३० ॥ ते हुवे सवाहम् । सं ते वृञ्जे सुकृत१ सं प्रजां पशून् । प्रैषान्त्सामिधेनीराघारावाज्यभागा-वाश्रुतं प्रत्याश्रुतमा शृणामि ते । प्रयाजानूयाजान्त्स्विष्टकृतमिडा-माशिष आ वृञ्जे सुवः । अग्निनेन्द्रेण सोमेन सरस्वत्या विष्णुना देवताभिः । याज्यानुवाक्याभ्यामुप ते हुवे सवाहं यज्ञमा ददे ते वषट्कृतम् । स्तुत१ शस्त्रं प्रतिगरं ग्रहमिडामाशिषः ॥ ३१ ॥ आ वृञ्जे सुवः । पत्नीसंयाजानुप ते हुवे सवाह१ समिष्टयजुरा ददे तव । पशून्त्सुतं पुरोडाशान्त्सवनान्योत यज्ञम् । देवान्त्सेन्द्रानुप ते हुवे सवाहमग्निमुखान्त्सोमवतो ये च विश्वे ॥ ३२ ॥ उप ग्रह-मिडामाशिषो द्वात्रि१शच्च । ॥ ११ ॥

. எஞ்சிய அநுவாகங்களால் அசுவமேத மந்திரங்கள் கூறப்படுகின்றன; அவற்றுள், இதில், 'ஆப்தி, என்னும் எட்டு ஆகுதிகளின் மந்திரங்கள் கூறப் படுகின்றன. ஆப்தி = சுவர்க்கத்தையடைதல்.

முதல் மந்திரம்

अर्वाङ्यज्ञस्सं क्रामत्वमुष्मादधि मामभि । ऋषीणां यः पुरोहितः ।

என்பது

உரை

நுண்ணறிவாளர்களான இருடிகள் என்னும் எசமானர்கட்கு எல்லாப் பொருள்களையுமடைவதற்குச் சாதகமாக முதலில் நிறுவப்பெற்ற அசுவமேதமாகிய இவ்வேள்வி, ஏனைய எசமானர்களை விட்டுவிட்டு என்னைக்குறித்து எனக்கு முன்னர் அன்புமிகுதியுடன் வருக என்பது.

---

(ஆப்தி மந்திரம்

## இரண்டாவது மந்திரம்.

**निर्देवं निर्वीरं कृत्वा विष्कन्धं तस्मिन्[illegible] यो[illegible]द्वेष्टि [illegible]शरीरं यज्ञशमलं कुसीदं तस्मिन्त्सीदतु योऽस्मान्द्वेष्टि ।**

என்பது.

### உரை

என்னைத் துவேஷிக்கின்றவனுடைய உடம்பு, வேள்விக்குரிய தேவதைகளற்றதும், அதாவது தெய்வபக்தியற்றதும், வீரமுடைய புத்திரர்கள் வேலையாளர்களற்றதும், தோள்முதலிய அவயவங்கள் பழுதுடையதுமாகுக. மற்றும், என்னைத் துவேஷிப்பவனிடத்தில் குற்றமுடைய [illegible] செய்து பிழைக்குந்தன்மை இருக்குக. அஃதன்றியும் [illegible] எவர்க்கு[illegible] இருப்பவனாகுக என்பது.

---

## மூன்று மந்திரம்

**यज्ञ यज्ञस्य यत्तेजस्तेन सं क्राममामभि । ब्राह्मणानृत्विजो देवान्यज्ञस्य तपसा ते सवाहमा हुवे ।**

என்பது

### உரை

அசுவமேதம் என்னும் யாகமே! எக்ஞமாகிய உனது பயனுடன்கூட எம்மிற் புகுவாயாக. சோமரசம் பிழிவதுடன்கூடிய எக்ஞமே! நன்கு அநுட்டிக்கப்பெற்ற உனது வலியால் அநுக்கிரகத்தையடைந்த யான் அந்தணர்களையும், இருத்துவிக்கு உருவத்தில் அழைக்கின்றேன் என்பது.

---

## நான்கா மந்திரம்.

**इष्टेन पक्कमुप ते हुवे सवाहम् । सं ते वृञ्जे सुकृत९ सं प्रजां पशून् ।**

என்பது.

### உரை

எக்ஞமே! உன் வழிபாட்டால் நான் பக்குவமாகிய அன்னத்தை அருகில் அழைக்கின்றேன். மற்றும், உனது அருளால் புண்ணியத்தை தேடுகின்றேன். அங்ஙனமே பிரசைகளையும் பசுக்களையுந் தேடுகின்றேன் என்பது.

---

ஆப்தி மந்திரம்)

ஐந்தா மந்திரம்.

प्रैषान्त्सामिधेनीराघारावाज्यभागावाश्रुतंप्रत्याश्रुतमा श्रृणामि ते। प्रयाजानूयाजान्त्स्विष्टकृतमिडामाशिष आ वृञ्जे सुवः।

என்பது

உரை

பிரேஷை மந்திரங்கள், (ஏவுதல்) சாமிதேனி (சமித்து) மந்திரங்கள் ஆகார (தாரையாய்ச் செய்யும்) ஹோமங்கள், ஆச்யபாகங்கள் என்னும் எகஞங்களனைத்தையும் சாத்திரங்களிற் கேட்டுத் தேடிக்கொள்கின்றேன். அங்ஙனமே, பிரயாசை, அநுயாசை, சுவிஷ்டகிருத, இடை, ஆசீர்வாதங்கள் எக்ஞத்தன் பயனாகிய சுவர்க்கம் என்னுமிவைகளனைத்தையுந் தேடுகின்றேன் என்பது.

---

ஆறுமந்திரம்

अग्निनेन्द्रेण सोमेन सरस्वत्या विष्णुना देवताभिः। याज्यानुवाक्याभ्यामुप ते हुवे सवाहं यज्ञमा ददे ते वषट्कृतम्।

என்பது.

உரை

அக்கினி, இந்திரன், சோமன், சரஸ்வதி, விஷ்ணு, யாச்யை, புரோநுவாக்கியங்கள் என்பவைகளுடன் கூடிய யான் நீ சித்தியாதற்பொருட்டு வேட்போன்முதலானோர்களை அருகில் அழைக்கின்றேன். அங்ஙனமே, நீ சித்தியாதற்பொருட்டு வஷட்காரத்துடன் முழு எக்ஞத்தையும் ஏற்றுக்கொள்கின்றேன் என்பது.

---

ஏழாமந்திரம்

स्तुतꣳ शस्त्रं प्रतिगरं ग्रहमिडामाशिष आ वृञ्जे सुवः। पत्नीसंयाजानुप ते हुवे सवाहꣳ समिष्टयजुरा ददे तव।

என்பது

உரை

துதி, சஸ்திர (துதிவிசேட)ம், பிரதிகாம், (பதில் சொல்லல்) கிரகம், இடை, ஆசீர்வாதங்கள், எக்ஞபயனாகிய சுவர்க்கம் என்னுமிவைகளை நிறையத் தேடுகின்றேன். எக்ஞமே! நீ சித்தியாதற்பொருட்டு, பத்நீசம்யாசை என்

னும் ஒரு யாகத்தைக் குறித்து இருத்துவிக்குககளை அருகில் அழைக்கின்றேன். நசுத்தியாதற் பொருட்டு சமிஷ்டயகைசையும ஏறறுக்கொளகின்றேன் என்பது

---

எட்டாவது மந்திரம்

पशून्त्सुतं पुरोडाशान्त्सवनान्योत यज्ञम् देवान्त्सेन्द्रानुप ते हुवे सवा-
हमग्निमुखान्त्सोमवतो ये च विश्वे ।

என்பது

உரை

அக்கினி சோமப்பசுக்கள் முதலான பசுக்களையும், சவனீய புரோடசம் பிராதசவன முதலான வைகளையும் அவைகளால் எக்ஞமுழுதையும் அருகில் அழைக்கின்றேன். மற்றும், எக்ஞமே நீ சித்தியாதற் பொருட்டு இந்திரனுடன் கூடஇருக்கின்றவர்களும், அக்கினியை முகமாகவுடையவர்களும், சோமத்தை யுடையவர்களுமான தேவர்களையும் அழைக்கின்றேன். மற்றும் ஏனைய விசுவ தேவர்களையும் அழைக்கின்றேன் என்பது.

பதினோராமநுவாகம்
முற்றிற்று.

---

ஏழாங் காண்டம மூன்றும் பிரபாடகம்

பன்னிரண்டாவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் நான்கு பதங்களைக் கொண்டது.

பரியாப்தி மந்திரங்கள்.

भूतं भव्यं भविष्यद्वषट्त्स्वाहा नम ऋक्साम यजुर्वषट्त्स्वाहा
नमो गायत्री त्रिष्टुञ्जगती वषट्त्स्वाहा नमः पृथिव्यन्तरिक्षं द्यौर्व-
षट्त्स्वाहा नमोऽग्निर्वायुस्सूर्यो वषट्त्स्वाहा नमः प्राणो व्यानोऽ-
पानो वषट्त्स्वाहा नमोऽन्नं कृषिर्वृष्टिर्वषट्त्स्वाहा नमः पिता पुत्रः

पौत्रो वषट्त्स्वाहा नमो भूर्भुवस्सुवर्वषट्त्स्वाहा नमः ॥३३॥ भुवं-श्चत्वारि च । ॥ १२ ॥

இதில் பரியாப்தி என்னும் மந்திரங்கள் கூறப்படுகின்றன. பரியாப்தி = சுவர்க்கத்திற் பரவுதல்.

முதலாவது மந்திரம்

भूतं भव्यं भविष्यद्वषट्त्स्वाहा नमः ।

என்பது.

உரை

முக்காலங்களிமுள்ள சத்தியங்கட்கு இது அருப்பணமாகுக. வஷட் சுவாஹா நம: என்னுஞ் சொற்களால் ஈண்டுச் சத்தியங்கள் கொள்ளப்படுகின்றன என்பது.

---

மேலேயுள்ள மந்திரங்களைக் கூறுகின்றது.

மந்திரங்கள் 2–9

ऋक्साम यजुर्वषट्त्स्वाहा नमो गायत्री त्रिष्टुब्जगती वषट्त्स्वाहा नमः पृथिव्यन्तरिक्षं द्यौर्वषट्त्स्वाहा नमोऽग्निर्वायुस्सूर्यो वषट्त्स्वाहा नमः प्राणो व्यानोऽपानो वषट्त्स्वाहा नमोऽन्नं कृषिर्वृष्टिर्वषट्त्स्वाहा नमः पिता पुत्रः पौत्रो वषट्त्स्वाहा नमो भूर्भुवस्सुवर्वषट्त्स्वाहा नमः ।

என்பது

உரை

முக்காலங்களிலும் உண்மையாயுள்ள இருக்கு எசுர் சாமங்கட்கும், காயத்திரி திரிஷ்டுப் என்னும் சதிகட்கும், மண் விண் சுவர்க்கம் என்னும் உலகங்கட்கும், அக்கினி வாயு சூரியன் என்பவர்கட்கும், பிராண வியான அபானன்கட்கும், அன்னம் உழவுத் தொழில் மழை என்பவைகட்கும், தந்தை மகன் பேரன் என்பவர்கட்கும், பூ:புவ: சுவ: என்பவைகட்கு இது அர்ப்பணமாகுக. மேற்கூறிய மந்திரத்தால் ஒரு ஹோமமும், இம்மந்திரங்களால் எட்டு ஹோமங்களுஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

பன்னிரண்டாமநுவாகம்
முற்றிற்று.

## ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## பதின்மூன்றுவது அநுவாகம்

ஒருபஞ்சாதிக்கு மேல் பதினெட்டுப்பதங்களைக் கொண்டது

ஆபூமந்திரங்கள்.

आ मे गृहा भवन्त्वा प्रजा म आ मा यज्ञो विशतु वीर्यावान्। आपो देवीर्यज्ञिया माऽऽ विशन्तु सहस्रस्य मा भूमा मा प्र हासीत्। आ मे ग्रहो भवत्वा पुरोरुक्स्तुतशस्त्रे माऽऽविशतां समीची। आदित्या रुद्रा वसवो मे सदस्याःसहस्रस्य मा भूमा मा प्र हासीत्। आ माऽग्निष्टोमो विशतूक्थ्यश्चातिरात्रो माऽऽविशत्वा-पिशर्वरः। तिरोअह्निया मा सुहुता आ विशन्तु सहस्रस्य मा भूमा मा प्र हासीत्॥ ३४॥ अग्निष्टोमो विशत्वष्टादश च।

இதில், ஆபூ என்னும் ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றது.

முதலாவது மந்திரம்

आ मे गृहा भवन्त्वा प्रजाम आ मा यज्ञो विशतु वीर्यावान्। आपो देवीर्यज्ञियामाऽऽ विशन्तु सहस्रस्य मा भूमा मा प्र हासीत्।

என்பது

உரை

எனக்கு நல்ல வீடுகள் உண்டாகுக, மற்றும், நல்ல பிரஜைகளும் உண்டாகுக. பயனுடைய எக்ஞமும் எனக்குண்டாகுக எக்ஞத்திற்குரிய நீராகிய தேவதையும் எம்மையடைக. ஆயிரக்கணக்கான மிகுந்த செல்வங்களும் ஒரு போதும் எம்மைவிட்டு நீங்காதவைகளாகுக என்பது.

ஆபூமந்திரம்)

### இரண்டாவது மந்திரம்

**आ मे ग्रहो भवत्वा पुरोरुक्स्तुतशस्त्रे माऽविशतां समीची । आदि-
त्या रुद्रा वसवो मे सदस्यास्सहस्रस्य मा भूमा मा प्र हासीत् ।**

என்பது

உரை

எனக்கு, ஐந்திரவாயவம் முதலான சோமரசக் கிரகபாத்திரங்களும் உண்டாகுக. கிரகிப்பதற்கு முன் படிக்க வேண்டிய மந்திரங்களும் உண்டாகுக. அவ்வாறே, நல்ல துதி சஸ்திரம் என்பவைகளும் எமக்குவருக. ஆதித்தர் முதலான தேவர்களும் சபையிலுள்ள அந்தணர்களும் எம்பால் வருவார்களாக. ஆயிரக்கணக்காய்ப் பெருகிய செல்வம் ஒருபோதும் எம்மைவிட்டு நீங்காததாகுக என்பது.

---

### மூன்றாவது மந்திரம்

**आ माऽग्निष्टोमो विशतूक्थ्यश्चातिरात्रो माऽविशत्वापिशर्वरः । तिरोअह्नि-
या मा सुहुता आ विशन्तु सहस्रस्य मा भूमा मा प्र हासीत् ।**

என்பது

உரை.

சோமயாகத்தின் முதலாம் பகுதியாகிய அக்கினிஷ்டோமம் எமக்கு உண்டாகுக. இரண்டாம்பகுதியாகிய உக்த்யமும் எமக்கு உண்டாகுக. இரவில் ஓதும் துதிகளையுடையதும் நான்காம் பகுதியுமாகிய அதிராத்திரமும் எமக்கு உண்டாகுக. அங்ஙனமே இரவில் பிரயோகஞ்செய்யும் சோம விசேடமும் எமக்கு உண்டாகுக. மற்றும், ஆயிரக்கணக்காகப் பெருகிய செல்வம் ஒருபோதும் எம்மைவிட்டு நீங்காததாகுக என்பது.

பதின்மூன்றாமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## பதினான்காவது அநுவாகம்

ஒருபஞ்சாதிக்குமேல் ஒருபதத்தைக் கொண்டது

அநுபூமந்திரங்கள்

अग्निना तपोऽन्वभवद्वाचा ब्रह्म मणिना रूपाणीन्द्रेण देवान्वातेन प्राणान्त्सूर्येण द्यां चन्द्रमसा नक्षत्राणि यमेन पितृन्राज्ञा मनुष्यान्फलेन नादेयानजगरेण सर्पान्व्याघ्रेणाऽऽरण्यान्पशूञ्छ्येनेन पतत्रिणो वृष्णाऽश्वानृषभेण गा बस्तेनाजा वृष्णिनाऽवीर्व्रीहिणाऽन्नानि यवेनौषधीर्न्यग्रोधेन वनस्पतीनुदुम्बरेणोर्जं गायत्रिया छन्दा ँसि त्रिवृता स्तोमान्ब्राह्मणेन वाचम् ॥ ३५ ॥ ब्राह्मणेनैकं च ॥ ॥ १४ ॥

இதில் 'அநுபூ,என்னும் ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன

மந்திரம் 1

अग्निना तपोऽन्वभवद्वाचा ब्रह्म मणिना रूपाणीन्द्रेण देवान्वातेन प्राणान्त्सूर्येण द्यां चन्द्रमसा नक्षत्राणि यमेन पितृन्राज्ञा मनुष्यान्फलेन नादेयानजगरेण सर्पान्व्याघ्रेणाऽऽरण्यान्पशूञ्छ्येनेन पतत्रिणो वृष्णाऽश्वानृषभेण गा बस्तेनाजा वृष्णिनाऽवीर्व्रीहिणाऽन्नानि यवेनौषधीर्न्यग्रोधेन वनस्पतीनुदुम्बरेणोर्जं गायत्रिया छन्दा ँसि त्रिवृता स्तोमान्ब्राह्मणेन वाचम् ।

என்பது.

உரை

இவ்வெசமானன் அக்கினிவடிவாய் அதன்வலியால் எவ்வாற்றால் எங்கும் நிறைந்தனனோ, அவ்வகைவருமாறு:—வாக்குவடிவால் மந்திரத்தொகுதிகளிலும், மண்வடிவால் உருவங்களிலும், இந்திரவடிவினால் தேவர்களிலும், காற்றுவடிவால் பிராணன்களிலும், சூரியவடிவால் விண்ணிலும், சந்திரவடிவால் நக்ஷத்திரங்களிலும், எமவடிவால பிதிர்க்களிலும், அரசவடிவால் மனிதர்களி

வைசுவதேவ மந்திரம்)

*த்தும், பழங்களின்வடிவால் இரசங்களிலும், மலைப்பாம்புவடிவால் பாம்புகளிலும், புலிவடிவால் ஆரணியங்களிலுள்ள பசுக்களிலும், பருந்துவடிவால் பறவைகளிலும், பெருங்குதிரைவடிவால் குதிரைகளிலும், இடபவடிவால் கோக்களிலும், வெள்ளாட்டுக்கடா வடிவால் பெண் ஆடுகளிலும், பள்ளாட்டுக் கடா வடிவால் பெண்பள்ளையாடுகளிலும், நெல் வடிவால் உணவுப்பொருள்களிலும், கோதுமையால் ஓடதிகளிலும், ஆலமரவடிவால் வனத்தருக்களிலும், அத்திமரவடிவால் வன்மைகளிலும், காயத்திரி வடிவால் சந்தங்களிலும், திரிவிருத் வடிவால் ஸ்தோமங்க (பாடுந்துதிக)ளிலும், அந்தண வடிவால் வாக்கிலும் நிறைந்திருக்கின்றனன் என்பது.*

பதினான்காமநுவாகம்

முற்றிற்று.

---

ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

## பதினைந்தாவது அநுவாகம்

*ஒரு பஞ்சாதிக்குமேல் பதறுப் பதங்களைக் கொண்டது.*

வைசுவதேவம் என்னும் ஹோமமந்திரங்கள்.

स्वाहाऽऽधिमाधीताय स्वाहा स्वाहाऽऽधीतं मनसे स्वाहा स्वाहा मनः प्रजापतये स्वाहा काय स्वाहा कस्मै स्वाहा कतमस्मै स्वाहाऽदित्यै स्वाहाऽदित्यै मह्यै स्वाहाऽदित्यै सुमृडीकायै स्वाहा सरस्वत्यै स्वाहा सरस्वत्यै बृहत्यै स्वाहा सरस्वत्यै पावकायै स्वाहा पूष्णे स्वाहा पूष्णे प्रपथ्याय स्वाहा पूष्णे नरन्धिषाय स्वाहा त्वष्ट्रे स्वाहा त्वष्ट्रे तुरीपाय स्वाहा त्वष्ट्रे पुरुरूपाय स्वाहा विष्णवे स्वाहा विष्णवे निखुर्यपाय स्वाहा विष्णवे निभूयपाय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ३६ ॥ पुरुरूपाय स्वाहा दश च । ॥ १५ ॥

*இதில் வைசுவதேவம் என்னும் ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன.*

வைசுவதேவ மந்திரம்

முதற் காண்டத்திற் கூறியுள்ள வைசுவதேவ மந்திரங்கள் இங்குக் கூறப்படுகின்றன. அவற்றுள், முதலாவது தினத்தின் மந்திரம்,

**स्वाहाऽऽधिमाधीताय स्वाहा स्वाहाऽऽधीतं मनसे स्वाहा स्वाहा मनः प्रजापतये स्वाहा ।**

என்பது.

உரை

இதில், இருபக்கங்களிலும் சுவாகாரகாரங்களையுடைய மந்திரங்களுள் ளன. அவற்றுள் ஈற்றிலுள்ள ஸ்வாஹாகாரம் அவியளிக்கும் பொருண்மேல் நிற்கின்றது. முதலிலுள்ள ஸ்வாஹாகரம் அசைச் சொல்லாய்ப் பல் பொருளைத் தருகின்றது. ஆதீ என்பது புத்தியாம் அதைத் தேடுகின்றேன் அத்தகைய புத்தியில நிறுவியுள்ள மந்திராபிமானி தேவதைகளின் பொருட்டு இது அர்ப்பணமாகுக. புத்தியால் கவர்ந்தவைகளை மறப்பின்றி வைத்துக் கொள்கின்றேன். அத்தகையை அந்தக்கரணத்திற்கு இது அர்ப்பணமாகுக. அத்தகையமனத்தையும் அந்தக் கரணத்தையுந் தேடுகின்றேன். அம் மனத்தைச் செலுத்தும் பிரசாபதிக்கு இது அர்ப்பணமாகுக என்பது.

---

இரண்டாந்தின மந்திரங்கள்

**काय स्वाहा कस्मै स्वाहा कतमस्मै स्वाहा ।**

என்பது

உரை

பிரசாபதிக்கு இது அர்ப்பணமாகுக. அப் பிரசாபதி இத்தன்மையன் என்று அறிய முடியாதவனும், எல்லாத் தேவர்களுள்ளும் வேதப் பொருளின் உறுதிப்பாடுணர்ந்தவனுமாவன் என்பது.

---

மூன்றாந்தின மந்திரங்கள்

**अदित्यै स्वाहाऽऽदित्यै मह्यै स्वाहाऽदित्यै सुमृडीकायै स्वाहा ।**

என்பது

உரை

பூமிக்கு இது அர்ப்பணமாகுக. பரந்த பூமிக்கு இது அர்ப்பணமாகுக. சுகந்தரும் பூமிக்கு இது அர்ப்பணமாகுக என்பது.

நான்காந்தின மந்திரங்கள்

**सरस्वत्यै स्वाहा सरस्वत्यै बृहत्यै स्वाहा सरस्वत्यै पावकायै स्वाहा :**

என்பது.

உரை

சரசுவதிக்கு இது அர்ப்பணமாகுக பெரியசரஸ்வதிக்கு இது அர்ப்பண மாகுக. பரிசுத்தப்படுத்தும் சரசுவதிக்கு இது அர்ப்பணமாகுக என்பது.



ஐந்தாந்தின மந்திரங்கள்

**पूष्णे स्वाहा पूष्णे प्रपथ्याय स्वाहा पूष्णे नरन्धिषाय स्वाहा ।**

என்பது

உரை

பூஷாவிற்கு இது அர்ப்பணமாகுக. சுருதிமிருதி மார்க்கத்திற்கினிய பூஷாவிற்கு இது அர்ப்பணமாகுக. மனிதர்களைத்தாங்கும் பூஷாவிற்கு இது அருப்பணமாகுக என்பது.



ஆறந்தின மந்திரங்கள்

**त्वष्ट्रे स्वाहा त्वष्ट्रे तुरीपाय स्वाहा त्वष्ट्रे पुरुरूपाय स्वाहा ।**

என்பது

உரை

துவஷ்டாவிற்கு இது அர்ப்பணமாகுக. சீக்கிரமாக அடையப்பட்ட துவஷ்டாவிற்கு இது அர்ப்பணமாகுக. அனேக மூர்த்திகளுடன் கூடிய துவஷ்டாவிற்கு இது அர்ப்பணமாகுக என்பது.



ஏழாந்தின மந்திரங்கள்

**विष्णवे स्वाहा विष्णवे निखुर्यपाय स्वाहा विष्णवे निभूयपाय स्वाहा ।**

என்பது

உரை

விஷ்ணுவிற்கு இது அர்ப்பணமாகுக. பாவம் முதலானவைகளைப் போக்கும் விஷ்ணுவிற்கு இது அர்ப்பணமாகுக. வித்தை முதலானவைகளாற்றால் வெளியிற்றள்ளத் தக்கவர்களைப் பாதுகாக்கும் விஷ்ணுவிற்கு இது அர்ப்பணமாகுக என்பது.

---

பூரணாகுதி மந்திரங்கள்

**सर्वस्मै स्वाहा ।**

என்பது.

எல்லாவகைகளாலும் பாதுகாக்கின்றவனுக்கு இது அர்ப்பணமாகுக என்பது.

பதினைந்தாமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

### பதினாறுவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் ஆறுபதங்களைக் கொண்டது.

அங்கஹோம மந்திரங்கள்.

दद्भ्यः स्वाहा हनूभ्याꣳ स्वाहोष्ठाभ्याꣳ स्वाहा मुखाय स्वाहा नासिकाभ्याꣳ स्वाहाऽक्षीभ्याꣳ स्वाहा कर्णाभ्याꣳ स्वाहा पार इक्षवोऽवार्येभ्यः पक्ष्मभ्यः स्वाहाऽवार इक्षवः पार्येभ्यः पक्ष्मभ्यः स्वाहा शीर्ष्णे स्वाहा भ्रूभ्याꣳ स्वाहा ललाटाय स्वाहा मूर्ध्ने स्वाहा मस्तिष्काय स्वाहा केशेभ्यः स्वाहा वहाय स्वाहा ग्रीवाभ्यः स्वाहा स्कन्धेभ्यः स्वाहा कीकसाभ्यः स्वाहा पृष्टीभ्यः स्वाहा पाजस्याय स्वाहा पार्श्वाभ्याꣳ स्वाहा ॥ ३७ ॥ अꣳसाभ्याꣳ स्वाहा दोषभ्याꣳ स्वाहा बाहुभ्याꣳ स्वाहा जङ्घाभ्याꣳ स्वाहा

श्रोणीभ्यां स्वाहोरुभ्यां स्वाहाऽष्ठीवद्भ्यां स्वाहा जङ्घाभ्यां स्वाहा भसदे स्वाहा शिखण्डेभ्यः स्वाहा वालधानाय स्वाहाऽण्डाभ्यां स्वाहा शेपाय स्वाहा रेतसे स्वाहा प्रजाभ्यः स्वाहा प्रजननाय स्वाहा पद्भ्यः स्वाहा शफेभ्यः स्वाहा लोमभ्यः स्वाहा त्वचे स्वाहा लोहिताय स्वाहा मांसाय स्वाहा स्नावभ्यः स्वाहाऽस्थभ्यः स्वाहा मज्जभ्यः स्वाहाऽङ्गेभ्यः स्वाहाऽऽत्मने स्वाहा सर्वस्मै स्वाहा ॥२८॥ पार्श्वाभ्यां स्वाहा मज्जभ्यः स्वाहा षट्च ॥१६॥

இதில், பதினாறு அங்க ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன.

மந்திரங்கள் 1—50

दद्भ्यः स्वाहा हनूभ्यां स्वाहोष्ठाभ्यां स्वाहा मुखाय स्वाहा नासिकाभ्यां स्वाहाऽक्षीभ्यां स्वाहा कर्णाभ्यां स्वाहा पार इक्षवोऽवार्येभ्यः पक्ष्मभ्यः स्वाहा शीर्ष्णे स्वाहा भ्रूभ्यां स्वाहा ललाटाय स्वाहा मूर्ध्ने स्वाहा मस्तिष्काय स्वाहा केशेभ्यः स्वाहा वहाय स्वाहा ग्रीवाभ्यः स्वाहा स्कन्धेभ्यः स्वाहा कीकसाभ्यः स्वाहा पृष्टीभ्यः स्वाहा पाजस्याय स्वाहा पार्श्वाभ्यां स्वाहांऽसाभ्यां स्वाहा दोषभ्यां स्वाहा बाहुभ्यां स्वाहा जङ्घाभ्यां स्वाहा श्रोणीभ्यां स्वाहोरुभ्यां स्वाहाऽष्ठीवद्भ्यां स्वाहा जङ्घाभ्यां स्वाहा भसदे स्वाहा शिखण्डेभ्यः स्वाहा वालधानाय स्वाहाऽण्डाभ्यां स्वाहा शेपाय स्वाहा रेतसे स्वाहा प्रजाभ्यः स्वाहा प्रजननाय स्वाहा पद्भ्यः स्वाहा शफेभ्यः स्वाहा लोमभ्यः स्वाहा त्वचे स्वाहा लोहिताय स्वाहा मांसाय स्वाहा स्नावभ्यः स्वाहाऽस्थभ्यः स्वाहा मज्जभ्यः स्वाहाऽङ्गेभ्य स्वाहाऽऽत्मने स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது

உரை

பற்களுக்கும், கன்னங்கட்கும், உதடுகட்கும், முகத்திற்கும், மூக்கிற்கும் கண்ணிற்கும், செவிக்கும், கண்கோளையின் மேல்பாகத்திலுள்ள மயிர்கட்கும், அதற்குக் கீழேயுள்ள மயிர்கட்கும், கீழ்க்கண்கோளையிலுள்ள மயிர்கட்கும் கீழ்க்கண்கோளையிலுள்ள மேல்மயிர்கட்கும், அதற்குக் கீழேயுள்ள மயிர்

கட்கும், மாமிசபாகத்திற்கும், கீழேயுள்ள பாகத்திற்கும், மேலேயுள்ள நெற்றிக்கும், கழுதத்திற்கும், அங்குள்ள நாடிகட்கும், கழுத்தின்மேல் அவயவத்திற்கும், பின்புறத்து எலும்பின் கணுவிற்கும், இரண்டு பக்கத்து எலும்புகட்கும், வன்மை தங்கும் இதயத்திற்கும், முன்கால்களிரண்டுகளின் மேல்பாகங்கள் கீழ்ப்பாகங்கட்கும், வன்மைதங்கும் இதயத்திற்கும், முன்கால் களிரண்டின் மேல்பாகங்கள் கீழ்ப்பாகங்கட்கும், நடுப்பாகங்கட்கும், பின்புறத் துக் கால்களிரண்டின் மேல்பாகங்கள் கீழ்ப்பாகங்கள் என்னும் நான்கிற்கும், குதத்திற்கும், மேல்மயிர்களுக்கும், வாலுக்கும், சிசுனத்திற்கும், மற்றும் ஏனைய அவயவங்கட்கும், சிவனுக்கும் முழுவுடம்பிற்கும் இது அர்ப்பண மாகுக. இம் தந்திரங்கள் ஐம்பதாலும் அங்கஹோமங்களைச் செய்தல் வேண் டும் என்பதாம்.

பதினாறும் அநுவாகம்

முற்றிற்று.

ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

பதினேழாமநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் இரண்டு பதங்களைக் கொண்டது.

அசுவரூப மந்திரங்கள்.

अञ्ज्येताय स्वाहाऽञ्जिसक्थाय स्वाहा शितिपदे स्वाहा शितिककुदे स्वाहा शितिरन्ध्राय स्वाहा शितिपृष्ठाय स्वाहा शित्यꣳसाय स्वाहा पुष्पकर्णाय स्वाहा शित्योष्ठाय स्वाहा शितिभ्रवे स्वाहा शितिभसदे स्वाहा श्वेतानूकाशाय स्वाहाऽञ्जये स्वाहा ललामाय स्वाहाऽसितज्ञवे स्वाहा कृष्णैताय स्वाहा रोहितैताय स्वाहाऽरुणैताय स्वाहेदृशाय स्वाहा कीदृशाय स्वाहा तादृशाय स्वाहा सदृशाय स्वाहा विसदृशाय स्वाहा सुसदृशाय स्वाहा रूपाय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ २९ ॥ रूपाय स्वाहा द्वे च ।॥ १७ ॥

இதில், குதிரையின் உருவ ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன.

மந்திரங்கள் 1—26

**अञ्ज्येताय स्वाहाऽञ्जिसक्थाय स्वाहा शितिपदे स्वाहा शितिककुदे स्वाहा शितिरन्ध्राय स्वाहा शितिपृष्ठाय स्वाहा शित्यꣳसाय स्वाहा पुष्पकर्णाय स्वाहा शित्योष्ठाय स्वाहा शितिभ्रवे स्वाहा शितिभसदे स्वाहा श्वेतानूकाशाय स्वाहाऽञ्जये स्वाहा ललामाय स्वाहाऽसितज्ञवे स्वाहा कृष्णैताय स्वाहा रोहितैताय स्वाहाऽरुणैताय स्वाहेदृशाय स्वाहा कीदृशाय स्वाहा तादृशाय स्वाहा सदृशाय स्वाहा विसदृशाय स्वाहा सुसदृशाय स्वाहा रूपाय स्वाहा सर्वस्मै स्वाहा ।**

என்பது

உரை

வெள்ளை இரத்தங் கலந்த நிறத்திற்கும், வெள்ளையுஞ் சிவப்புங்கலந்த நிறத்திற்கும், கால் வெள்ளை நிறத்திற்கும், வெள்ளைக் கொண்டைக்கும், வெள்ளைத் துளைக்கும், வெள்ளைப் பின்புறத்திற்கும், பூக்கள்போன்ற செவிக்கும், வெள்ளைப்புருவத்திற்கும், வெள்ளைக்குதத்திற்கும், வெள்ளைக்கண்ணிற்கும், முழுவெள்ளையுடம்பிற்கும், நெற்றிவெள்ளைக்கும், கறுப்பு நிறக்கால்களுக்கும் கறுப்புக் கலந்த செங்கல் நிறத்திற்கும், இரத்தநிறமுஞ் சிவப்புங்கலந்த நிறத்திற்கும், வெள்ளையுஞ்சிவப்புக் கலந்த மாலைப்பொழுது நிறத்திற்கும், இந்நிறந்தானெனப் புலப்படு நிறத்திற்கும், இன்ன நிறமென்று சொல்லமுடியாத நிறத்திற்கும், தூர உவமையாய்க் காணப்படும் நிறத்திற்கும், அருகிலுள்ள உவமையாய்க் காணப்படும நிறத்திற்கும், உவமையற்றநிறத்திற்கும், எளிதில் உவமைக்குரிய நிறத்திற்கும், பொதுவாகிய நிறத்திற்கும், மற்றுங் கூறாத எல்லாநிறங்கட்கும் இது அருப்பணமாகுக. இம்மந்திரங்களால் இருபத்தாறு ஹோமங்கள் செய்தல் வேண்டும் என்பது.

பதினேழாமநுவாகம்
முற்றிற்று.

---

ஏழாங்காண்டம் மூன்றும் பிரபாடகம்

## பதினெட்டாமநுவாகம்

நாற்பத்தாறு பதங்களைக் கொண்டது.

எஞ்சிய குதிரையின் உருவமந்திரங்கள்

**कृष्णाय स्वाहा श्वेताय स्वाहा पिशङ्गाय स्वाहा सारङ्गाय स्वाहाऽरुणाय स्वाहा गौराय स्वाहा बभ्रवे स्वाहा नकुलाय स्वाहा**

रोहिताय स्वाहा शोणाय स्वाहा श्यावाय स्वाहा श्यामाय स्वाहा पाकलाय स्वाहा सुरूपाय स्वाहाऽनुरूपाय स्वाहा विरूपाय स्वाहा सरूपाय स्वाहा प्रतिरूपाय स्वाहा शबलाय स्वाहा कमलाय स्वाहा पृश्नये स्वाहा पृश्निसक्थाय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४० ॥ कृष्णाय षट्चत्वारिंशत् । ॥ १८ ॥

இதில் அவயவங்களினின்றும் வேறுபட்டபல்வகை நிறங்களின் ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன.

மந்திரங்கள் 1-23

कृष्णाय स्वाहा श्वेताय स्वाहा पिशङ्गाय स्वाहा सारङ्गाय स्वाहाऽरुणाय स्वाहा गौराय स्वाहा बभ्रवे स्वाहा नकुलाय स्वाहा रोहिताय स्वाहा शोणाय स्वाहा श्यावाय स्वाहा श्यामाय स्वाहा पाकलाय स्वाहा सुरूपाय स्वाहाऽनुरूपाय स्वाहा विरूपाय स्वाहा सरूपाय स्वाहा प्रतिरूपाय स्वाहा शबलाय स्वाहा कमलाय स्वाहा पृश्नये स्वाहा पृश्निसक्थाय स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது

உரை

கறுப்பு, வெள்ளை, கோரோசனைநிறம், சாதகப்பறவைநிறம், சாதகம் = மழைத்துளியில்வாழும் பறவை விசேடம். சிறிய சிவப்பு, மிகுந்த வெண்மை, கபிலை, கிரிநிறம், மிகுந்த சிவப்பு, செம்புநிறம், கருஞ்செம்புநிறம், சிவப்புச்செம்பு நிறம், நீலம், மிகக்கறுப்பு, அழகிய நடுத்தரமான நிறம், வேண்டாத நிறம், கலப்புநிறம், கமலநிறம், இந்திரநிறம், சித்திரஎறும்பு, மற்றும் எல்லாவிதமான நிறங்கள் என்னும் இவைகட்கு இவை அர்ப்பணமாகுக. முன்போல் இவைகளாலும் ஹோமங்கள் செய்தல்வேண்டுமென்பதாம்.

பதினெட்டாமநுவாகம்

முற்றிற்று

———

## ஏழாங் காண்டம் மூன்றும் பிரபாடகம்

### பத்தோன்பதாமநுவாகம்

இருபத்துநான்கு பதங்களைக் கொண்டது.

ஓஷதிமந்திரங்கள் கூறப்படுகின்றன.

**ओषधीभ्यः स्वाहा मूलेभ्यः स्वाहा तूलेभ्यः स्वाहा काण्डेभ्यः स्वाहा वल्शेभ्य स्वाहा पुष्पेभ्यः स्वाहा फलेभ्यः स्वाहा गृहीतेभ्यः स्वाहाऽवपन्नेभ्यः स्वाहा शयानेभ्यः स्वाहा सर्वस्मै स्वाहा ॥४१॥**

**ओषधीभ्यश्चतुर्विंशतिः । ॥ १९ ॥**

இதில் ஓஷதி ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன.

மந்திரங்கள் 1-12

**ओषधीभ्यः स्वाहा मूलेभ्यः स्वाहा तूलेभ्यः स्वाहा काण्डेभ्यः स्वाहा वल्शेभ्य स्वाहा पुष्पेभ्यः स्वाहा फलेभ्यः स्वाहा गृहीतेभ्यः स्वाहाऽगृहीतेभ्यः स्वाहाऽवपन्नेभ्यस्स्वाहा शयानेभ्यः स्वाहा सर्वस्मै स्वाहा ।**

என்பது.

உரை

கொடி செடிகளுக்கும், வேர்களுக்கும், பருத்த தண்டுகளுக்கும், கரணை களுக்கும், கணுக்களுக்கும், பூக்கட்கும், பழங்களுக்கும், உயிர்களுக்கு உதவி யானவைகட்கும், உதவியாகாதவைகட்கும், கீழே விழுந்தவைகட்கும், தண்டு டன் சாய்ந்துபோனவைகட்கும், மற்றும் எல்லாவற்றிற்கும் இவை அர்ப்ப ணங்களாகுக என்பதாம்.

பத்தோன்பதாமநுவாகம்

முற்றிற்று.

## ஏழாங் காண்டம் மூன்ரும் பிரபாடகம்

## இருபதாவது அநுவாகம்

*ஒரு பஞ்சாதிக்குமேல் நாற்பத்தாறு பதங்களைக்கொண்டது.*

வனஸ்பதி மந்திரங்கள்

वनस्पतिभ्यः स्वाहा मूलेभ्यः स्वाहा तूलेभ्यः स्वाहा स्कन्धोभ्यः स्वाहा शाखाभ्यः स्वाहा पर्णेभ्यः स्वाहा पुष्पेभ्यः स्वाहा फलेभ्यः स्वाहा गृहीतेभ्यः स्वाहाऽगृहीतेभ्यः स्वाहाऽवपन्नेभ्यः स्वाहा शयानेभ्यः स्वाहा शिष्टाय स्वाहाऽतिशिष्टाय स्वाहा परिशिष्टाय स्वाहा सꣳशिष्टाय स्वाहोच्छिष्टाय स्वाहा रिक्ताय स्वाहाऽरिक्ताय स्वाहा प्ररिक्ताय स्वाहा सꣳरिक्ताय स्वाहोद्रिक्ताय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४२ ॥ वनस्पतिभ्यः षट्चत्वारिꣳशत् । ॥२०॥

*இதில், வனஸ்பதி ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன.*

இப்பிரபாடகத்திலுள்ள அநுவாக எண்களைக் காட்டுந் தலைப்புச் சொற்கள் :—

प्रजवं ब्रह्मवादिनः किमेष वा आप्त आदित्या उभयोः प्रजापतिरन्वायन्निन्द्रो वै सदृङ्ङिन्द्रो वै शिथिलः प्रजापतिरकामयतान्नादः सा विराडसावादित्योऽर्वाङ्भूतमामेऽग्निनातपः स्वाहाऽधि दद्भ्योऽञ्ज्येताय कृष्णायौषधीभ्यो वनस्पतिभ्यो विꣳशतिः ॥ २० ॥

பஞ்சாதிகளின் எண்ணைக் காட்டும் தலைப்புச் சொற்கள் :—

प्रजवं प्रजापतिर्यदछन्दोमं तेहुवे स्वाहमोषधीभ्यो द्विचत्वारिꣳशत् ॥ ४० ॥

மந்திரங்கள் 1 - 23

वनस्पतिभ्यः स्वाहा मूलेभ्यः स्वाहा तूलेभ्यः स्वाहा स्कन्धोभ्यः स्वाहा शाखाभ्यः स्वाहा पर्णेभ्यः स्वाहा पुष्पेभ्यः स्वाहा फलेभ्यः स्वाहा गृही-

வனஸ்பதீ மந்திரம்)

**तेभ्यः स्वाहाऽगृहीतेभ्यः स्वाहाऽवपन्नेभ्यः स्वाहा शयानेभ्यः स्वाहा शिष्टाय स्वाहाऽतिशिष्टाय स्वाहा परिशिष्टाय स्वाहा सꣳशिष्टाय स्वाहोच्छिष्टाय स्वाहा रिक्ताय स्वाहा प्ररिक्ताय स्वाहा सꣳरिक्ताय स्वाहा सर्वस्मै स्वाहा ।**

என்பது

உரை

வனஸ்பதிகட்கும், வேர்கட்கும், தண்டுகட்கும், கிளை எழும்பிய விடத்திற்கும், கிளைகட்கும், இலைகட்கும், பூக்கட்கும், பழங்கட்கும், உயிர்களுக்குதவுகின்றவைகட்கும், உதவாதவைகட்கும், மண்ணில் விழுந்தவைகட்கும் காலாந்தரத்தில் உதவுகின்றவைகட்கும், சாய்ந்தவைகட்கும், வேறுகாலத்தில் மற்றொன்றிற்கு உதவுகின்றவைகட்கும், வேறுகாலத்தில் மற்றொன்றிற்கு உதவாதவைகட்கும், வேறுகாலத்தில் ஒரு கருமத்திற்கு உதவுகின்றவைகட்கும், உதவி பிறகுஎஞ்சியவைகட்கும், பழம் பூக்களின்றியவைகட்கும், பழம் பூக்களுடன் கூடியவைகட்கும், எப்போதும் எல்லாவற்றுடன் கூடியவைகட்கும், மற்றும் எல்லாவற்றிற்கும் இவைகள் அருப்பணங்களாகுக. இந்த இருபத்து மூன்று மந்திரங்களாலும் ஹோமங்கள் செய்தல் வேண்டுமென்பதாம்.

இருபதாமநுவாகம் முற்றிற்று.

மூன்றும் பிரபாடகம் முடிந்தது.

---

ஏழாங்காண்டம் நான்காம் பிரபாடக விடயச்சுருக்கம்

चतुर्विंशतिरात्रौ द्वौ चतुर्थाद्य द्वितीययोः ।
त्रिंशद्रात्रस्तृतीयेस्याद्द्वात्रिंशद्रात्र उत्तरे ॥ १ ॥
त्रयस्त्रिंशदहोऽन्यस्मिन् षट्त्रिंशद्रात्र उत्तरे ।
एकोनपञ्चाशदहः सप्तमे समुदीरितः ॥ २ ॥
संवत्सराख्यसत्रस्य दीक्षाकालोऽष्टमेस्मृतः ।
दीक्षाश्चोपसदोऽन्यस्मिन्दशमे प्रायणीयकम् ॥ ३ ॥
मासा एकादशेऽथाश्वमेधमन्त्रा उदीरिताः ।
मेधोनवापान्यहोमा अवन्तीः परियन्तिहि ॥ ४ ॥

कूष्याभ्यो विंशतिश्चाद्भ्यो द्वादशापांतुहोमकाः ।
यो अर्वं श्वप्रहारस्यात् परोऽधस्पदसंस्थितिः ॥ ५ ॥
अहंब्रह्मा स्वामिहस्ते धृत्वाऽभिक्रेति वाचयेत् ।
एते मन्त्रास्तुचत्वारो यव्यहोमा नमोनव ॥ ३ ॥
मयोऽष्टौस्युर्गव्यहोमाः किंब्रह्मोचंषडीरिताः ।
पत्नीमुदानयेदम्बे सुभेत्याच्छादयेदुभौ ॥ ७ ॥
तौ संप्रसारयेत्पादान् वृषेत्यध्वर्युमन्त्रणं ।
उत्संदधाति गुह्येद्वे ह्यम्बे अश्वं विगर्हयेत् ॥ ८ ॥
ऊर्ध्वमन्यावधायेयुस्त्रिरेवं स्यात्पुनः पुनः ।
दधिसर्वाजपित्वाहि मार्जयन्तेत्रिभिर्जलात ॥ ९ ॥
अम्ब इत्यनुवाकेस्मिन् मन्त्रास्सप्तदशेरिताः ।
भूस्त्रि पत्न्यश्ववालेषु कीलेयुस्त्रिविधान्मणीन् ॥ १० ॥
वसाम्वञ्जन्ति पत्न्योऽश्वमेतमावर्तयेद्गुणा न् ।
लाजयन्नशेष आहायोंयुञ्जन्युञ्ज्यात्रथेश्वकम् ॥ ११ ॥
युञ्जान्यौ योजयित्वाऽथ केतुबध्योरथेध्वजः ।
भूर्भुवः सुवरित्यस्मिन्मन्त्रा एकादशेरिताः ॥ १२ ॥
प्राणासन्तति होमास्युस्तत्रमन्त्राश्चतुर्दश ।
सिताप्रमुक्तिकहोमास्युर्मन्त्रा एकोनविंशतिः ॥ १३ ॥

இந்நான்காம் பிரபாடகத்தின் முதலாது இரண்டாவது அநுவாகங்களில் இரண்டுவிதங்களான சதுர்விம்சதிராத்திரியாகங்களும், மூன்றாவதில் திரிம்சத் ராத்திரமும், நான்காவதில் துவாத்திரிம்சத் ராத்திரமும், ஐந்காவதில் திரயத்திரிம்சத்ராத்திரமும், ஆறாவதில் ஷட்த்ரிம்சத்ராத்திரமும், ஏழாவதில் ஏகோனபஞ்சாத் ராத்திரமும், எட்டாவதில் சம்வத்சரம் என்னும் சத்ரயாகத்தின் தீக்ஷாகாலமும், ஒன்பதாவதில் ஷடி யாகத்தின் தீக்ஷையும் உபசத்துகளும், பத்தாவதில் பிராணீயமும், பதினொன்றாவதில் ஷடி யாகத்தின் தினங்களும், எஞ்சிய அநுவாகங்களில் அசுவ மேதமந்திரங்களுங் கூறப்படுகின்றன. அவற்றுள் பன்னிரண்டாவதில், அபாவ்ய ஹோமமந்திரங்களும் குதிரையைச்சுற்றிவரும் மந்திரங்களும், பதின்மூன்றாவது பதி

ஞன்காவதில் ஜலஹோமங்களும், பதினைந்தாவதில் நாயை அடிப்பது முதலிய மந்திரங்களும், பதினாறாவதில் யவ்ய ஹோமமந்திரங்களும், பதினேழாவதில் கவ்வியஹோமங்களும், பதினெட்டாவதில் பிரமோத்திய மந்திரங்களும், பத்தொன்பதாவதில் பத்தினியை அழைத்துவருவது முதலியமந்திரங்களும், இருபதாவதில் குதிரையை அலங்காரஞ் செய்யுமந்திரங்களும், இருபத்தொன்றாவதில் சந்ததிஹோமங்களும். இருபத்திரண்டாவதில் பிரமுக்தி ஹோமமந்திரங்களுங் கூறப்படுகின்றன. இத்துடன் நான்காம் பிரபாடகமும் முடிகின்றது.

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### முதலாவது அநுவாகம்

*மூன்றுபஞ்சாதிக்குமேல் நாற்பத்தைந்து பதங்களைக்கொண்டது*

இருபத்துநான்கு இரவுகளைக்கொண்ட யாகத்தைக்கூறும் பிராமணங்கள்

बृहस्पतिरकामयत श्रन्मे देवा दधीरन्गच्छेयं पुरोधामिति स एवं चतुर्विꣳशतिरात्रमपश्यत्तमाऽहरत्तेनायजत ततो वै तस्मै श्रद्देवा अदधतागच्छत्पुरोधां य एवं विद्वाꣳसश्चतुर्विꣳशतिरात्रमासते श्रदेभ्यो मनुष्या दधते गच्छन्ति पुरोधां ज्योतिर्गौरायुरिति त्र्यहा भवन्तीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुः ॥ १ ॥ इमानेव लोकानभ्यारोहन्त्यभिपूर्वं त्र्यहा भवन्त्यभिपूर्वमेव सुवर्गं लोकमभ्यारोहन्त्यसत्रं वा एतद्यदछन्दोमं यच्छन्दोमा भवन्ति तेन सत्रं देवता एव पृष्ठैरव रुन्धते पशूञ्छन्दोमैरोजो वै वीर्यं पृष्ठानि पशवश्छन्दोमा ओजस्येव वीर्ये पशुषु प्रति तिष्ठन्ति बृहद्रथंतराभ्यां यन्तीयं वाव रथंतरमसौ बृहदाभ्यामेव ॥ २ ॥ यन्त्यथो अनयोरेव प्रति तिष्ठन्त्येते वै यज्ञस्याञ्जसायनी स्रुती ताभ्यामेव सुवर्गं लोकं यन्ति चतुर्विꣳशतिरात्रो भवति चतुर्विꣳशतिरर्धमासाः संवत्सरः

संवत्सरः सुवर्गो लोकः संवत्सर एव सुवर्गे लोके प्रति तिष्ठन्त्यथो चतुर्विंशत्यक्षरा गायत्री गायत्री ब्रह्मवर्चसं गायत्रियैव ब्रह्मवर्चसमव रुन्धतेऽतिरात्रावभितो भवतो ब्रह्मवर्चसस्य परिगृहीत्यै ॥३॥

अन्तरिक्षं गौरसावायुराभ्यामेव पञ्चचत्वारिंशच्च । ॥ १ ॥

இதில், இருவகையான இருபத்துநான்கு இரவுகளுள் முதலாவது கூறப்படுகின்றது.

அதைவிதிக்கின்றது

பிராமணம் 1

बृहस्पतिरकामयत श्रन्मे देवा दधीरन्गच्छेयं पुरोधामिति स एतं चतुर्विंशतिरात्रमपश्यत्तमाऽहरत्तेनायजत ततो वै तस्मै श्रद्देवा अदधतागच्छत्पुरोधां य एवं विद्वाꣳसश्चतुर्विंशतिरात्रमासते श्रदेभ्यो मनुष्या दधते गच्छन्ति पुरोधाम् ।

என்பது

உரை

பிருகற்பதி முன்னொருகால் இந்திரன் முதலான தேவர்களால் “இவர் எமக்குநன்மை செய்பவர்,, என்று விசுவசிக்கப்படாதவராயிருந்தனர். அப்போது நம்மிடத்து விசுவாசங்கொள்ளும்போது நாம் புரோகிதனுவோம் என்று விரும்பி அதற்குபாயம் இன்னதென ஆராய்ந்து நூல்களால் இருபத்துநான்கு இரவுகள் கொண்ட யாகமெனக்கண்டு அதற்குரிய உபகரணங்களைத் தேடிச்செய்து தேவர்களால் விசுவசிக்கப்பெற்று புரோகிதராயினர். அதுபோல் இதைச்செய்கின்றவர்களும் மனிதர்களால் விசுவசிக்கப்பெற்று புரோகிதர்களாகின்றார்கள் என்பது.

---

அதில் சிலதினங்களை விதிக்கின்றது

பிராமணம் 2

ज्योतिर्गौरायुरिति त्र्यहा भवन्तीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुरिमानेव लोकानभ्यारोहन्ति ।

என்பது

உரை

இதில் நான்கு மூன்று நாட்களுள்ளன. சோதி, கௌ, ஆயுள் என்னும் மூன்றுகளாலும் மூன்றுலகங்களிலும் ஏறுகிறார்கள் என்பது.

---

அவற்றுள், நான்கு மூன்றுநாட்களின் முறையை விதிக்கின்றது.

பிராமணம் 3

अभिपूर्वं त्र्यहा भवन्त्यभिपूर्वमेव सुवर्गं लोकमभ्यारोहन्ति ।

என்பது.

உரை

இதிலிருந்து வெளிப்பட்ட மூன்று நாட்களின் முறையினால் சுவர்க்கத்திற்கு முறையாய் ஏறுகிறார்கள் என்பது.

---

இனி, பிருஷ்டிய ஆறுநாள், சந்தோம நான்குநாள் என்னும் பத்துநாளையும் விதிக்கின்றது.

பிராமணம் 4

असत्रं वा एतद्यदछन्दोमं यच्छन्दोमा भवन्ति तेन सत्रं देवता एव पृष्ठै-
रव रुन्धते पशूञ्छन्दोमैरोजो वै वीर्यं पृष्ठानि पशवश्छन्दोमा ओजस्येव
वीर्ये पशुषु प्रति तिष्ठन्ति बृहद्रथंतराभ्यां यन्तीयं वाव रथंतरमसौ
बृहदाभ्यामेव यन्त्यथो अनयोरेव प्रति तिष्ठन्त्येते वै यज्ञस्याञ्जसायनी
सुती ताभ्यामेव सुवर्गं लोकं यन्ति ।

என்பது

உரை

இதன் உரையை முன்போல் உரைத்துக்கொள்க என்பது. மூன்றாம் பிரபாடகத்தின் நாலாவது மந்திரத்தைப் பார்க்க.

---

(இருபத்துநான்குநாள்

இவ் வேள்வியிலுள்ள நாட்களின் எண்ணைப்புகழ்கின்றது.

பிராமணம் 5

**चतुर्विंशतिरात्रो भवति चतुर्विंशतिरर्धमासाः संवत्सरः संवत्सर एव सुवर्गे लोके प्रति तिष्ठन्त्यथो चतुर्विंशत्यक्षरा गायत्री गायत्री ब्रह्मवर्चसंगायत्रियैव ब्रह्मवर्चसमव रुन्धते ।**

என்பது

உரை

இதில்இருபத்து நான்கு இரவுகளாகின்றன. ஒருவருடத்திற்கு பாதி மாதங்களும் இருபத்து நான்காகின்றன. இவ்வாற்றால் வருடத்தை யடைந்து அக்கால கருமாநுட்டானவாயிலாக சுவர்க்கத்தில் நிலைக்கின்றார்கள். காயத்திரிச்சந்தம் இருபத்து நான்கு எழுத்துக்களைக் கொண்டதாமாதலின் அதன் வாயிலாக பிரம வொளியையும் அடைகின்றார்கள் என்பது.

---

இனி, பிராயணீய, உதயனீயங்களை விதிக்கின்றது.

பிராமணம் 6

**अतिरात्रावभितो भवतो ब्रह्मवर्चसस्य परिगृहीत्यै ।**

என்பது

உரை

இரண்டு அதிராத்திரங்களும் காயத்திரி வாயிலாக பிரம வொளியைக் கொள்வதன் பொருட்டு உதவியாகின்றன என்பது.

முதலநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இரண்டாவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்குமேல் இருபத்துநான்கு பதங்களைக் கொண்டது.

மற்றொரு, இருபத்துநான்கு இரவுகளைக்கொண்ட யாகத்தை விதிக்கும் பிராமணங்கள்.

**यथा वै मनुष्या एवं देवा अग्र आसन्तेऽकामयन्तावर्तिं पाप्मानं मृत्युमपहत्य दैवीꣳ सꣳसदं गच्छेमेति त एतं चतुर्विंशतिरात्रम-**

पश्यन्तमाऽहरन्तेनायजन्त ततो वै तेऽवर्तिं पाप्मानं मृत्युमपहत्य दैवीः सꣳसदमगच्छन्य एवं विद्वाꣳसश्चतुर्विꣳशतिरात्रमासतेऽवर्तिमेव पाप्मानमपहत्य श्रियं गच्छन्ति श्रीर्हि मनुष्यस्य ॥ ४ ॥ दैवी सꣳसज्ज्योतिरतिरात्रो भवति सुवर्गस्य लोकस्यानुख्यात्यै पृष्ठ्यः षडहो भवति षड्वा ऋतवस्संवत्सरस्तं मासा अर्धमासा ऋतवः प्रविश्य दैवीꣳ सꣳसदमगच्छन्य एवं विद्वाꣳसश्चतुर्विꣳशतिरात्रमासते संवत्सरमेव प्रविश्य वस्यसीꣳ सꣳसदं गच्छन्ति त्रयस्त्रयस्त्रिꣳशा अवस्ताद्भवन्ति त्रयस्त्रयस्त्रिꣳशाः परस्तात्त्रयस्त्रिꣳशैरेवोभयतोऽवर्तिं पाप्मानमपहत्य दैवीꣳ सꣳसदं मध्यतः ॥ ५ ॥ गच्छन्ति पृष्ठानि हि दैवी सꣳसज्जामि वा एतत्कुर्वन्ति यत्त्रयस्त्रयस्त्रिꣳशा अन्वञ्चो मध्येऽनिरुक्तो भवति तेनाजाम्यूर्ध्वानि पृष्ठानि भवन्त्यूर्ध्वाश्छन्दोमा उभाभ्याꣳ रूपाभ्याꣳ सुवर्गं लोकं यन्त्यसत्त्रं वा एतद्यदछन्दोमं यच्छन्दोमा भवन्ति तेन सत्त्रं देवता एव पृष्ठैरव रुन्धते पशूञ्छन्दोमैरोजो वै वीर्यं पृष्ठानि पशवः ॥ ६ ॥ छन्दोमा ओजस्येव वीर्ये पशुषु प्रति तिष्ठन्ति त्रयस्त्रयस्त्रिꣳशा अवस्ताद्भवन्ति त्रयस्त्रयस्त्रिꣳशाः परस्तान्मध्ये पृष्ठान्युरो वै त्रयः त्रयस्त्रिꣳशा आत्मा पृष्ठान्यात्मन एव तद्यजमानाः शर्म नह्यन्तेऽनार्त्यै बृहद्रथंतराभ्यां यन्तीयं वाव रथंतरमसौ बृहदाभ्यामेव यन्त्यथो अनयोरेव प्रति तिष्ठन्त्येते वै यज्ञस्याञ्जसायनी स्रुती ताभ्यामेव ॥ ७ ॥ सुवर्गं लोकं यन्ति पराञ्चो वा एते सुवर्गं लोकमभ्यारोहन्ति ये पराचीनानि पृष्ठान्युपयन्ति प्रत्यङ्षडहो भवति प्रत्यवरूढ्या अथो

प्रतिष्ठित्या उभयोर्लोकयोर्ऋद्ध्वोत्तिष्ठन्ति त्रिवृतोऽधि त्रिवृतमुप य-
न्ति स्तोमानाꣳ संपत्त्यै प्रभवाय ज्योतिरग्निष्टोमो भवत्ययं वाव स
क्षयोऽस्मादेव तेन क्षयान्न यन्ति चतुर्विꣳशतिरात्रो भवति चतुर्विꣳ-
शतिरर्धमासाः संवत्सरः संवत्सरः सुवर्गो लोकः संवत्सर एव सु-
वर्गे लोके प्रति तिष्ठन्त्यथो चतुर्विꣳशत्यक्षरा गायत्री गायत्री ब्रह्म-
वर्चसं गायत्रियैव ब्रह्मवर्चसमव रुन्धतेऽतिरात्रावभितो भवतो ब्रह्म-
वर्चसस्य परिगृहीत्यै ॥ ८ ॥ मनुष्यस्य मध्यतः पशवस्ताभ्यामेव
संवत्सरश्चतुर्विꣳशतिश्च । ॥ २ ॥

இதில், மற்றொரு இருபத்துநான்கு இரவுகள் கொண்ட யாகங்கூறப்படு கின்றது.

அதை விதிக்கின்றது.

பிராமணம் 1

यथा वै मनुष्या एवं देवा अग्र आसन्तेऽकामयन्तावर्तिं पाप्मानं मृत्युमप-
हत्य दैवीꣳ सꣳसदं गच्छेमेति त एतं चतुर्विꣳशतिरात्रमपश्यन्तमाऽह-
रन्तेनायजन्त ततो वै तेऽवर्तिं पाप्मानं मृत्युमपहत्य दैवीꣳ सꣳसदम-
गच्छन्य एवं विद्वाꣳसश्चतुर्विꣳशतिरात्रमासतेऽवर्तिमेव पाप्मानमप-
हत्य श्रियं गच्छन्ति श्रीर्हि मनुष्यस्य दैवी सꣳसत् ।

என்பது

உரை

முன்னொருகால், வறுமைக்குக் காரணமாகிய பாவமுடைய மனிதர்களைப் போல் தேவர்களுமிருந்தனர். அப்போது அவர்கள் வாழ்க்கைக்குக் காரண மாகிய தனசம்பத்து இல்லாமல் வறியராய் இருப்பதற்குக் காரணமென்னும் முற்பிறப்பின் பாவமாகிய மிருத்துவை யாதேனுமொரு புண்ணியாநுட் டானத்தால் நீக்கிவிட்டு தெய்வ சம்பத்தையடைய விரும்பினவர்களாய் ஆராய்ந்து நூல்களால் இருபத்துநான்கு இரவுகள் கொண்டயாகத்தைக் கண்டுபிடித்து தேடிச்செய்து பாவம் போக்கியது காரணமாக தெய்வ சம்பத்தை யடைந்தனர். இவ்வாறே மனிதர்களும் இதை அநுட்டிக்கில்

மற்றேந இநபத்துநான்கு நாள்)

அத்தகைய சம்பத்தை யடைகின்றனர். தேவர்கள் சுகமாய் நிலைபெற்றிருக்கும் சம்பத்தை மனிதர்கள் தெய்வ சம்பத்தென்கின்றனர். அதாவது மனிதர்களின் பெருஞ் செல்வத்தையே தேவசபை எனக் கொள்கின்றனர் என்பது.

---

முதலாவதுதினத்தை விதிக்கின்றது.

பிராமணம் 2

ज्योतिरतिरात्रो भवति सुवर्गस्य लोकस्यानुख्यात्यै ।

என்பது.

உரை

சோதிட்டோம விசேடமாகிய இந்த அதிராத்திரமே முதலாவது நாளாம். இதனுல் சுவர்க்கம் விளக்கப்படுகின்றது என்பது.

---

இடையிலுள்ள ஆறுநாளை விதிக்கின்றது.

பிராமணம் 3

पृष्ठ्यष्षडहो भवति षड्वा ऋतवः संवत्सरस्तं मासा अर्धमासा ऋतवः प्रविश्य दैवीꣳ सꣳसदमगच्छन्य एवं विद्वाꣳसश्चतुर्विꣳशतिरात्रमासते संवत्सरमेव प्रविश्य वस्यसीꣳ सꣳसदं गच्छन्ति ।

என்பது

உரை

ஆறுவகை பிருஷ்டத் துதிகளை யநுட்டிக்கும் நாட்கள் ஆறுகின்றன. இருதுக்களும் ஆறுகின்றன. இந்த ஆறு இருத்துக்களே வருடமாகின்றன. ஒருவருடம் பன்னிரண்டு மாதங்களைக் கொண்டது இருபத்துநான்கு பாதி மாதங்களைக் கொண்டதாம். இவ்வாறு ஆறு இருதுக்கள் அவயவமாய்ப் புகுந்து தனசம்பத்துள்ள சபையை யடைகின்றன. மனிதர்களும், பிருஷ்டிய மென்னும் ஆறு நாட்களுடன் கூடிய இருபத்துநான்கு இரவுகள் கொண்ட யாகத்தால் அத்தகைய பயனை யடைகின்றார்கள் என்பது.

---

ஏனைய ஆறுநாட்களையும் விதிக்கின்றது.

பிராமணம் 4

त्रयस्त्रयस्त्रिꣳशा अवस्ताद्भवन्ति त्रयस्त्रयस्त्रिꣳशाः परस्तात्त्रयस्त्रिꣳशै-
रेवोभयतोऽरातिं पाप्मानमपहत्य दैवीꣳ संꣳसदं मध्यतो गच्छन्ति पृष्ठा-
नि हि दैवी संꣳसत् ।

என்பது

உரை

இருபத்துநான்கு தினங்களுள் முதல்நாள் அதிராத்திரம், இரண்டாம் நாள் ஆரம்பணீயம், மூன்றாம்நாள் முதல் எட்டாம்நாள் வரை பிருஷ்டிய ஆறு நாளாம். அவற்றுள் ஆறாம்நாள் முப்பத்துமூன்று ஸ்தோமங்களை யுடையதாம். இது, முதலிலிருந்து எண்ணிவந்து எட்டாவதுநாளாம் இதினின்று ஒன்பதாவதுநாளும் அநிருக்தமாகிய முப்பத்து மூன்று ஸ்தோமங்களை யுடையதாம். அநிருக்தம் = வெளிப்படையின்றிய இலிங்க மந்திரங்களின் பாடல்கள். அதினின்று பத்தாநாளும் அநிருத்தமாகிய முப்பத்துமூன்று ஸ்தோமங்களை யுடையதாம். இவ்வாறு, எட்டாவது, ஒன்பதாவது, பத்தாவது என்னும் கீழ்ப்பாகத்திலுள்ளவை மூன்று நாட்களாகின்றன. அதிலிருந்து, பதினொன்று, பன்னிரண்டு, பதின்மூன்று, பதினான்காவது நாட்களும் மத்திய பிருஷ்டிய நாட்களாம். அதற்குமேல், பதினைந்து, பதினாறு, பதினேழாவது நாட்கள் மூன்றும் மேலேயுள்ள, முப்பத்துமூன்று ஸ்தோமங்களை யுடைய மூன்று நாட்களாம் அவற்றுள்ளும், நடுவிலுள்ளது நிருக்தமாம. வெளிப்படையாகிய இலிங்க மந்திரங்களைப்பாடுதல் நிருக்தங்கள். பதினேழாவது நாளிலிருந்து, இருபத்திரண்டாம் நாள் வரை மாறாக ஆவிருத்தஞ் செய்யும் பிருஷ்டிய ஆறுநாட்கள். அதற்குமேல் உபாந்திம நாள் என்னும் நிருத்தமாம். இதுவே அக்கினிட்டோமமாம். அதற்குப் பிறகு அதிராத்திரமாம் என்பது

ஈண்டு, இவ்வாறு கீழுமேலுமுள்ள இரண்டு மூன்றுகள் முப்பத்துமூன்று துதிகள் கொண்ட ஆறுநாட்களால் வறுமைக்குக் காரணமாகிய பாவத்தைப் போக்கிவிட்டு, நடுவிலுள்ள பிருஷ்டியமென்னு நான்கு நாட்களாகிய தெய்வீக சம்பதத்தை யடைகின்றார்கள் என்பதாம்.

மற்றெந இநபத்துநான்த நாள்)

முப்பத்து மூன்று துதிகள்கொண்ட மேலேயுள்ள மூன்றுநாட்களுள் நடுவிலுள்ள தற்தும், கீழேயுள்ள அத்தகைய மூன்றுநாட்களுள் நடுவிலுள்ளதற்தும் (இரண்டுநாட்களுக்தும்) அநிநக்தத்தை விதிக்கின்றது.

பிராமணம் 5

**जामि वा एतत्कुर्वन्ति यत्त्रयस्त्रयस्त्रिꣳशा अन्वञ्चो मध्येऽनिरुक्तो भवति तेनाजामि ।**

என்பது

உரை

முதலிலிருந்து முறையாக முப்பத்துமூன்றுகளைக் கொண்டதாய் ஒரே விதமாயிருக்கின் அதை அநுட்டிக்கின்றவர்கள் சோம்பலை யடைவார்கள். ஆதலின், இடையிலுள் நாட்கள் அநிருக்தமென்னும் துதிப்பாடல்களையுடைய வைகளாகின்றன. அதாவது நிருக்தப் பாடல்களினின்று வேறாகப் பாட வேண்டியவைகள். ஆதலின், இதனால் சோம்பல் நீக்கப்பட்டதாகின்றது என்பதாம்.

---

இநுபக்கத்துமுள்ள முப்பத்துமுன்று துதிப்பாடல்களுக் கிடையிலுள்ள நான்து தினங்களில் சில விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம் 6

**ऊर्ध्वानि पृष्ठानि भवन्त्यूर्ध्वाश्छन्दोमा उभाभ्याꣳ रूपाभ्याꣳ सुवर्गं लोकं यन्ति ।**

என்பது.

உரை

ஈண்டு, ரதந்தரம், பிருகத் என்பது முதலிய முறையாக பிருஷ்டத்துதிகள் செய்தல் வேண்டும். அங்ஙனமே, இருபத்துநான்கு, நாற்பத்துநான்கு, முதலிய முறையாகவே ஸ்தோமப்பாடல்களுஞ் செய்தல் வேண்டும். இருபத்தேழு, இருபத்தொன்று (இரண்டு) இருபத்தேழு என நான்குநாட்களுக்குஞ் சூத்திரத்திற் கூறியுள்ளதோ, அது வேறு சாகையைப்பற்றியதாம். அங்ஙனமாயினும், இவ்வாக்கிய வலியால், பவமானமுதலிய துதிகளுள் ஒன்றில், இருபத்துநான்கு முதலியவைகளை முறையாய்ச் செய்து கொள்க. செய்யில், இருபக்கமும், பிருஷ்டியமும், ஸ்தோமமும் ஒத்தனவாகின்றன இவற்றால் சுவர்க்கத்தையடைகின்றார்கள் என்பது.

---

இத்தகைய பிருஷ்டிய சந்தோமங்களைப் புகழ்கின்றது.

பிராமணம் 7

**असत्रं वा एतद्यदछन्दोमं यच्छन्दोमा भवन्ति तेन सत्रं देवता एव पृष्ठै-रव रुन्धते पशूञ्छदोमैरोजो वै वीर्यं पृष्ठानि पशवश्छन्दोमा ओजस्येव वीर्ये पशुषु प्रति तिष्ठन्ति ।**

என்பது

உரை

*இதற்கும், முன்போல் உரை உரைத்துக் கொள்க என்பது.*

---

இவ்வாறு நடுவிலுள்ள பிருஷ்டியங்கள், இருபக்கத்துமுள்ள முப்பத்துமூன்று ஸ்தோமங்கள் என்பவைகளை மற்றொருவகையாற் புகழ்கின்றது.

பிரமாணம் 8

**त्रयस्त्रयस्त्रिꣳशा अवस्ताद्भवन्ति त्रयस्त्रयस्त्रिꣳशाः परस्तान्मध्ये पृष्ठान्युरो वै त्रयस्त्रिꣳशा आत्मा पृष्ठान्यात्मन एव तद्यजमानाः शर्म नह्यन्तऽ-नार्त्यै ।**

என்பது.

உரை

*மேலுங் கீழுமுள்ள முப்பத்துமூன்று ஸ்தோமங்கள் அனைத்தும் ஒருவனுடைய உடம்பு வடிவில்மார்பாம். நடுவிலுள்ள பிருஷ்டியங்கள் ஆன்மாவாம். இவ்விருவகை யநுட்டானததால் தல்லவர்கள் சுகத்தை யடைகின்றார்கள். இது, துன்ப நீக்கத்தின் பொருட்டாம் என்பது.*

---

கூறிய பிருஷ்டத்துதிகள், சுற்றிவருவதில் இரண்டு சாமங்களையே விதிக்கின்றது.

பிராமணம் 9

**बृहद्रथंतराभ्यांयन्तीयं वाव रथंतरमसौ बृहदाभ्यामेव यन्त्यथो अनयोरेव प्रति तिष्ठन्त्येते वै यज्ञस्याञ्जसायनीसृती ताभ्यामेव सुवर्गं लोकं यन्ति पराञ्चोवा एते सुवर्गं लोकमभ्यारोहन्ति ये पराचीनानि पृष्ठान्युप-यन्ति प्रत्यङ्षडहो भवति प्रत्यवरूढ्या अथो प्रतिष्ठित्या उभयोर्लोक-योर्ऋद्ध्वोत्तिष्ठन्ति ।**

என்பது·

உரை

இதற்கு உரை, இக்காண்டத்தின் இரண்டாம் பிரபாடகம் நான்காவது மந்திர உரைபோல் உரைத்துக் கொள்க என்பது.

---

உபாந்தியம் என்னும் இருபத்துமூன்றாவது நாளை விதிக்கின்றது.

பிராமணம் 10

त्रिवृतोऽधि त्रिवृतमुप यन्ति स्तोमानाꣳ संपत्त्यै प्रभवाय ज्योतिरग्निष्टोमो भवत्ययं वाव स क्षयोऽस्मादेव तेन क्षयान्न यन्ति ।

என்பது

உரை

ஆவிருத்தி பிருஷ்டிய ஆறுநாள் என்பது முப்பத்துமூன்று முதற் கொண்டு திரிவிருத் முடிந்ததாம். ஆகவே, இருபத்திரண்டாம் நாள் திரிவிருத் ஸ்தோம தினத்திற்கு மேபட்ட இருபத்துமூன்றாவது நாளிலும் திரிவிருத் ஸ்தோமமே அநுஷ்டித்தல் வேண்டும். அநுட்டிக்கில், ஸ்தோமங்களின் தொடர்ச்சிவரும் வரவே ஸ்தோம சம்பத்து உண்டாகும். அதாவது எசமானனுக்கு புத்திரப்பேறு முதலியவைகளுண்டாகும், ஆனால் அதில் எதைச் செய்தல் வேண்டுமெனிலோ, சோமயாகத்தின் முதல் பிரிவாகியதும், திரிவிருத் ஸ்தோமமுடையதுமாகிய சோதிட்டோம தினமே அநுட்டிக்கத் தக்கதாம் என்பது.

---

இவ்வேள்வியிலுள்ள நாட்களின் எண்ணைப்புகழ்கின்றது.

பிராமணம் 11

चतुर्विꣳशतिरात्रो भवति चतुर्विꣳशतिरर्धमासाः संवत्सरः संवत्सरः सुवर्गो लोकः संवत्सर एव सुवर्गे लोके प्रति तिष्ठन्त्यथो चतुर्विꣳशत्यक्षरा गायत्री गायत्री ब्रह्मवर्चसं गायत्रियैव ब्रह्मवर्चसमव रुन्धते ।

என்பது.

உரை

இதன், உரையை, முன் அநுவாகத்தின் ஐந்தாமந்திரத்தின் உரைபோல் உரைத்துக்கொள்க என்பது.

---

உதயனீய நாளை விதிக்கின்றது

பிராமணம் 12

**अतिरात्रावभितो भवतो ब्रह्मवर्चसस्य परिगृहीत्यै ।**

என்பது

உரை

இது அதிராத்திரமாகிறது. இதனல் பிரமவொளி அடையப் படுகின்றது என்பது. ஈண்டு, பிராயணீயத்துடன் சேர்த்துக் கூறுதற் பொருட்டு இருமைச்சொல்.

இரண்டாமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### மூன்ருவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்குமேல் ஐம்பது பதங்களைக் கொண்டது.

மூப்பது இரவுகளைக்கொண்ட யாகத்தை கூறும் பிராமணங்கள்

ऋक्षा वा इयमलोमकाऽऽसीत्साऽकामयतौषधीभिर्वनस्पतिभिः प्र जायेयेति सैतास्त्रिꣳशतꣳ रात्रीरपश्यत्ततो वा इयमोषधीभिर्वनस्पतिभिः प्राजायत ये प्रजाकामाः स्युस्त एता आसीरन्प्रैव जायन्ते प्रजया पशुभिरियं वा अक्षुध्यत्सैतां विराजमपश्यत्तामात्मन्धित्वाऽन्नाद्यमवारुन्धौषधीः ॥ ९ ॥ वनस्पतीन्प्रजां पशून्तेनावर्धत सा जेमानं महिमानमगच्छद्य एवं विद्वाꣳस एता आसते वि-

राजमेवाऽऽत्मन्धित्वाऽन्नाद्यमव रुन्धते वर्धन्ते प्रजया पशुभिर्नैमानं महिमानं गच्छन्ति ज्योतिरतिरात्रो भवति सुवर्गस्य लोकस्यानुख्यात्यै पृष्ठ्यः षडहो भवति षड्वा ऋतवः षट्पृष्ठानि पृष्ठैरेवर्तूनन्वारोहन्त्यृतुभिः संवत्सरं ते संवत्सर एव ॥१०॥ प्रति तिष्ठन्ति त्रयस्त्रिꣳशात्त्रयस्त्रिꣳशमुप यन्ति यज्ञस्य संतत्या अथो प्रजापतिर्वै त्रयस्त्रिꣳशः प्रजापतिमेवाऽऽरभन्ते प्रतिष्ठित्यै त्रिणवो भवति विजित्या एकविꣳशो भवति प्रतिष्ठित्या अथो रुचमेवाऽऽत्मन्दधते त्रिवृदग्निष्टुद्भवति पाप्मानमेव तेन निर्दहन्तेऽथो तेजो वै त्रिवृत्तेज एवाऽऽत्मन्दधते पञ्चदश इन्द्रस्तोमो भवतीन्द्रियमेवाव ॥ ११ ॥ रुन्धते सप्तदशो भवत्यन्नाद्यस्यावरुद्ध्या अथो प्रैव तेन जायन्त एकविꣳशो भवति प्रतिष्ठित्या अथो रुचमेवाऽऽत्मन्दधते चतुर्विꣳशो भवति चतुर्विꣳशतिरर्धमासाः संवत्सरः संवत्सरः सुवर्गो लोकः संवत्सर एव सुवर्गे लोके प्रति तिष्ठन्त्यथो एष वै विषूवान्विषूवन्तो भवन्ति य एवं विद्वाꣳस एता आसते चतुर्विꣳशात्पृष्ठान्युप यन्ति संवत्सर एव प्रतिष्ठाय ॥१२॥ देवता अभ्यारोहन्ति त्रयस्त्रिꣳशात्त्रयस्त्रिꣳशमुप यन्तित्रयस्त्रिꣳशद्वै देवता देवतास्वेव प्रति तिष्ठन्ति त्रिणवो भवतीमे वै लोकास्त्रिणव एष्वेव लोकेषु प्रति तिष्ठन्ति द्वावेकविꣳशौ भवतः प्रतिष्ठित्या अथो रुचमेवाऽऽत्मन्दधते बहवः षोडशिनो भवन्ति तस्माद्बहवः प्रजासु वृषाणो यदेते स्तोमा व्यतिषक्ता भवन्ति तस्मादियमोषधीभिर्वनस्पतिभिर्व्यतिषक्ता ॥ १३ ॥ व्यतिषज्यन्ते प्रजया पशुभिर्य एवं विद्वाꣳस एता आसतेऽक्लृप्ता वा एते सुवर्गं

लोकं यन्त्युच्चावचान्हिस्तोमानुपयन्ति यदेत ऊर्ध्वाः क्लृप्ताः स्तोमा भवन्ति क्लृप्ता एव सुवर्गं लोकं यन्त्युभयोरेभ्यो लोकयोः कल्पते त्रिꣳशदेतास्त्रिꣳशदक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धतेऽतिरात्रावभितो भवतोऽन्नाद्यस्य परिगृहीत्यै ॥ १४ ॥ ओषधीः संवत्सर एवाव प्रतिष्ठाय व्यतिषक्तैकान्न पञ्चाशच्च ॥ ३ ॥

இதில், முப்பது இரவுகள் கொண்ட யாகம் கூறப்படுகின்றது.

அதை விதிக்கின்றது

பிராமணம் 1

ऋक्षा वा इयमलोमकाऽऽसीत्साऽकामयतौषधीभिर्वनस्पतिभिः प्र जायेयेति सैतास्त्रिꣳशतꣳ रात्रीरपश्यत्ततो वा इयमोषधीभिर्वनस्पतिभिः प्राजायत ये प्रजाकामाः पशुकामाः स्युस्त एता आसीरन्प्रैव जायन्ते प्रजया पशुभिः ।

என்பது.

உரை

இப்பூமியின் மயிர்களோ, கொடி செடிகளும் வனஸ்பதிகளுமாகின்றன. ஒருகால் இவைகளின்றி பூமிமொட்டையாயிருந்தது. பிறகு, கொடி செடி தருக்களை யுண்டாக்கவேண்டுமென்று விரும்பி முப்பது இரவுகள் கொண்ட யாகத்தைச் செய்து பூமியானது கொடி செடி தருக்களை யுண்டாக்கிற்று. இவ்வாறே ஏனையோர்களும் பிரசை பசுக்களைவிரும்பி இதை அநுட்டிக்கில் பிரசைகளும் பசுக்களும் அவர்கட்கு உண்டாகின்றன என்பது.

---

உணவுப் பொருளையடைவதற்கும் இவ்வேள்வியையே விதிக்கின்றது.

பிராமணம் 2

इयं वा अक्षुध्यत्सैतां विराजमपश्यत्तामात्मन्धित्वाऽन्नाद्यमवारुन्धौषधीर्वनस्पतीन्प्रजां पशून्तेनावर्धत सा जेमानं महिमानमगच्छद्य एवं विद्वाꣳस एता आसते विराजमेवाऽऽत्मन्धित्वाऽन्नाद्यमव रुन्धते वर्धन्ते प्रजया पशुभिर्जेमानं महिमानं गच्छन्ति ।

என்பது

முப்பது நாள்)

உரை

ஒருகால் இப்பூமி உணவின்றி பசியால் வருந்திற்று. பிறகு அதற்குப் பரிகாரத்தை விரும்பி முப்பது இரவாகிய விராட்டைக் கண்டுபிடித்துத் தேடிச் செய்து உணவுப் பொருளை யடைந்தது. முப்பது எழுத்துக்கட்கு ஒப்பானதால் விராட் வடிவமாம். அவ்வன்னமோ, சோறு, புல், நீர் முதலாகப் பலவகைப்படும். ஆதலின் கொடிசெடிகளை வளர்த்ததும், வளர்ந்து எங்கும் வழிபடுதலாகிய மான்மியத்தை யடைந்தது. இவ்வாறே, ஏனையோர்களும் என்க. இதைஅநுட்டித்தலால் அத்தகைய பயனை யடைகின்றார்கள் என்பது.

---

முதல்நாளை விதிக்கின்றது

பிராமணம் 3

ज्योतिरतिरात्रो भवति सुवर्गस्य लोकस्यानुख्यात्यै ।

என்பது.

உரை

சோதி அதிராத்திரம் முதல் நாளாம். இது, சுவர்க்கத்தின் விளக்கத்திற்கு உபயோகப்படுவதாம் என்பது.

---

மேல்வரும் ஆறுநாட்களை விதிக்கின்றது

பிராமணம் 4

पृष्ठ्यः षडहो भवति षड्वा ऋतवः षट्पृष्ठानि पृष्ठैरेवर्तूनन्वारोहन्त्यृतुभिः संवत्सरं ते संवत्सर एव प्रति तिष्ठन्ति ।

என்பது

உரை

இதற்கு உரை முன்போல் உரைத்துக்கொள்க என்பது.

---

எட்டாம் நாளை விதிக்கின்றது

பிராமணம் 5

**त्रयस्त्रिꣳशात्त्रयस्त्रिꣳशमुप यन्ति यज्ञस्य संतत्या अथो प्रजापतिर्वै त्रयस्त्रिꣳशः प्रजापतिमेवाऽऽरभन्ते प्रतिष्ठित्यै ।**

என்பது

உரை

முற்கூறிய பிருஷ்டிய மென்னும் ஆறுநாட்களின் முடிவிலுள்ள தினம் முப்பத்துமூன்று ஸ்தோமங்களை யுடையதாமாதலின், அற்குமேல் வரும் எட்டாம் நாளும் முப்பத்து மூன்று ஸ்தோமமாகில் ஒரு தொடர்பாய் எக்ஞந் தொடர்ச்சியாகவரும். மற்றும், முப்பத்துமூன்று ஸ்தோமம் பிரசாபதியால் உண்டாக்கப் பெற்றதால் பிரசாபதி வடிவாம். ஆதலின் அதையநுட்டித்தலால் பிரசாபதியையே அநுட்டிக்கின்றவர்களாகின்றார்கள். அது, பெருமையின் பொருட்டாம் என்பது.

---

ஒன்பதாம்நாளை விதிக்கின்றது

பிராமணம் 6

**त्रिणवो भवति विजित्यै ।**

என்பது

உரை

இருபத்தேழு ஸ்தோமங்கள் ஒன்பதாநாளாம். இது வெற்றியின் பொருட்டாம் என்பது.

---

பத்தாம்நாளை விதிக்கின்றது

பிராமணம் 7

**एकविꣳशो भवति प्रतिष्ठित्या अथो रुचमेवाऽऽत्मन्दधते ।**

என்பது.

உரை

இருபத்தொரு ஸ்தோமங்கள் பத்தாநாளாம். இது, பெருமையின் பொருட்டும் ஆன்ம வொளியின் பொருட்டுமாம் என்பது.

---

பதினோராம்நாளை விதிக்கின்றது

பிராமணம் 8

त्रिवृदग्निष्टुद्भवति पाप्मानमेव तेन निर्दहन्तेऽथो तेजो वै त्रिवृत्तेज एवाऽऽत्मन्दधते ।

என்பது

உரை

அக்கினியைத் துதிக்கும் திரிவிருத் ஸ்தோமம் பதினோராநாளாம். இதனால்பாவம் நீங்குகின்றது. மற்றும், திரிவிருத் என்பது ஒளி வடிவாமாதலின் ஆன்மவொளியை யுண்டாக்குகின்றது என்பது.

---

பன்னிரண்டாம்நாளை விதிக்கின்றது

பிரமாணம் 9

पञ्चदश इन्द्रस्तोमो भवतीन्द्रियमेवाव रुन्धते

என்பது

உரை

இந்திரனைத் துதிக்கின்ற பதினைந்து ஸ்தோமங்கள் பன்னிரண்டாம் நாளாம். இதனால் இந்திரியத்தை யடைகின்றார்கள் என்பது.

---

பதின்மூன்றாவது நாளை விதிக்கின்றது

பிராமணம் 10

सप्तदशो भवत्यन्नाद्यस्यावरुद्‌ध्या अथो प्रैव तेन जायन्ते ।

என்பது.

உரை

பதினேழு ஸ்தோமங்கள் பதின்மூன்றுநாளாம். இது, அன்னத்திற்கும், பிரஜைகட்கும் காரணமாதலின், இதனால் அவ்விரண்டும் உண்டாகின்றன என்பது.

---

பதினான்காவது நாளை விதிக்கின்றது

பிராமணம் 11

एकविꣳशो भवति प्रतिष्ठित्या अथो रुचमेवाऽऽत्मन्दधते ।

என்பது

உரை

இருபத்தொரு ஸ்தோமங்கள் பதினான்கா நாளாம். இதனால், பெருமையும் ஆன்ம வொளியும் உண்டாகின்றன என்பது.

---

பதினைந்தாவது நாளை விதிக்கின்றது

பிராமணம் 12

चतुर्विꣳशो भवति चतुर्विꣳशतिरर्धमासाः संवत्सरः संवत्सरः सुवर्गो लोकः संवत्सर एव सुवर्गे लोके प्रति तिष्ठन्त्यथो एष वै विषूवान्विषूवन्तो भवन्ति य एवं विद्वाꣳस एता आसते ।

என்பது

உரை

இருபத்துநான்கு ஸ்தோமங்கள் பதினைந்தாநாளாம். இவ்வொப்பால், வருடவாயிலாக சுவர்க்கத்தில் நிலையுண்டாகின்றது. மற்றும், இந்நாள் பல்வகைப் பயன்களுண்டாவதற்குக் காரணமா மாதலின் இவ்வாறுணர்ந்து அநுட்டிக்கின்றவர்கட்கும் பல்வகையான பயன்கள் உண்டாகின்றன என்பது.

---

பதினாறாவது நாளிலிருந்து இருபத்தோருநாள்வரையுள்ள ஆறுநாட்களை விதிக்கின்றது

பிராமணம் 13

चतुर्विꣳशात्पृष्ठान्युप यन्ति संवत्सर एव प्रतिष्ठाय देवता अभ्यारोहन्ति ।

என்பது.

உரை

இருபத்துநான்கு ஸ்தோம நாளிலிருந்து மேல் நாளில் பிருஷ்டியங்கள் ஆறும் ஆறுநாளில் அநுட்டிக்கப் படுகின்றன. இதனால், முதல் வருடத்தில் பெருமையடைந்து பிந்திய ஆறுநாட்களாலும் மென்மேலுந் தேவதைகள் அடையப் படுகின்றன என்பது.

இருபத்திரண்டாம் நாளை விதிக்கின்றது

## பிராமணம் 14

**त्रयस्त्रिꣳशाद्वै देवता देवतास्वेव प्रति तिष्ठन्ति ।**

என்பது.

உரை

பிருஷ்டிய ஆறு நாட்களின் முடிவு நாளில் முப்பத்துமூன்று ஸ்தோமமாம். ஆதலின் அதற்குமேலும் மீண்டும் முப்பத்துமூன்று ஸ்தோமங்கள் அநுட்டிக்கப்படுகின்றன. அநுட்டிக்கில், முப்பத்துமூன்று எண் கொண்ட தேவர்களிடத்தில் நிலைக்கின்றார்கள் என்பது.

---

இருபத்துமூன்றாவது நாளை விதிக்கின்றது

## பிராமணம் 15

**त्रिणवो भवतीमे वै लोकास्त्रिणव एष्वेव लोकेषु प्रति तिष्ठन्ति ।**

என்பது

உரை

இருபத்தேழு ஸ்தோமங்கள் இருபத்துமூன்றுநாளாம். இருபத்தேழு என்பது மூன்று ஒன்பது கொண்டதாமாதலின் மூன்றுலகங்களிலும் பெருமையை யடைகின்றார்கள் என்பது.

---

இருபத்துநான்கு இருபத்தைந்தாவது தினங்களை விதிக்கின்றது.

## பிராமணம் 16

**द्वावेकविꣳशौ भवतः प्रतिष्ठित्या अथो रुचमेवाऽऽत्मन्दधते ।**

என்பது

உரை

இரண்டு நாட்களிலும் இருபத்தொன்றும். இது பிரதிட்டையின் பொருட்டாம். ஆதலின் இதனால் பெருமையும் ஆன்மவொளியும் உண்டாகின்றன என்பது.

---

(முப்பது நாள்

இருபத்தைந்தாநாள் முதல், இருபத்தொன்பதாநாள் வரை யுள்ள ஐந்துநாளை விதிக்கின்றது.

பிராமணம் 17

बहवः षोडशिनो भवन्ति तस्माद्बहवः प्रजासु वृषाणः ।

என்பது

உரை

சோடசி யென்னும் துதிகளுடன் கூடியநாள் சோடசிகள். அவைகளை இங்கு இடைவிடாமல் ஐந்துநாள் அநுட்டித்தல் வேண்டும். சோடசி என்பது புத்திரோற்பத்திக்குக் காரணமாதலின் பல ஆண்களுள் சிலர்கள் ஆண் தன்மையுடையவர்களாக இருக்கின்றார்கள் என்பது.

---

இச் சோடசிகட்கு கீழ் அநுட்டிக்கப்பட்ட ஒன்றற்கொன்று மாறுபட்டுள்ள ஸ்தோமங்களைப் புகழ்கின்றது.

பிராமணம் 18

यदेते स्तोमा व्यतिषक्ता भवन्ति तस्मादियमोषधीभिर्वनस्पतिभिर्व्यतिषक्ता ।

என்பது

உரை

இந்த ஸ்தோமங்கள் குறைவு மிகுதிகளையுடையனவைகளாய் ஒன்றற்கொன்று கலந்துகிடக்கின்றன. ஆதலின், பூமியும் நியமமின்றி கொடி செடி வனஸ்பதிகளுடன் கலந்துகொண்டிருக்கின்றது என்பது.

---

ஸ்தோமங்களின் ஒன்றற்கொன்றுள்ள மாறுபாட்டை யுணர்ந்தவனைப் புகழ்கின்றது

பிராமணம் 19

व्यतिषज्यन्ते प्रजया पशुभिर्य एवं विद्वाꣳस एता आसते ।

என்பது.

உரை.

இவ்வாறுணர்ந்து முப்பது இரவுகள் கொண்ட இவ்வேள்வியை அநுட்டிக்கின்றவர்களுள் இவனுக்குப் பிரசைகள், இவனுக்குப் பசுக்கள் என்னும் பாகுபாடு இல்லாததால் அனைவரும் பசுக்களையும் பிரசைகளையு மடைகின்றார்கள் என்பது

முப்பது நாள்)

ஷோடசிதினங்களில் உள்ள ஒரேவிதமானஸ்தோமங்களைப் புகழ்கின்றது.

பிராமணம் 20

अकॢप्ता वा एते सुवर्गं लोकं यन्त्युच्चावचान्हि स्तोमानुपयन्ति यदेत ऊर्ध्वाः कॢप्ताः स्तोमा भवन्ति कॢप्ता एव सुवर्गं लोकं यन्त्युभयोरेभ्यो लोकयोः कल्पते ।

என்பது

உரை

பூர்வ தினங்களில் ஒன்றற்கொன்று குறைவு நிறைவால் விலக்ஷண மாகிய ஸ்தோமங்களை யநுட்டிக்கின்ற எசமானர்கள், இவ்வளவு உனக்கு புசிக்கத்தக்கது என்னும் உறுதிப்பாடு இல்லாமல் சுவர்க்க முழுமையு மடைகின்றார்கள். இதற்குமேல் உறுதிப்பட்ட இருவகைகளை யுமநுட்டிக்கின்றவர்களுக்கு இரண்டுலகங்களிலும் போக்கியம் நியதமாகவே உண்டாகும் என்பது.

---

இவ்வேள்வியினுடைய தினங்களின் எண்புகழப்படுகின்றது.

பிராமணம் 21

त्रिꣳशदेतास्त्रिꣳशदक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धते ।

என்பது

உரை

இதனால், முப்பது எழுத்துக்கள் கொண்ட விராட் சந்த மென்னும் உணவுப் பொருளை யடைகின்றார்கள் என்பது.

---

முடிவாகுந்தினத்தை விதிக்கின்றது

பிராமணம் 22

अतिरात्रावभितो भवतोऽन्नाद्यस्य परिगृहीत्यै ।

என்பது

உரை

கடைசிநாள் உதயனீய மென்னும் அதிராத்திரமாம். இதனால் உணவுப் பொருள் முதலியவற்றை யடைகின்றார்கள் என்பது

ஈண்டு, பிராயணீயத்துடன் சேர்த்துக் கூறுவதன் பொருட்டு இருமைச் சொல்.

மூன்றுவது அநுவாகம்

முற்றிற்று.

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### நான்காவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிக்குமேல் இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.*

முப்பத்திரண்டு இரவுகளைக்கொண்ட யாகத்தை விதிக்கும் பிராமணங்கள்

प्रजापतिः सुवर्गं लोकमैत्तं देवा येनयेन छन्दसाऽनु प्रायुञ्जत तेन नाऽऽप्नुवन्त एता द्वात्रिꣳशतꣳ रात्रीरपश्यन्द्वात्रिꣳशदक्षराऽनुष्टुगानुष्टुभः प्रजापतिः स्वेनैव छन्दसा प्रजापतिमाप्त्वाऽभ्यारुह्य सुवर्गं लोकमायन्नृय एवं विद्वाꣳस एता आसते द्वात्रिꣳशदेता द्वात्रिꣳशदक्षराऽनुष्टुगानुष्टुभः प्रजापतिः स्वेनैव छन्दसा प्रजापतिमाप्त्वा श्रियं गच्छन्ति ॥ १५ ॥ श्रीर्हि मनुष्यस्य सुवर्गो लोको द्वात्रिꣳशदेता द्वात्रिꣳशदक्षराऽनुष्टुग्वागनुष्टुप्सर्वामेव वाचमाप्नुवन्ति सर्वे वाचो वदितारो भवन्ति सर्वे हि श्रियं गच्छन्ति ज्योतिर्गौरायुरिति त्र्यहा भवन्तीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुरिमानेव लोकानभ्यारोहन्त्यभिपूर्वं त्र्यहा भवन्त्यभिपूर्वमेव सुवर्गं लोकमभ्यारोहन्ति बृहद्रथंतराभ्यां यन्ति ॥ १६ ॥ इयं वाव रथंतरमसौ बृहदाभ्यामेव यन्त्यथो अनयोरेव प्रति तिष्ठन्त्येते वै यज्ञस्याञ्जसायनी स्रुती ताभ्यामेव सुवर्गं लोकं यन्ति पराञ्चो वा एते सुवर्गं लोकमभ्यारोहन्ति ये पराचस्त्र्यहानुपयन्ति प्रत्यङ्त्र्यहो भवति प्रत्यवरूढ्या अथो प्रतिष्ठित्या उभयोर्लोकयोर्ऋद्ध्वोत्तिष्ठन्ति द्वात्रिꣳशदेतास्तासां यास्त्रिꣳशत्त्रिꣳशदक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धते ये द्वे अहोरात्रे एव ते उभाभ्याꣳ रूपाभ्याꣳ

முப்பத்திரண்டு நாள்)

सुवर्गं लोकं यन्त्यतिरात्रावभितो भवतः परिगृहीत्यै ॥ १७ ॥
गच्छन्ति यन्ति त्रिꣳशदक्षरा द्वाविꣳशतिश्च । ॥ ४ ॥

இதில், முப்பத்திரண்டு நாட்கள் கொண்ட யாகங் கூறப்படுகின்றது.

அதைவிதிக்கின்றது

பிராமணம் 1

प्रजापतिः सुवर्गं लोकमैत्तं देवा येनयेन छन्दसाऽनु प्रायुञ्जत तेन नाऽऽप्नुवन्त एता द्वात्रिꣳशतꣳ रात्रीरपश्यन्द्वात्रिꣳशदक्षराऽनुष्टुगानुष्टुभः प्रजापतिः स्वेनैव छन्दसा प्रजापतिमाप्त्वाऽभ्यारुह्य सुवर्गं लोकमायन्य एवं विद्वाꣳस एता आसते द्वात्रिꣳशदेता द्वात्रिꣳशदक्षराऽनुष्टुगानुष्टुभः प्रजापतिः स्वेनैव छन्दसा प्रजापतिमाप्त्वा श्रियं गच्छन्ति श्रीर्हि मनुष्यस्य सुवर्गो लोकः ।

என்பது

உரை

தேவர்கள், பிரசாபதியானவர் சுவர்க்கத்தை யடையும்போது அவரைப் பற்றிக் கொண்டுதாமும் சுவர்க்கமடைய எண்ணி எவ்வெச் சந்தங்களுடன் எக்ருத்தை யநுட்டித்தார்களோ, அவ்வனைத்தாலும் சுவர்க்கம் அடையமுடியவில்லை. பிறகு அததேவர்கள், முப்பத்திரண்டு இரவுகள்கொண்ட இவ்வேள்வியைக் கண்டுபிடித்து அதற்கு வேண்டியவற்றைத் தேடிச் செய்தனர். அவ்வெண் அநுஷ்டுப் சந்தத்திலிருத்தலானும் பிரசாபதியும் அநுஷ்டுபாமாதலானும் அவருடைய சந்தததால அவரையடைந்து அவருடன் சுவர்க்கத்தையுமடைந்து இனிய போகத்தைப் பெற்றுக்கொண்டனர். அவ்வாறே, ஏனையோர்களும் இதை அநுட்டிக்கில பிரசாபதியின் அருளால் செல்வத்தை யடைவார்கள். ஈண்டு மனிதரின் செல்வ மிகுதியே சுவர்க்கமாம் ஆதலின் சுவர்க்கத்தை யடைவார்கள் என்பது.

---

இவ் வேள்வியின் நாட்களின் எண் புகழப்படுகின்றது

பராமணம் 2

द्वात्रिꣳशदेता द्वात्रिꣳशदक्षराऽनुष्टुग्वागनुष्टुप्सर्वामेव वाचमाप्नुवन्ति सर्वे वाचो वदितारोभवन्ति सर्वे हि श्रियं गच्छन्ति ।

என்பது.

உரை

இவ்வெக்ஞத்தின் நாட்கள் முப்பத்திரண்டாம். அநுஷ்டுப் சந்தமும் முப்பத்திரண்டு எழுத்துக்களைக் கொண்டதாம். ஆகவே, அநுஷ்டுப் என்பது வாக்விசேடமாதலின் வாக்கேயாம். ஆதலின், இதை அநுட்டித்தலால் மறைகள்சாத்திரங்கள் முதலான எல்லா வாக்குக்களையு மடைகின்றார்கள். அதாவது, எசமானர்களனைவரும் சபையில் பிரமிக்கும்படி பேசும் வன்மையை யடைகின்றார்கள் என்பதாம். அத்தகைய சொற்பொழிவால் எல்லாரும் வழிபடுவதாகிய செல்வத்தையு மடைகின்றார்கள் என்பது.

---

இனி; தினங்களைவிதிக்கின்றது.

பிராமணம் 3

ज्योतिर्गौरायुरिति त्र्यहा भवन्तीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुरिमानेव लोकानभ्यारोहन्त्यभिपूर्वं त्र्यहा भवन्त्यभिपूर्वमेव सुवर्गं लोकमभ्यारोहन्ति ।

என்பது.

உரை

சோதி, கௌ, ஆயுள் என்பன மூன்று நாட்கள். அவற்றுள் சோதி-இவ்வுலகம், அந்தரிக்ஷம் - கௌ, ஆயுள் - சுவர்க்கம் என்பனவாதலின் மூன்றுலகங்களையு மடைகின்றார்கள். மூன்று நாட்கள் என்பதால் ஒன்பதுநாள் இவைகளை யநுட்டித்தல் வேண்டும்என்க. இது எண்ணின் படியாம். இவைகளைத்தும் நேர்முறையாகவே அநுட்டித்தல் வேண்டும். இதனால் நேர்முறையாகவே சுவர்க்கத்திலேறுகின்றார்கள் என்பது.

---

இனி, எஞ்சிய இருபத்தொரு நாட்களிலும் பிருஷ்டத் துதிகளின் பொருட்டு இரண்டு சாமப்பாடல்களாம் என்றுங் கருத்துக்கொண்டு விதிக்கின்றது.

பிராமணம் 4

बृहद्रथंतराभ्यां यन्तीयं वाव रथंतरमसौ बृहदाभ्यामेव यन्त्यथो अनयोरेव प्रति तिष्ठन्त्येते वै यज्ञस्याञ्जसायनी स्रुती ताभ्यामेव सुवर्गं लोकं यन्ति ।

என்பது.

உரை

இதன் உரையை முன்போல் உரைத்துக்கொள்க என்பது.

முப்பத்திரண்டு நாள்)

இனி, தலைகீழாக அநுட்டிக்கவேண்டிய ஒரு முன்றுநாளை விதிக்கின்றது

பிராமணம் 5

**पराञ्चो वा एते सुवर्गं लोकमभ्यारोहन्ति ये पराचस्त्र्यहाननुपयन्ति प्रत्यङ्त्र्यहो भवति प्रत्यवरूढ्या अथो प्रतिष्ठित्या उभयोर्लोकयोर्ऋद्ध्वोत्तिष्ठन्ति ।**

என்பது

உரை

இதன் உரையையும் முன்போல் உரைத்துக் கொள்க என்பது.

---

முன், கூட்டமாய்ப் புகழப்பெற்றது, இனி பிரித்துப் புகழ்கின்றது

பிராமணம் 6

**द्वात्रिꣳशदेतास्तासां यास्त्रिꣳशत्त्रिꣳशदक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धते ये द्वे अहोरात्रे एव ते उभाभ्याꣳ रूपाभ्याꣳ सुवर्गं लोकं यन्ति ।**

என்பது

உரை

இதில், முப்பது எண்ணிருத்தலால் முப்பது எழுத்துக் கொண்ட விராட் வாயிலாக உணவு கிடைக்கின்றது. மேலேயுள்ள இரண்டால் பகலிரவுகள் இரண்டாமாதலின், அவ்விரண்டின் வடிவால் சுவர்க்க லோகத்தை யடைகின்றார்கள் என்பது.

---

பிராயணீய உதயனீயமிரண்டையும் விதிக்கின்றது.

பிராமணம் 7

**अतिरात्रावभितो भवतः परिगृहीत्यै ।**

என்பது,

உரை

அதிராத்திரங்களிரண்டும் எல்லாவகையாலும் ஏற்றுக் கொள்ளுதற் பொருட்டாம் என்பது.

நான்காம் அநுவாகம்

முற்றிற்று.

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### ஐந்தாவது அநுவாகம்

*நான்கு பஞ்சாதிக்குமேல் பதினேழு பதங்களைக் கொண்டது.*

முப்பத்துமூன்று இரவுகளைக்கொண்டு எக்ஞத்தை விதிக்கும் பிராமணங்கள்

द्वे वाव देवसत्रे द्वादशाहश्चैव त्रयस्त्रिꣳशदहश्चय एवं विद्वाꣳस-
स्त्रयस्त्रिꣳशदहमासते साक्षादेव देवता अभ्यारोहन्ति यथा खलु
वै श्रेयानभ्यारूढः कामयते तथा करोति यद्यवविध्यति पापीया-
न्भवति यदिनावविध्यति सदृङ्य एवं विद्वाꣳसस्त्रयस्त्रिꣳशदह
मासते वि पाप्मना भ्रातृव्येणाऽऽवर्तन्तेऽहर्भाजो वा एता देवा
अग्र आऽहरन् ॥ १८ ॥ अहरेकोऽभजताहरेकस्ताभिर्वै ते प्रबाहु-
गार्ध्नुवन्य एवं विद्वाꣳसस्त्रयस्त्रिꣳशदहमासते सर्व एव प्रबाहु-
गृध्नुवन्ति सर्वे ग्रामणीयं प्राऽऽप्नुवन्ति पञ्चाहा भवन्ति पञ्च वा
ऋतवः संवत्सर ऋतुष्वेव संवत्सरे प्रति तिष्ठन्त्यथो पञ्चाक्षरा
पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धते त्रीण्याश्विनानि भवन्ति
त्रय इमे लोका एषु ॥ १९ ॥ एव लोकेषु प्रति तिष्ठन्त्यथो त्रीणि
वै यज्ञस्येन्द्रियाणि तान्येवाव रुन्धते विश्वजिद्भवत्यन्नाद्यस्याव
रुद्ध्यै स र्वपृष्ठो भवति स र्वस्याभिजित्यै वाग्वै द्वादशाहो यत्पुरस्ता-
द्वादशाहमुपेयुरनाप्तां वाचमुपेयुरुपदासुकैषां वाक्स्यादुपरिष्टाद्द्वा-
दशाहमुप यन्त्याप्तामेव वाचमुप यन्ति तस्मादुपरिष्टाद्वाचा वदामो
ऽवान्तरम् ॥ २० ॥ वै दशरात्रेण प्रजापतिः प्रजा असृजत यद्द
शरात्रो भवति प्रजा एव तद्यजमानाः सृजन्त एताꣳह वा उदङ्कः

முப்பத்துமூன்றுநாள்)

शौल्बायनः सत्त्रस्यर्धिमुवाच यद्दशरात्रो यद्दशरात्रो भवति सत्त्रस्य-र्ध्या अथ यदेव पूर्वेष्वहःसु विलोमक्रियते तस्यैवैषा शान्तिर्द्व्यनीका वा एता रात्रयो यजमाना विश्वजित्सहातिरात्रेण पूर्वाः षोडश सहा-तिरात्रेणोत्तराः षोडश य एवं विद्वाꣳसस्त्रयस्त्रिꣳशदहमासत ऐषां द्व्यनीका प्रजा जायतेऽतिरात्रावभितो भवतः परिगृहीत्यै ॥२१॥
अहरन्त्येष्ववान्तरꣳ षोडश सह सप्तदश च ॥

இதில், முப்பத்துமூன்று இரவுகள் கொண்ட யாகங் கூறப்படுகின்றது.

அதைவிதிக்கின்றது

பிராமணம் 1

द्वे वाव देवसत्त्रे द्वादशाहश्चैव त्रयस्त्रिꣳशदहश्च य एवं विद्वाꣳसस्त्रयस्त्रिꣳ-शदहमासते साक्षादेव देवता अभ्यारोहन्ति यथा खलु वै श्रेयानभ्या-रूढः कामयते तथा करोति यद्यवविध्यति पापीयान्भवति यदिनाव-विध्यति सदृङ्य एवं विद्वाꣳसस्त्रयस्त्रिꣳशदहमासते वि पाप्मना भ्रातृव्येणाऽऽवर्तन्ते ।

என்பது

உரை

தேவர்கட்கு மிகப் பிரியமானது பன்னிருநாள் யாகம் முப்பத்து மூன்று நாள் யாகம் என்னும் இரண்டேயாம். இத்தன்மையை யுணர்ந்து முப்பத்து மூன்று நாள் யாகத்தைச் செய்கின்றவன் உடனே தேவர்களை யடைகின்றான். மற்றும், இதனால் பாவமும் நீங்குகின்றது. அதற்கு எதிர் மறையாகிய உவமை வருமாறு:— மந்திரி முதலானவர்களுடன் அரசசிம்மா சனத்திலமர்ந்தவன், நால்வகை யுபாயங்களாலும் அவ்விராச்சியம் பெருமை யாய் விளங்கும்படி செய்கின்றான். அதில் மயக்கமுடையனானால்; பாவியா கின்றான். இன்றேனில் முன்னிருந்த பெருமையையே யடைகின்றான் மிகுந்த பெருமையை யடையான். இங்கு, உண்மையையுணர்ந்து முப்பத்து மூன்று நாட்களைக் கொண்ட இவ்வேள்வியைச் செய்தவன், தேவர்களை யடைவதுடன், அதன் தடையும் நீங்கி பகைவனுடன் வேறுபட்டவனாய் முன்னிருந்த தெய்வத்தன்மையைவிட மிகுதியாகி தன்மையையடைகின்றான் என்பதாம்.

அதுவே, மீண்டும் மற்றொருவகையால் புகழப்படுகின்றது.

பிராமணம் 2

**अहर्भाजो वा एता देवा अग्र आऽहरन्नहरेकोऽभजताहरेकस्ताभिर्वै ते प्रबाहुगार्ध्नुवन्य एवं विद्वाꣳसस्त्रयस्त्रिꣳशदहमासते सर्व एव प्रबाहुगृध्नुवन्ति सर्वे ग्रामणीयं प्राऽऽप्नुवन्ति ।**

என்பது.

உரை

வேள்விநாட்களை அநுட்டிக்கின்ற தேவர்கள், முதல் நாள் ஒருவர், மற்றொருநாள் மற்றொருவர் என்றிவ்வாறு முப்பத்துமூன்று தேவர்களும் முப்பத்துமூன்று நாட்களையும் அநுட்டித்தனர். இவ்வாறு அநுட்டித்ததால் எல்லாத் தேவர்களுமே சமமாகச் சம்பத்தை யடைந்தார்கள். இவ்வாறு, இம் முப்பத்துமூன்று நாட்கள் கொண்ட யாகத்தைச் செய்கின்ற எசமானர்கள் எல்லாச் சம்பத்தையு மடைகின்றார்கள்; அதாவது கிராமங்கட்குத் தலைவரா கின்றார்கள் என்பது.

---

இனி, தினங்களை விதிக்கின்றது

பிராமணம் 3

**पञ्चाहा भवन्ति पञ्च वा ऋतवः संवत्सर ऋतुष्वेव संवत्सरे प्रति तिष्ठन्त्यथो पञ्चाक्षरा पङ्क्तिः पाङ्क्तो यज्ञो यज्ञमेवाव रुन्धते ।**

என்பது

உரை

சோதி, கௌ, ஆயுள் என்னும் மூன்றையும் இரண்டாய்ப் பெருக்கில் ஆறும். அவற்றுள், இரண்டாவது சோதியை விட்டுவிடில் ஐந்தாகின்றது அவ் வாறுள்ள ஐந்துநாளிலும் இங்கு எவ்வளவு வேண்டுமோ, அவ்வளவு அதா வது நான்கு நாள் அநுட்டித்தல் வேண்டும் இது கொண்டு எண் நிரம்புகின் றது. ஆதலின் நான்கே விதிக்கப்படுகின்றன. குளிர்காலம் பனிக்காலத்தை ஒன் று படுத்தில் இருதுக்கள் ஐந்தாகின்றன. இவற்றால் வருடத்தில் நிலைத்திருக் கின்றார்கள். மற்றும் ஐந்தென்றதால் ஐந்தெழுத்துக்களைக் கொண்ட பந்திச் சந்தவாயிலாக பாந்தம் என்னும் எக்ஞத்தையு மடைகின்றார்கள் என்பது.

முப்பத்துமூன்றுநாள்)

பிராணீயம் உதயனீயம் என்னும் அதிராத்திரங்கட்கும், இடையிலுள்ள அதிராத்ரத்திற்கும் சஸ்திரங்கள் இன்ன வென்று விதிக்கின்றது.

பிராமணம் 4

त्रीण्याश्विनानि भवन्ति त्रय इमे लोका एष्वेव लोकेषु प्रति तिष्ठन्त्यथो त्रीणि वै यज्ञस्येन्द्रियाणि तान्येवाव रुन्धते ।

என்பது

உரை

ஆசுவினம் என்பதால் உபலக்ஷிதமாய்க் கொள்ளப்பட்ட மூன்று சஸ்திரங் துதிப்பாடல் விசேடங்)களை அநுட்டிக்கும் மூன்று நாட்களையும் அநுட்டிப்பதால் உலக மூன்றிலும் பெருமையுடையவராகின்றார்கள். மற்றும், எக்ஞத்திற்கு இந்திரியங்கள் போன்ற மூன்று சவனங்களையு மடைகின்றார்கள் என்பது.

---

மற்றேநநாளை விதிக்கின்றது

பிராமணம் 5

विश्वजिद्भवत्यन्नाद्यस्यावरुद्ध्यै ।

என்பது.

உரை

இது விசுவசித் என்பதாம். இது விசுவ வெற்றிக்குக் காரணமாம். இதனால், உணவுப் பொருள் முதலானவைகள் கிடைக்கின்றன என்பது.

---

மேற்கூறிய விசுவசித் என்பதையே விசேடித்துக்கூறுகின்றது.

பிராமணம் 6

सर्वपृष्ठो भवति सर्वस्याभिजित्यै ।

என்பது

உரை

இது, இரதந்தரம் முதலிய ஆறு பிருஷ்டத் துதிகளையு முடையதாம், இதனால் எல்லாப் பயன்களுங் கிடைக்கின்றன என்பது.

---

ஏனையநாட்களை விதிக்கின்றது

பிராமணம் 7

वाग्वै द्वादशाहो यत्पुरस्ताद्द्वादशाहमुपेयुरनाप्तां वाचमुपेयुरुपदासुकैषां वाक्स्यादुपरिष्टाद्द्वादशाहमुप यन्त्याप्तामेव वाचमुप यन्ति तस्मादुपरिष्टा-द्वाचा वदामः ।

என்பது.

உரை

பன்னிரண்டாவது நாள் பல்வகைத் துதிகளையும் சஸ்திரங்களையு முடையதாமாதலின் வாக்கு வடிவாம். அத்தகைய நாளை, கூறிய நாட்களுக்கு முன்னர் அநுட்டிக்கில், அங்கு, துதி சஸ்திரங்கள் ஒன்றுங் கூறப் படாமையின் வாக்கு நிறையமாட்டாது. அவ்வேள்வித் தலைவர்கட்கும் வாக்குக் குறைவுபடும். ஆதலின், கூறிய நாட்களுக்குப் பிறகு அநுட்டிக்கில் கிடைக்க உரித்தாகிய முழுவாக்கையும் அடைகின்றார்கள். ஆதலின், பன்னி ரண்டாம் நாளின் அநுட்டானம் மூற்பாகத்திலாம். இதுபற்றியே, நாபியின் மேல்பக்கமாய் வாக்கால் யாம் பேசுகின்றோம் என்பது.

---

இங்கு, பன்னிரண்டுநாள் என்பதால் பிராயணீய உதயனீய மென்னும் இரண்டு நாட்களையும் விட்டுவிட்டு பத்துஇரவுகளே கொள்ளப்படுகின்றன என்னுங்குறிப்பை விளக்குகின்றது.

பிராமணம் 8

अवान्तररं वै दशरात्रेण प्रजापतिः प्रजा असृजत यद्दशरात्रो भवति प्रजा एव तद्यजमानास्सृजन्ते ।

என்பது

உரை

பன்னிரண்டு நாட்களின் அவயவமாகிய பத்து நாட்களாலேயே முன்னர் பிரசாபதி உலகைப் படைத்தனன். ஆதலின், இங்குப் பத்து ராத்திரங்கள் அநுட்டிக்கப் பெறின், எசமானர்கள் பிரசைகளை யுண்டாக்குகின்றார்கள் என்பது.

---

அப் பத்துராத்திரிகளையே மீண்டும் புகழ்கின்றது

பிராமணம் 9

**एतांद्ध वा उदङ्कः शौल्बायनस्सत्रस्यर्धिमुवाच यद्दशरात्रो यद्दशरात्रो भवति सत्रस्यर्ध्या अथो यदेव पूर्वेष्वहस्सु विलोम क्रियते तस्यैवैषा शान्तिः ।**

என்பது

உரை

சுல்பருடைய புத்திரராகிய உதங்கர், முப்பதது இரவுகொண்ட சத்ர யாக அங்கத்தை யநுட்டிக்கில் எல்லாச் சத்திர யாகங்களின் பயன்முழுதுங் கிடைக்குமென்று கூறியுள்ளார். ஆதலின், முப்பத்துமூன்று இரவுகளை யநுட்டிக்கின் எல்லாச் சம்பத்துக்களுங் கிடைக்கின்றன. மற்றும், முன் தினங்களில் ஏதாவது அங்கம் குறைவுபட்டிருக்கில் அதுவும் இதனுல் சாந்தமாகின்றது என்பதாம்.

---

விதித்த, விசுவஜித், சநுஷபிநஷ்டநாளை விதிக்கின்றது.

பிராமணம் 10

**द्व्यनीका वा एता रात्रयो यजमाना विश्वजित्सहातिरात्रेण पूर्वाष्षोडश सहातिरात्रेणोत्तराः षोडश य एवं विद्वांस्सत्रयस्त्रिंशदहमासत एषां द्व्यनीका प्रजा जायते ।**

என்பது.

உரை

இருவகையான சேனைகள்போன்ற இரவுகளைக்கொண்டதாம். அதாவது, பிராயணீய மென்னும் அதிராத்திரத்துடன் மூன்று ஐந்துநாட் (பதினைந்து நாட்)கள் முன்னுள்ள சேனையாம். உதயனீய மென்னும் அதிராத்ரததுடன் ஒரு ஐந்துநாள், பத்து இரவுகள் என்னும் பதினாறும் நாட்கள் பின்னுள்ள சேனையாம், விசுவசித், என்பது எசமானனைப் போன்றதாமாதலின், இருபுறத்துமுள்ள சேனைகட்கு நடுவில் பதினேழாவதாக நடுநாளில் அநுட்டிக்கத்தக்கதாம். இவவாறுணர்ந்து இதை அநுட்டிக்கும் எசமானர்கள், அநேகம் ஆண் குழந்தைகளும பெண் குழந்தைகளும் பிறக்கின்றன என்பது.

பிராயுணீய உதயனீயங்களை விதிக்கின்றது

பிராமணம் 11

अतिरात्राबभितो भवतः परिगृहीत्यै ।

என்பது

உரை

இவ்விரண்டு அதிராத்திரங்களும் வேள்வியை ஏற்றுக் கொள்ளுதற் பொருட்டாம் என்பது.

ஐந்தாமநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### ஆறுவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பத்தாறு பதங்களைக் கொண்டது.

முப்பத்தாறு இரவுகள்கொண்டயாகத்தை விதிக்கும் பிராமணங்கள்.

आदित्या अकामयन्त सुवर्गं लोकमियामेति ते सुवर्गं लोकं न प्राजानन्न सुवर्गं लोकमायन्त एतꣳषट्त्रिꣳशद्रात्रमपश्यन्तमाऽह-रन्तेनायजन्त ततो वै ते सुवर्गं लोकं प्राजानन्त्सुवर्गं लोकमायन्य एवं विद्वाꣳसः षट्त्रिꣳशद्रात्रमासते सुवर्गमेव लोकं प्र जानन्ति सुवर्गं लोकं यन्ति ज्योतिरतिरात्रः ॥ २२ ॥ भवति ज्योतिरेव पुरस्ताद्धते सुवर्गस्य लोकस्यानुख्यात्यै षडहा भवन्ति षड्वा ऋतव ऋतुष्वेव प्रति तिष्ठन्ति चत्वारो भवन्ति चतस्रो दिशो दिक्ष्वेव प्रति तिष्ठन्त्यसत्रं वा एतद्यदछन्दोमं यच्छन्दोमा भवन्ति तेन सत्रं देवता एव पृष्ठैरव रुन्धते पशूञ्छन्दोमैरोजो वै वीर्यं पृष्ठानि पशवश्छन्दोमा ओजस्येव ॥ २३ ॥ वीर्ये पशुषु प्रति तिष्ठन्ति षट्-

முப்பத்தாறுநாள்)

त्रिꣳशद्रात्रो भवति षट्त्रिꣳशदक्षरा बृहती बार्हताः पशवो बृहत्यैव पशूनव रुन्धते बृहती छन्दसाꣳ स्वाराज्यमाश्नुताश्नुवते स्वाराज्यं य एवं विद्वाꣳसः षट्त्रिꣳशद्रात्रमासते सुवर्गमेव लोकं यन्त्यतिरात्रावभितो भवतः सुवर्गस्य लोकस्य परिगृहीत्यै ॥ २४ ॥ अतिरात्र ओजस्येव षट्त्रिꣳशच्च । ॥ ६ ॥

இதில் முப்பத்தாறு நாட்கள் கொண்ட யாகங் கூறப்படுகின்றது.

அதைவிதிக்கின்றது

பிராமணம் 1

आदित्या अकामयन्त सुवर्गं लोकमियामेति ते सुवर्गं लोकं न प्रजानन्न सुवर्गं लोकमायन्त एतꣳ षट्त्रिꣳशद्रात्रमपश्यन्तमाऽहरन्तेनायजन्त ततो वै ते सुवर्गं लोकं प्राजानन्त्सुवर्गं लोकमायन्य एवं विद्वाꣳसः षट्त्रिꣳशद्रात्रमासते सुवर्गमेव लोकं प्र जानन्ति सुवर्गं लोकं यन्ति ।

என்பது

உரை

ஒருக்கால், ஆதித்தர்கள் சுவர்க்கத்தை யடைய விரும்பி அதன்வழியுங் கூடத்தெரியாமல் அதை அடையாமலிருந்தனர். பிறகு, முப்பத்தாறு நாட்கள் கொண்ட யாகத்தைக் கண்டுபிடித்து அதன் உபகரணங்களைத் தேடிச் செய்து சுவர்க்கத்தையடையு மார்க்கத்தை யுணர்ந்து சுவர்க்கத்தை யடைந்தனர். அங்ஙனமே இதை யுணர்ந்து செய்கின்றவர்களும் சுவர்க்கத்தின் மார்க்கத்தைபுணர்ந்து சுவர்க்கத்தை யடைவார்கள் என்பது.

---

பிராயணீய ஆரம்ப) நாளை விதிக்கின்றது.

பிராமணம் 2

ज्योतिरतिरात्रो भवति ज्योतिरेव पुरस्ताद्दधते सुवर्गस्य लोकस्यानुख्यात्यै ।

என்பது.

உரை.

சோதியே அதிராத்திர மென்னும் பிராணீய நாளாம். சுவர்க்கலோக விளக்கத்தின் பொருட்டு முதலில் சோதி ஏற்றுக்கொள்ளப் படுகின்றது என்பது.

---

இனி, மேலேயுள்ளநாட்களுள் சிலவற்றை விதிக்கின்து

பிராமணம் 3

षडहा भवन्ति षड्वा ऋतव ऋतुष्वेव प्रति तिष्ठन्ति ।

என்பது

உரை

சோதி கௌ ஆயுள், ஆயுள், சோதி, கௌ என்பது ஒரு ஆறுநாட்களாம். இருதுக்களும் ஆறும். இதனால், இருதுக்களில் நிலைக்கின்றார்கள் என்பது.

---

அவைகளின் எண் விதிக்கப்படுகின்றது

பிராமணம் 4

चत्वारो भवन्ति चतस्रो दिशो दिक्ष्वेव प्रति तिष्ठन्ति ।

என்பது.

உரை

இங்கு நான்கு ஆறு நாட்களாகின்றன. இவைகளால் நான்கு திசைகளிலும் பெருமையை யடைகின்றார்கள் என்பது

---

இனி, பிருஷ்டிய ஆறுநாள், சந்தோமநான்குநாள் என்னும் பன்னிருநாட்களுள் பத்து இரவுகளை விதிக்கின்றது

பிராமணம் 5

असत्रं वा एतद्यदछन्दोमं यच्छन्दोमा भवन्ति तेन सत्रं देवता एव पृष्ठैरव रुन्धते पशूञ्छन्दोमैरोजो वै वीर्यं पृष्ठानि पशवश्छन्दोमा ओजस्येव वीर्ये पशुषु प्रति तिष्ठन्ति ।

என்பது

உரை

இதற்கு உரை முன்போல் உரைகதுக்கொள்க என்பது.

---

இவ்வேள்வியிலுள்ள நாட்களின் எண் புகழப்படுகின்றது

பிராமணம் 6

**षट्त्रिंशद्रात्रो भवति षट्त्रिंशदक्षरा बृहती बार्हताः पशवो बृहत्यैव पशूनव रुन्धते बृहती छन्दसाꣳ स्वाराज्यमाश्नुताश्नुवते स्वाराज्यं य एवं विद्वाꣳसः षट्त्रिंशद्रात्रमासते सुवर्गमेव लोकं यन्ति ।**

என்பது.

உரை

இதற்கு முப்பத்தாறு இரவுகளாகின்றன. முப்பத்தாறு எழுத்துக்களைக் கொண்டது பிருகதிச் சந்தமாம். பிருகதிலிருந்து பசுக்களுண்டானதால் பசுக்கள் பிருகதிச்சம்பந்த முடையவை (பார்ஹதி)கள் எனப்படுகின்றன. ஆதலின் இதனால் பசுக்களை யடைகின்றார்கள் மற்றும், சந்தங்களுள் பிருகதியானது சுவாராச்சியமுடையது ஆதலின் இதை யநுட்டிக்கின்றவர்கள் இங்கு சுவராச்சியத்தை யடைகின்றார்கள் அங்குஞ் சுவர்க்கத்தை யடைகின்றார்கள் என்பது.

---

உதயனீய நாளை விதிக்கின்றது

பிராமணம் 7

**अतिरात्रावभितो भवतः सुवर्गस्य लोकस्य परिगृहीत्यै ।**

என்பது

உரை

உதயனீய மென்னும் அதிராத்திரம் சுவர்க்கலோகத்தைக் கொள்வதற்குக் காரணமாம் என்பது.

ஆறுமநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### ஏழாவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிக்குமேல் இருபத்திரண்டு பதங்களைக் கொண்டது.*

நாற்பத்தோன்பது இரவுகளைக் கொண்ட யாகத்தைக கூறும் பிராமணங்கள்.

वसिष्ठो हतपुत्रोऽकामयत विन्देय प्रजामभि सौदासान्भवेयमिति स एतमेकस्मान्नपञ्चाशमपश्यत्तमाऽहरत्तेनायजत ततो वै सोऽवि- न्दत प्रजामभि सौदासानभवद्य एवं विद्वाꣳस एकस्मान्नपञ्चाशमा- सते विन्दन्ते प्रजामभि भ्रातृव्यान्भवन्ति त्रयस्त्रिवृतोऽग्निष्टोमा भवन्ति वज्रस्यैवमुखꣳ सꣳश्यन्तिदश पञ्चदशा भवन्ति पञ्चदशो वज्रः ॥ २५ ॥ वज्रमेव भ्रातृव्येभ्यः प्र हरन्ति षोडशि- मद्दशममहर्भवति वज्र एव वीर्यं दधति द्वादश सप्तदशा भवन्त्य- न्नाद्यस्यावरुद्ध्या अथो प्रैव तैर्जायन्ते पृष्ठ्यः षडहो भवति षड् वा ऋतवष्षट्पृष्ठानि पृष्ठैरेवर्तूनन्वारोहन्त्यृतुभिः संवत्सरं ते संव- त्सर एव प्रति तिष्ठन्ति द्वादशैकविꣳशा भवन्ति प्रतिष्ठित्या अथो रुचमेवाऽऽत्मन् ॥ २६ ॥ दधते बहवः षोडशिनो भवन्ति विजि- त्यै षडाश्विनानि भवन्ति षड्वा ऋतव ऋतुष्वेव प्रति तिष्ठन्त्यूनातिरिक्ता वा एता रात्रय ऊनास्तद्यदेकस्यै न पञ्चाशदति रिक्तास्तद्यद्भूयसीरष्टाचत्वारिꣳशत ऊनाच्च खलु वा अतिरिक्ताच्च प्रजापतिः प्राजायत ये प्रजाकामाः पशुकामाः स्युस्त एता आसी- रन्प्रैव जायन्ते प्रजया पशुभिर्वैराजो वा एष यज्ञो यदेकस्मान्न- पञ्चाशो य एवं विद्वाꣳस एकस्मान्नपञ्चाशमासते विराजमेव गच्छ-

நாற்பத்தோன்பது நாள்)

न्त्यन्नादा भवन्त्यतिरात्रावभितो भवतोऽन्नाद्यस्य परिगृहीत्यै ॥२७॥

वज्र आत्मन्प्रजया द्वात्रिंशतिश्च ॥

இதில் நாற்பத்தொன்பது நாட்களைக் கொண்ட யாகம் கூறப்படுகின்றது.

---

அதைவிதிக்கின்றது

பிராமணம் 1

वसिष्ठो हतपुत्रोऽकामयत विन्देय प्रजामभि सौदासान्भवेयमिति स एतमेकस्मान्नपञ्चाशमपश्यत्तमाऽहरत्तेनायजत ततो वै सोऽविन्दत प्रजामभि सौदासानभवद्य एवं विद्वांस एकस्मान्नपञ्चाशमासते विन्दन्ते प्रजामभि भ्रातृव्यान्भवन्ति ।

என்பது.

உரை

விசுவாமித்திரருடைய சாபத்தால் வசிஷ்டருடைய புத்திரர்களிறந்து போனதால், வசிஷ்டர் புத்திரப் பேற்றையும், பகை யொழிதலேயும் விரும்பி நாற்பத்தொன்பது நாள் யாகத்தைக் கண்டுபிடித்து அதன் உபகரணங் தேடிச் செய்து புத்திரப்பேற்றையும், சௌதாஸா என்னுஞ் சத்துருக்களின வெற்றியையும் பெற்றார். அவ்வாறே தெரிந்துகொண்டு நாற்பத்தொன்பது நாட்கள்கொண்ட யாகத்தைக் செய்கின்றவர்களும் புத்திரப்பேற்றையும் பகைவரின் வெற்றியையும் அடைகின்றார்கள் என்பது.

---

இனி, நாட்களை விதிக்கின்றது

பிராமணம் 2

त्रयस्त्रिवृतोऽग्निष्टोमा भवन्ति वज्रस्यैव मुखꣳ सꣳ श्यन्ति ।

என்பது

உரை

இதில் திரிவிருத் ஸ்தோமங்களைக்கொண்ட அக்கினிஷ்டோம மென்னு நாள் மூன்று அநுட்டிக்கத்தக்கன. இதனால், திரிவிருத் வடிவாகிய வச்சிராயுதத்தின் வாய் கூராக்கப்படுகின்றது. இதை பிறசுருயிற் காண்க என்பது.

---

வேறுசில நாளை விதிக்கின்றது

பிராமணம் 3

**दश पञ्चदशा भवन्ति पञ्चदशो वज्रो वज्रमेव भ्रातृव्येभ्यः प्र हरन्ति ।**

என்பது

உரை

பதினைந்து ஸ்தோமங்களையுடைய நாள் பத்தையும் அநுட்டித்தல் வேண்டும். இது, கொல்லும் வச்சிரமெனக் கூறப்பட்டிருத்தலின் வச்சிரமாம். இதனுல் பகைவர்களைக் கொல்கின்றூர்கள் என்பது.



மற்றும், வேறுசில நாட்களை விதிக்கின்றது

பிரமாணம் 4

**षोडशिमद्दशममहर्भवति वज्र एव वीर्यं दधाति ।**

என்பது

உரை

பதினறு துதிகளையுடைய பத்து இரவுகளுள் பத்தாவதாகிய பதில் சொல்லாத ஒருநாளை அநுட்டித்தல் வேண்டும். இதனுல், முற்கூறிய வச்சிரத்தினிடத்தில் வீரியத்தை நிறுவுகின்றூர்கள் என்பது. பதில் சொல்லாதது முன்கூறப்பட்டது.



வேறுசில நாட்களை விதிக்கின்றது

பிராமணம் 5

**द्वादश सप्तदशा भवन्त्यन्नाद्यस्यावरुद्ध्या अथो प्रैव तैर्जायन्ते ।**

என்பது.

உரை

பதினேழு ஸ்தோமங்களையுடைய நாட்கள் பன்னிரண்டையும் அநுட்டித்தல்வேண்டும். இது, வயிற்றின் கூறிலிருந்து உண்டானதால் உணவுப் பொருட்குக் காரணமாம். மற்றும், இது பதினேழு எழுத்தக்களின் வடிவ பிரசாபதியாமாதலின் பிரசைகளின் உற்பத்திக்குங் காரணமாம் என்பது.

நாற்பத்தொன்பது நாள்)

ஆறு நாள் விதிக்கப்படுகின்றது

பிராமணம் 6

पृष्ठ्यः षडहो भवति षड्वा ऋतवः षट्पृष्ठानि पृष्ठैरेवर्तूनन्वा रोहन्त्यृतुभिः संवत्सरं ते संवत्सर एव प्रति तिष्ठन्ति ।

என்பது.

உரை

பிருஷ்டியத் துதிகளைக் கொண்ட ஆறு நாளும் அநுட்டிக்கத் தக்கதாம். இருதுக்களும் ஆறும் ஆகலின் இதனால் இருதுக்கள் வாயிலாக வருடத்தை யடைந்து வருடத்தில் நிலைக்கின்றார்கள் என்பது.

---

மற்றும்சில நாட்களை விதிக்கின்றது

பிராமணம் 7

द्वादशैकविंशा भवन्ति प्रतिष्ठित्या अथो रुचमेवाऽऽत्मन् दधते

என்பது

உரை

இருபத்தொரு ஸ்தோமங்களைக் கொண்ட நாட்கள் பன்னிரண்டையும் அநுட்டித்தல் வேண்டும். இதனால், பெருமையும் ஒளியும் அடையப்படு கின்றன என்பது.

---

மற்றும் சில நாட்களை விதிக்கின்றது.

பிராமணம் 8

बहवः षोडशिनो भवन्ति विजित्यै ।

என்பது

உரை

சோடசி ஸ்துதிகளைக் கொண்ட நாட்கள் எவ்வளவோ, அவ்வளவையும் அநுட்டித்தல் வேண்டும். ஆனால் இங்கு, மூன்றுநாள் வேண்டியிருத்தலின் மூன்றையே அநுட்டித்தல் வேண்டும். இது, வெற்றியின் பொருட்டாம் என்பது.

---

இவ்வேள்வியில் ஆறுநாள் ஆசுவினசஸ்திரம் என்பதை விதிக்கின்றது

பிராமணம் 9

**षडाश्विनानि भवन्ति षड्वा ऋतव ऋतुष्वेव प्रति तिष्ठन्ति ।**

எனபது.

உரை

இதனால் இருதுக்களில் நிலைக்கின்றார்கள் என்பது.

---

நாற்பத்தோன்பதாகிய எண்ணைப் புகழுகின்றது

பிராமணம் 10

**ऊनातिरिक्ता वा एता रात्रय ऊनास्तद्यदेकस्यै न पञ्चाशदतिरिक्तास्तद्यद्भूयसीरष्टाचत्वारिंशत ऊनाच्च खलु वा अतिरिक्ताच्च प्रजापतिः प्राजायत ।**

என்பது.

உரை

இவ்வேள்வியிலுள்ள நாட்கள் குறைவும் வேறுமாகின்றன. என்னை ? ஒன்று குறைந்த ஐம்பதாம். ஆனால் இது நாற்பத்தெட்டினின்றும் வேறானதாம். முன், பிரசாபதி, குறைந்த எண்ணால் உறுதியான உடம்புகளைக் கொண்ட உயிர்களைப் படைத்தனன். வேறாகிய எண் மிகுதியால் வான் முதலானவைகளை மென்மேலும் குறைவிலாதனவாகப் படைத்தனன். ஆதலின், குறைவு, மிகுதி என்னும் நாட்களைக் கொண்ட இவ் வேள்வி பெருமையுடையதாம் என்பது.

முன் விதியிற்கூறிய பயனைமுடிக்கின்றது

பிராமணங்கள் 11

**ये प्रजाकामाः पशुकामाः स्युस्त एता आसीरन्प्रैव जायन्ते प्रजया पशुभिः**

என்பது

உரை

பிரசையையும், பசுக்களையும் விரும்பினவர்கள்; இதனால், பிரசைகளையும் பசுக்களையும் அடைகின்றார்கள் என்பது.

வருடசத்திரயாகம்)

இவ்வேள்வியிலுள்ள நாட்களின் எண்புகழப்படுகின்றது

பிராமணம் 12

**वैराजो वा एष यज्ञो यदेकस्मान्नपञ्चाशो य एवं विद्वाꣳस एकस्मान्नपञ्चाशमासते विराजमेव गच्छन्त्यन्नादा भवन्ति ।**

என்பது.

உரை

இந்த நாற்பத்தொன்பதில், ஐந்து பத்துக்களிருக்கின்றன. அவற்றுள் நான்கு பத்தனுள் பத்து இருத்தலால் விராட் சந்தமாம். ஐந்தாம் பத்தில் ஒன்று குறைந்திருப்பினும் உபசாரமாக விராடாம். ஆதலின், விராட் அன்னமாதலின் இதை யநுட்டிக்கின்றவர்கள் உணவுப் பொருளை யடைகின்றார்கள் என்பது.



பிராயணீய உதயனீயங்களை விதிக்கின்றது

பிராமணம் 13

**अतिरात्रावभितो भवतोऽन्नाद्यस्य परिगृहीत्यै ।**

என்பது

பிராயணீய உதயனீய அதிராத்திரங்களால் உணவுப் பொருள்கள் அடையப்படுகின்றன என்பது.



### ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### எட்டாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பத்து நான்கு பதங்களைக் கொண்டது.

சம்வத்ஸர சத்திரயாகத்தின் தீக்ஷாகாலத்தை விதிக்கும் பிரமாணங்கள்

संवत्सराय दीक्षिष्यमाणा एकाष्टकायां दीक्षेरन्नेषा वै संवत्सरस्य पत्नी यदेकाष्टकैतस्यां वा एष एताꣳ रात्रिं वसति साक्षादेव संवत्सरमारभ्य दीक्षन्त आर्तं वा एते संवत्सरस्याभि दीक्षन्ते य एकाष्टकायां दीक्षन्तेऽन्तनामानावृतू भवतो व्यस्तं वा एते संवत्सर-

स्याभि दीक्षन्ते य एकाष्टकायां दीक्षन्तेऽन्तंनामानावृतू भवतः फल्गुनीपूर्णमासे दीक्षेरन्मुखं वा एतत् ॥ २८ ॥ संवत्सरस्य यत्फल्गुनीपूर्णमासो मुखत एव संवत्सरमारभ्य दीक्षन्ते तस्यैकैव निर्या यत्सांमेध्ये विषूवान्त्संपद्यते चित्रापूर्णमासे दीक्षेरन्मुखं वा एतत्संवत्सरस्य यच्चित्रापूर्णमासो मुखत एव संवत्सरमारभ्य दीक्षन्ते तस्य न का चन निर्या भवति चतुरहे पुरस्तात्पौर्णमास्यै दीक्षेरन्तेषामेकाष्टकायां क्रयः सं पद्यते तेनैकाष्टकां न छम्बट्कुर्वन्ति तेषाम् ॥ २९ ॥ पूर्वपक्षे सुत्या सं पद्यते पूर्वपक्षं मासा अभि सं पद्यन्ते ते पूर्वपक्ष उत्तिष्ठन्ति तानुत्तिष्ठत ओषधयो वनस्पतयोऽनूत्तिष्ठन्ति तान्कल्याणी कीर्तिरनूत्तिष्ठत्यरात्सुरिमे यजमाना इति तदनु सर्वे राध्नुवन्ति ॥ ३० ॥ एतच्छम्बट्कुर्वन्ति तेषां चतुस्त्रिꣳशच्च ॥ ८ ॥

*இதுமுதல் நான்கு அநுவாகங்களில் வருடசத்திரயாகம் கூறப்படுகின்றது. அதிலும், இவ்வநுவாகத்தில் வருடசத்திரயாகத்தின் தீக்ஷைக் காலத்தைவிதிக்கின்றது.*

அக்காலத்தை விதிக்கின்றது

பிராமணம் 1

**संवत्सराय दीक्षिष्यमाणा एकाष्टकायां दीक्षेरन्नेषा वै संवत्सरस्य पत्नी यदेकाष्टकैतस्यां वा एष एताꣳ रात्रिं वसति साक्षादेव संवत्सरमारभ्य दीक्षन्ते ।**

உரை

வருடத்திற் செய்யும் சத்திரயாகத்தின் பொருட்டு தீட்சை பண்ணிக் கொள்ளும் எசமானர்கள் மாசிமாத கிருஷ்ண பக்ஷ அஷ்டமியிற் செய்து கொள்ளல் வேண்டும். ஏனெனின்? இந்நாளின் அபிமானி தேவதையானது வருடாபிமானி தேவதையின் மனைவியாம் ஆதலின் என்க. மற்றும், மாசிமாத கிருஷ்ணபக்ஷ அஷ்டமியின் அபிமானி தேவதையிடத்தில் இந்நாளின் இரவு முழுதும் வருடாபிமானி தேவதை வசிக்கின்றது. ஆதலின், இதில் தீட்சை செய்து கொண்டவர்கள் வருடத் தொடக்கத்திற் செய்துகொண்டவராகின்றார் கள் என்பது. மாசி = மாகம்.

---

இப்பக்ஷத்தைப் பழித்துவிட்டு மற்றொரு பக்ஷத்தை விதிக்கின்றது

பிரமாணம் 2

आर्तं वा एते संवत्सरस्याभि दीक्षन्ते य एकाष्टकायां दीक्षन्तेऽन्तनामाना-
वृतू भवतो व्यस्तं वा एते संवत्सरस्याभि दीक्षन्ते य एकाष्टकायां
दीक्षन्तेऽन्तनामानावृतू भवतः फल्गुनीपूर्णमासे दीक्षेरन्मुखं वा एतत्
संवत्सरस्य यत्फल्गुनीपूर्णमासो मुखत एव संवत्सरमारभ्य दीक्षन्ते ।

என்பது

உரை

மாசிமாதக் கிருஷ்ணபட்ச அஷ்டமியில் தீட்சை பண்ணிக்கொள்கின்ற வர்கள் வருட சத்திரயாகத்தின் நாசத்தைக் குறித்துச் செய்து கொள்கின்றார் கள். ஏனெனின்? தையும் மாசியும், இருதின் அவயவங்கள் எனவும், வருடத் தின் முடிவுகளெனவும் பெயர்களை யுடையவைகள். என்னை? அவ்விரண்டும் குளிர்கால மாதலின் என்க. அந்த இருதுவால் முன்வருடம் முடிவாகிறபடி யால் தைமாதப் பௌர்ணமி தொடங்கி பங்குனியின் பௌர்ணமி வரை முன் காலம் வருடத்தின் முடிவுகாலமாம். மற்றும், மாசிமாத கிருஷ்ணபக்ஷமியின் அஷ்டமியில் தீட்சை செய்து கொண்டவர்கள் வருட சத்திரயாகத்தின் விப ரீதத்தைக் குறித்துச் செய்து கொண்டவர்களாகின்றார்கள். முதலில் தீட்சை செய்து கொள்ளல் வேண்டும் இதுவோ, அந்தமா(முடிவா)ம். மேற்கூறிய படி அந்தம் என்னும் பெயரைக் கொண்டுள்ளமையின் என்க. ஆதலின், பங்குனிமாதப் பௌர்ணமியில் தீட்சை செய்துகொள்ளல் வேண்டும். இந் நாளே மேல் வரும் வருடத்தின் தொடக்கத்தைக் கொண்டதாளாம ஆதலின் வருடத் தொடக்கத்தில் தீட்சை செய்து கொண்டது போலாகின்றது என்பது.

இப்பக்ஷத்தையும் பழித்துவிட்டு மற்றோர் பக்ஷத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

**तस्यैकैव निर्यायत्सांमेघ्ये विषूवान्त्संपद्यते चित्रापूर्णमासे दीक्षेरन्मुखं वा एतत्संवत्सरस्य यच्चित्रापूर्णमासो मुखत एव संवत्सरमारभ्य दीक्षन्ते तस्य न का चन निर्या भवति ।**

என்பது

உரை

பங்குனிமாதப் பௌர்ணமியில் தீட்சை செய்து கொள்ளல் வேண்டும் என்னும் பட்சமும் மிகுந்த மழை காலத்தில் வரும் "விஷுவான்", என்னும் ஒருநாளை யுடையதாகிய ஒரு குற்றமுடையதாம். எவ்வாறெனின்? முன்னாறு மாதம் பின்னாறு மாதம் எனனும்இரண்டிற்கு நடுவில் ஒருநாள் விசேடமே விழுவான் எனப்படும். இங்கு, பங்குனிமாத பௌர்ணமியிலிருந்து பன்னிரண்டு உபசத்துக்களும் அநுட்டிகதுவிட்டு முதல் மாதந் தொடங்கல் வேண்டும். தொடங்கும்போது சித்திரைமாத சுக்கிலபட்சநவமியில் தொடங்கியதாகின்றது. அப்பிகை மாதச் சுக்கில அஷ்டமியில் ஆறுமாதங்களை முடித்துவிட்டு நவமியில் விழுவான் என்னும் நாள கொள்ளப்படும். கொள்ளும்போது அது மழைக் காலததில் வருகின்றது. என்னை? புரட்டாசி மாதப் பௌர்ணமியில் மழைகாலம் முடிந்தபோது பின்வரும் மாதமாயிருத்தலினென்க. ஆதலின், மழைக் காலத்திற் கருகில விழுவததினத்தின் பரிஹாரத்தின் பொருட்டு சித்திரை நட்சத்திரங்கூடிய பௌர்ணமியில் தீட்சை செய்து கொள்ளல் வேண்டும். அதுவும் வசந்தருதுவின் நடுவிலிருக்கின்றதால் வருடத் தொடக்கமேயாகும். இதனால்முகத்திலிருந்தே தொடங்கப்பட்டதாகும். இவ்வாற்றால் கார்த்திகை மாதச் சுக்கில பட்ச நவமியில் விழுவான் வருகிறது. அது மழைக்காலத்திற்குத் தூரமாம். ஆதலின் மழை பெய்யுமென்னும் ஐயப்பாடு மின்மையின் விரிவாய் அநுட்டிக்கல் கூடுமாதலின் இப்பட்சத்தில் ஒரு குற்றமும் இல்லை என்பதாம்.

---

குணவிசேடத்தைக்கண்டு மற்றோர் பக்ஷத்தை விதிக்கின்றது

பிராமணம் 4

**चतुरहे पुरस्तात्पौर्णमास्यै दीक्षेरन्तेषामेकाष्टकायां क्रयस्सं पद्यते तेनैकाष्टकां न छम्बट्कुर्वन्ति ।**

என்பது

உரை

மாசிமாதப் பௌர்ணமிக்கு நான்குநாள் முன்னர் சுக்கிலபட்ச ஏகாதசியில் தீட்சைசெய்து கொள்ளல் வேண்டும், செய்துகொள்ளில் மாசிமாதக் கிருஷ்ணபக்ஷ சப்தமியில் பன்னிரண்டு தீட்சைகளும் முடிந்துவிடுவதால் அதன் பின் வரும் கிருஷ்ணபட்ச அஷ்டமியில் சோமத்தை விலைக்கு வாங்குதல் அமையும்; அமையவே, மாசிமாதக் கிருஷ்ணபக்ஷ அஷ்டமியும் உபயோகப்பட்டதால் வருடதேவதையின் மனைவியாகிய முக்கியத்தன்மையும் வீணாகவில்லை. ஆதலின் வருடத்தின் மனைவியைப் பெருமைப்படுத்தியதும் ஒரு குணமாம் என்பது



மற்றொருகுணத்தை விதிக்கின்றது

பிராமணம் 5

तेषां पूर्वपक्षे सुत्या सं पद्यते पूर्वपक्षं मासा अभि सं पद्यन्ते ते पूर्वपक्ष उत्तिष्ठन्ति तानुत्तिष्ठत ओषधयो वनस्पतयोऽनूत्तिष्ठन्ति तान्कल्याणी कीर्तिरनूत्तिष्ठत्यरात्सुरिमे यजमाना इति तदनु सर्वे राध्नुवन्ति ।

என்பது.

உரை

மாசிமாதக் கிருஷ்ணபக்ஷ அஷ்டமியில் சோமக்கிரயத்தை அநுட்டிக்கில் அநுட்டிக்கின்ற எசமானர்களுக்கு அந்நாள் முதல் அநுட்டிக்கும் உபசத்துக்கள் சித்திரைமாதச் சுக்கிலபட்சச் சதுர்த்தியிலமைகின்றன. அதன் பின் செய்யப்படும் சோமரசம்பிழிதலும் சுக்கிலபட்சதிதிலேயே கொடங்கப்பெற்றதாகும். அதிலிருந்து எல்லாமாதங்களும் சுக்கிலபட்சத்தைக் கொண்டே முடியும். அவ்வாறு முடியும்போது சத்ரயாகங்களைச் செய்தவர்களும் சுக்கிலபட்சத்திலேயே சத்திரங்களிலிருந்து எழுகின்றார்கள். அவர்களைப்பற்றி பூமியின்மேல் கொடிசெடிகளும் நல்ல கருமாநுட்டான வன்மையுடன் எழுகின்றன. அவ்வாறு எழுந்தபோது, இவ்வெசமானர்கள் உடனே நல்ல சம்பத்தை யடைந்தார்கள் என்னும் நல்லவாக்கும் எழுகின்றது. அதைப்பற்றி எல்லா வுயிர்களும் நலமடைகின்றன. ஏனெனின்? இவ்வேள்வி செய்ததால் பூமியில் பயிர்கள் நன்கு வளர்ந்தமையின் என்க. ஆதலின், இத்தகைய நற்குணங்களையுடைய மாசிமாதச் சுக்கிலபட்ச ஏகாதசியில் தீட்சைசெய்து கொள்ளல் வேண்டுமென்பதே முக்கிய பட்சமாம் என்பது.

எட்டாமநுவாகம்

முற்றிற்று.

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## ஒன்பதாவது அநுவாகம்

ஐம்பது பதங்களைக் கொண்டது.

தீட்சையையும் உபசத்யாகத்தையுங் கூறும் பிராமணங்கள்.

सुवर्गं वा एते लोकं यन्ति ये सत्रमुपयन्त्यभीन्धत एव दीक्षाभिरात्मानꣳ श्रपयन्त उपसद्भिर्द्वाभ्यां लोमाव द्यन्ति द्वाभ्यां त्वचंद्वाभ्यामसृद्वाभ्यां माꣳसं द्वाभ्यामस्थि द्वाभ्यां मज्जानमात्मदक्षिणं वै सत्रमात्मानमेव दक्षिणां नीत्वा सुवर्गं लोकं यन्ति शिखामनु प्र वपन्त ऋद्ध्या अथो रघीयाꣳसः सुवर्गं लोकमयामेति ॥ ३१ ॥ सुवर्गं पञ्चाशत् ॥

இதில், தீட்சையும் உபசத்யாகமுங் கூறப்படுகின்றன.

---

அவ்விரண்டையும் விதிக்கின்றது

பிராமணம் 1

सुवर्गं वा एते लोकं यन्ति ये सत्रमुपयन्त्यभीन्धत एव दीक्षाभिरात्मानꣳ श्रपयन्त उपसद्भिः ।

என்பது

உரை

சத்திரயாகத்தை அநுட்டிக்கின்றவர்கள் சுவர்க்கத்தையடைகிறார்கள். ஆதலின், அதற்குத் தகுதியாதற்பொருட்டு தீட்சைகளால் தமது உடம்புகளைத் தகிக்கின்றார்கள். உபசத்யாகங்களால் தமது தேகங்களைச் சமைக்கின்றார்கள். ஆகையால் தீட்சையும் உபசத்தும் செய்யத்தக்கன என்னுமிதையே விதியாய் யூகித்துக்கொள்க. துவாதசநாளின் விகிருதியாதலானும் இவை பெறப்பட்டன. ஆயினும், விகிருதி இலிங்கத்தின் பொருட்டு, அல்லது துதியின்பொருட்டு இது மீண்டுங் கூறப்பட்டது என்பது.

உபசத்தும்)

அவ்விரண்டையும் பிரித்துப்புகழ்ந்து அவ்விரண்டும் பன்னிரண்டு பன்னிரண்டென்பதை வெளிப்படுத்துகின்றது,

பிராமணம் 2

**द्वाभ्यां लोमाव घन्ति द्वाभ्यां त्वचं द्वाभ्यामसृद्द्वाभ्यां माꣳसं द्वाभ्यामस्थि द्वाभ्यां मज्ज्ञानमात्मदक्षिणं वै सत्रमात्मानमेव दक्षिणां नीत्वा सुवर्गं लोकं यन्ति ।**

என்பது

உரை

இரண்டு நாட்களில் அநுட்டிக்கப்படும் தீட்சை உபசத் என்னுமிரண்டாலும் அவியின் பொருட்டு தமது மயிர்களையும், தோலையும், நாடிகளையும், மாமிசங்களையும், எலும்புகளையும், மூளைகளையும் அறுத்தெடுக்கின்றார்கள். இச் சத்திரயாகம் தேகத்தையே தட்சிணையாகவுடைத்து. ஆதலின் தமது தேகங்களையே தட்சிணையாகக் கொடுத்துவிட்டு சுவர்க்கத்தையடைகின்றார்கள் என்பது.

---

தலைமயிரைக்கழித்தல் வேண்டுமென்று விதிக்கின்றது

பிராமணம் 3

**शिखामनु प्र वपन्त ऋद्ध्या अथो रघीयाꣳसः सुवर्गं लोकमयामेति ।**

என்பது

உரை

குடுமியுடன் நன்றாய் மொட்டையடித்தல் வேணடும். இறந்ததோலாகிய மயிரைக் கழித்தல் சம்பத்தின் பொருட்டாகின்றது. மற்றும், தலைமயிரின் கனத்தைக் குறைத்துவிட்டு இலேசாகி சுவர்க்கத்தையடைவோமாக என்னுங் கருத்தால் மொட்டையடித்தல் வேண்டும் எனபது.

ஒன்பதாமநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பத்தாவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் நாற்பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

பிராயணீயம் என்னும் முதல்நாளைக் கூறும் பிராமணங்கள்

ब्रह्मवादिनो वदन्त्यतिरात्रः परमो यज्ञक्रतूनां कस्मात्तं प्रथम-
मुप यन्तीत्येतद्वा अग्निष्टोमं प्रथममुप यन्त्यथोक्थ्यमथ षोडशिन-
मथातिरात्रमनुपूर्वमेवैतद्यज्ञक्रतूनुपेत्य तानालभ्य परिगृह्य सोममेवै-
तत्पिबन्त आसते ज्योतिष्टोमं प्रथममुप यन्ति ज्योतिष्टोमो वै
स्तोमानां मुखं मुखत एवस्तोमान्प्र युञ्जते तैं ॥ ३२ ॥ सꣳस्तुता
विराजमभि सं पद्यन्ते द्वे चर्चावति रिच्येते एकया गौरतिरिक्त
एकयाऽऽयुरूनः सुवर्गो वै लोको ज्योतिरूग्विराट्त्सुवर्गमेव तेन
लोकं यन्ति रथंतरं दिवा भवति रथंतरं नक्तमित्याहुर्ब्रह्मवादिनः
केन तदजामीति सौभरं तृतीयसवने ब्रह्मसामं बृहत्तन्मध्यतो
दधति विधृत्यै तेनाजामि ॥ ३३ ॥ त एकान्न पञ्चाशच्च ॥

இதில், பிராயணீயமென்னும் முதலநாள் கூறப்படுகின்றது.

---

அதைவிதிக்கின்றது

பிராமணம் 1

ब्रह्मवादिनो वदन्त्यतिरात्रः परमो यज्ञक्रतूनां कस्मात्तं प्रथममुप यन्तीत्ये-
तद्वा अग्निष्टोमं प्रथममुप यन्त्यथोक्थ्यमथ षोडशिनमथातिरात्रमनुपूर्व-
मेवैतद्यज्ञक्रतूनुपेत्य तानालभ्य परिगृह्य सोममेवैतत्पिबन्त आसते
ज्योतिष्टोमं प्रथममुप यन्ति ज्योतिष्टोमो वै स्तोमानां मुखं मुखत एव
स्तोमान्प्र युञ्जते ।

என்பது.

உரை.

இவ் வதிராத்திர மென்னும் யாகம் சோமயாகமாகிய யாகங்களுள் ஈற்றிலுள்ளதாம். அக்கினிட்டோமம் உக்த்யம், சோடசி அதிராத்திர மென்னும் இதன் முறையாமாதலின் அக்கினிஷ்டோமம் முதலாவதாம். இது, ப்ரஜனனம், என்னும் அநுவாகத்திற் கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறுருமிடத்து, முதலாவதாகிய அக்கினிஷ்டோமத்தை விட்டுவிட்டு கடையாகிய அதிராத்திரம் எவ்வாறு சத்திரத்தில் முதலில் அநுட்டிக்கப்படுகின்றது? என்று பிரமவாதிகள், வினவுகின்றார்கள், அதற்குரிய அறிஞர்கள் இதில் அக்கினிட்டோமம் விடுபடவில்லை என்கின்றனர். என்னை? இதில், அக்கினிட்டோமம், உக்த்யம், சோடசி, அதிராத்திரம் என்பவைகளுள் பின் பின் வருகின்றதற்கு முன் முன் உள்ளது கருப்பமாயிருத்தலினென்க, அதுவருமாறு :— பன்னிரண்டு துதிகளாகிய அக்கினிட்டோமத்தைஉள்ளடக்கிக் கொண்டே மீண்டும மூன்று துதிகள் மிகுதியாகும்போது உக்த்யமாகின்றது. அங்ஙனமே, அதையு முள்ளடக்கிக்கொணடு ஒரு துதி அதிகமாகும்போது சோடசியாகின்றது, அதையு முள்ளடக்கிக்கொண்டு மீண்டும் பதின்மூன்று துதிகள் மிகுதியாகும்போது அதிராத்திரமாகின்றது என்பது. இவ்வாற்றால் சத்திரயாகத்தை அநுட்டிக்கின்றவர் சோமாநுட்டானத்தின் முதலில் அக்கினிட்டோமத்தை அநுட்டிக்கின்றார்கள். பிறகு உக்த்யம், பிறகு சோடசி, பிறகு அதிராத்திரம் என்னுமிம்முறையைக் கொண்ட யாகங்களைச் செய்வதற்கு உறுதி பண்ணிக்கொண்டு முழு யக்ஞங்களையும் ஏற்று எங்கும் சோமரஸத்தை அருந்தினவர்களாக இருக்கின்றார்கள். ஆதலின், முதலில் சோதிட்டோமத்தை அநுட்டித்தல் வேண்டும். அது, சோதி, கௌ, ஆயுள் என்பவைகட்கு முகமாகின்றது. ஆதலின், முகத்திலிருந்து தொடங்கியே சத்திரயாகஞ் செய்கின்றவர்களாய் ஸ்தோமங்களையும் கிருதுக்களையும் பிரயோகஞ் செய்கின்றார்கள் என்பது.

———

மற்றும், கோஷ்டோமம் ஆயுட்டோமம் என்னுமிரண்டிற்கும் முதலாவது சோதிட்டோமமாம் என்பதை மற்றோராற்றாற் புகழ்கின்றது.

பிராமணம் 2

**तेसꣳस्तुता विराजमभि सं पद्यन्ते द्वे चर्चावति रिच्येते एकया गौरतिरिक्त एकयाऽऽयुरूनस्सुवर्गो वै लोको ज्योतिरूर्ग्विराट्सुवर्गमेव तेन लोकं यन्ति ।**

என்பது

உரை

சோதிட்டோமத்தின் துதியிலுள்ள இருக்கு விசேடங்கள் துதிக்கப் பெற்ற விராட்டாகிய பக்தேயாகின்றன. குறைவும் மிகுதியுமாவதில்லை. கோட்டோம ஆயுட்டோமங்களிரண்டுகளிலும் அவ்வாறில்லை. மற்றோ, அவற்றுள், கோஷ்டோமத்தில் ஒன்று மிகுதியாம். ஆயுட்டோமத்தில் ஒன்று குறைவாம். இவ்வாற்றால் விராட் வடிவத்தன்மை சோதிட்டோமப் புகழுக்குக் காரணமாம். விளக்குந் தன்மையினும் சோதிட்டோமம் சுவர்க்கவடிவ விராட்டாம். இவ்வாறு இருவகையானும் பெருமைவுடைய சோதிடடோமத் தால் சுவர்க்கத்தை யடைகின்றார்கள் என்பது.

---

இனி, சோதிட்டோமமாகிய அதிராத்திரப்பிரிவிற்கு சாமவிசேடத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

रथंतरं दिवा भवति रथंतरं नक्तमित्याहुर्ब्रह्मवादिनः केन तदजामीति सौभरं तृतीयसवने ब्रह्मसाम बृहत्तन्मध्यतो दधति विधृत्यै तेनाजामि ।

என்பது.

உரை

பகலில் செய்யப்படும் பிருஷ்டத்துதியில் ரதந்தர மென்பது பாடப்படு கின்றது. இரவுமுறைகளிலும் ரதந்தரம் பாடப்படுகின்றது. அப்போது சோம்பலுண்டாகின்றது. அச்சோம்பல் எந்தச் சாமப்பாடலால் நீங்குமென்று? பிரமவாதிகள் வினவுகின்றனர், அறிஞர்கள், சௌமரம் என்னும் வேறொரு சாமப்பாடல் இருக்கின்றது அதை, மூன்றாஞ் சவனத்தில் பிரமசாமமாகப் பாடில் ஆலசியம் நீங்கும் என்று விடை கூறுகின்றனர். அப்பாடல், பிருகத் ப்ரௌடம்என்பதாம். இது, பிருகத் ரதந்தரங்களிரண்டிற்கும் நடுவில் நிறுவப்படுகின்றது. இது, எகஞும் நிலைத்தற் பொருட்டாகின்றது என்பது.

பத்தாமநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பதினோராவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்குமேல் எட்டுப்பதங்களை கொண்டது.

மாதத்தில் உள்ள நாட்களைக் கூறும் பிராமணங்கள்.

ज्योतिष्टोमं प्रथममुप यन्त्यस्मिन्नेव तेन लोके प्रति तिष्ठन्ति गोष्टोमं द्वितीयमुप यन्त्यन्तरिक्ष एव तेन प्रति तिष्ठन्त्यायुष्टोमं तृतीयमुप यन्त्यमुष्मिन्नेव तेन लोके प्रति तिष्ठन्तीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायुर्यदेतान्त्स्तोमानुपयन्त्येष्वेव तल्लोकेषु सत्रिणः प्रतितिष्ठन्तो यन्ति ते सꣳस्तुता विराजम्' ॥ ३४ ॥ अभि सं पद्यन्ते द्वे चर्चावति रिच्येते एकया गौरतिरिक्त एकयाऽऽयुरूनः सुवर्गो वै लोको ज्योतिरूर्ग्विराडूर्जमेवाव रुन्धते ते न क्षुधाऽऽर्तिमार्छन्त्यक्षोधुका भवन्ति क्षुत्संबाधा इव हि सत्रिणोऽग्निष्टोमावभितः प्रधी तावुक्थ्या मध्ये नभ्यं तत्तदेतत्परियद्देवचक्रं यदेतेन ॥ ३५ ॥ षडहेन यन्ति देवचक्रमेव समारोहन्त्यरिष्ट्यै ते स्वस्ति समश्नुवते षडहेन यन्ति षड्वा ऋतव ऋतुष्वेव प्रति तिष्ठन्त्युभयतोज्योतिषा यन्त्युभयत एव सुवर्गे लोके प्रतितिष्ठन्तो यन्ति द्वौ षडहौ भवतस्तानि द्वादशाहानि सं पद्यन्ते द्वादशो वै पुरुषो द्वे सक्थ्यौ द्वौबाहू आत्मा च शिरश्च चत्वार्यङ्गानि स्तनौद्वादशौ ॥ ३६ ॥ तत्पुरुषमनु पर्यावर्तन्ते त्रयः षडहाभवन्ति तान्यष्टादशाहानि सं पद्यन्ते नवान्यानि नवान्यानि नव वै पुरुषे प्राणास्तत्प्राणाननु पर्यावर्तन्ते चत्वारः षडहा भवन्ति तानि

चतुर्विंशतिरहानि सं पद्यन्ते चतुर्विंशतिरर्धमासाः संवत्सरस्त-
त्संवत्सरमनु पर्यावर्तन्तेऽप्रतिष्ठितः संवत्सर इति खलु वा आहुर्वर्षीं-
यान्प्रतिष्ठाया इत्येतावद्वै संवत्सरस्य ब्राह्मणं यावन्मासो मासि-
मास्येव प्रतितिष्ठन्तो यन्ति ॥ ३७ ॥ विराजमेतेन द्वादशावेतावद्वा
अष्टौ च ॥

இதில், மாதங்களிலுள்ள நாட்கள் கூறப்படுகின்றன.

---

முதலில், அவற்றுள் மூன்றுநாட்களை விதிக்கின்றது

பிராமணம் I

ज्योतिष्टोमं प्रथममुप यन्त्यस्मिन्नेव तेन लोके प्रति तिष्ठन्ति गोष्टोमं द्विती-
यमुप यन्त्यन्तरिक्ष एव तेन प्रति तिष्ठन्त्यायुष्टोमं तृतीयमुप यन्त्य-
मुष्मिन्नेव तेन लोके प्रति तिष्ठन्तीयं वाव ज्योतिरन्तरिक्षं गौरसावायु-
र्यदेतानुपयन्त्येष्वेव तल्लोकेषु सत्त्रिणः प्रतितिष्ठन्तो यन्ति ।

என்பது

உரை

சோதி, கோள, ஆயுள் என்பது நாள் விசேடங்கள். இவற்றை நேராகவும் மாறாகவும் கொள்ளில் ஆறுநாளாகின்றன. அவ்விரண்டனுள் முதலாவதாகிய நேர்முறையை இங்கு அநுட்டித்தல் வேண்டும். அதாவது, சோதிட்டோமம் முதலாம் நாளாம் இதனால் இவ்வுலகில் பெருமையை யடைகின்றார்கள். கோஷ்டோமம் இரண்டாநாளாம் இதனால் அந்தரிக்க லோகத்தை யடைகின்றார்கள். ஆயுட்டோமம் மூன்றுநாளாம் இதனால் சுவர்க்கலோகத்தை யடைகின்றார்கள். இம்மூன்றும் மூவுலக வடிவங்களாதலின், சத்திரயாகஞ் செய்கின்றவர்கள் மூவுலகிலும் நலம்பட வாழ்கின்றவர்களாவார்கள். முன், பிராயணீயமென்னும் அதிராத்திரமாகிய சோதிட்டோமம் விதிக்கப்பட்டது. இப்போதோ, மூன்றுநாள் அநுட்டிக்கத்தக்கது இங்கு அக்கினிட்டோமமாகிய சோதிட்டோமங் கூறப்படுகின்றது மாத்திரம் விசேடம் என்பது.

---

மாதநாட்கள்)

இவ்வக்கினிட்டோமத்திற்கு, முற்கூறிய அதிராத்திரம்போல் சோதிட்டோமம் முதலாவதாம் என்று கூறுகின்றது

பிராமணம் 2

ते सꣳस्तुता विराजमभि सं पद्यन्ते द्वे चर्चावति रिच्येते एकया गौर-तिरिक्त एकयाऽऽयुरूनः सुवर्गो वै लोको ज्योतिरूर्ग्विराडूर्जमेवाव रुन्धते ते न क्षुधाऽऽर्तिमार्छन्त्यक्षोधुका भवन्ति क्षुत्संबाधा इव हि सत्रिणः ।

என்பது

உரை

சோதிட்டோமம் துதியின் எண்ணால் விராட்டாம். விராட் இரசவடிவாமாதலின் சத்திரயாகஞ்செய்தவர்கள் பசியுடையவர்களாகார்கள். மற்றிரண்டும் இருக்கின் குறைவுகள் மிகுதிகளால் விராட்ஆகா. இரசம் உணவுப்பொருளாதலின் அதனால் பசிநிவர்த்தியாம். அதாவது, எப்போதும் பசியில்லாதவர்களாகவே இருக்கின்றார்கள் என்பதாம். சத்திரயாகஞ் செய்கின்றவர்களோ, அநுட்டான மிகுதியால் மிகக்களைப்புண்டாதலின் பசிநோயடைந்தவர்களைப் போலிருக்கின்றனர் ஆதலின், பசிநீக்குதற் பொருட்டு விராட்டாகிய இரச சம்பத்தை யடைதற்பொருட்டு சோதிட்டோமம் முதலில் அநுட்டித்தல் வேண்டுமென்பது.

---

இப்போது, கூறியசோதிமுதலான மூன்றையும் நேராகவும் மாறாகவும் அநுட்டிக்கில் உண்டாகும் அபிப்லவமென்னும் ஆறுநாளையும் தேரின்சக்கரகற்பனையாக விதிக்கின்றது.

பிராமணம் 3

अग्निष्टोमावभितः प्रधी तावुक्थ्या मध्ये नभ्यं तत्तदेतत्परियद्देवचक्रं यदेतेन षडहेन यन्ति देवचक्रमेव समारोहन्त्यरिष्ट्यै ते स्वस्ति समश्नुवते ।

என்பது

உரை.

உலகில் இரதத்தின் சக்கரம் மூன்று பலகைகளால் இணைக்கப்படுகின்றது. அவற்றுள், பக்கத்திலுள்ள இரண்டு பலகைகளும் பிரதீ எனப்படுகின்றன. அதாவது நடுப்பலகையைப் பிடித்துக் கொண்டிருப்பவைகள் என்பதாம். நடுப்பலகை நப்யம் எனப்படுகின்றது. அதாவது நாபிபோன்றதாம் என்பது. இங்கு, முதலிலும் இடையிலும் அநுட்டிக்கும் அக்கினிஷ்

டோமங்கள் பிரதியாம் அதாவது பக்கப் பலகைகள் போன்றன. கௌ ஆயுள் ஆயுள் கௌ, உக்த்யமாகிய நான்கு கிருதுக்களுஞ் சேர்ந்து நடுப்பலகை போன்றதாம். இது, அபிப்லவ ஆறுநாள் மீண்டு மீண்டுஞ் சுற்றும் ஆதலின் தேவசக்கரம் எனப்படுகின்றது. இதைச் செய்யும் எசமானர் தேவச்சக்கரத் தின்மீது ஏறுகின்றார்கள் அது துன்பிலாமைக்குக் காரணமாம். அதுவும், நலமடைதற் பொருட்டாகின்றது என்பது.

---

மீண்டும், அவ்வாறுநாளையே விதிக்கின்றது

பிராமணம் 4

**षडहेन यन्ति षड्वा ऋतव ऋतुष्वेव प्रति तिष्ठन्ति ।**

என்பது

உரை

ஆறுநாட்களாலும் ஆறு இருதுக்களிலும் நிலைத்திருக்கின்றார்கள் என்பது.

---

அவ் வாறுநாளின், நேர்முறை மாறுமுறைகளில் மூன்றுநாளை விதிக்கின்றது

பிராமணம் 5

**अभयतोज्योतिषा यन्त्युभयत एव सुवर्गे लोके प्रतितिष्ठन्तो यन्ति ।**

என்பது

உரை

சோதி, கௌ, ஆயுள் என்பதை மாறிக்கொள்ளில், ஆயுள், கௌ, சோதி எனவருதலின் இருபக்கத்திலும் சோதிகளையுடைய ஆறுநாளை யநுட்டிக் கின்றதால் சோதியால் சுவர்க்கத்தையடைந்து அவமதிப்பின்றி பெருமையுட னிருக்கின்றார்கள் என்பது.

---

அவ் வாறுநாளையும் இரட்டைப்படுத்துவதை விதிக்கின்றது.

பிராமணம் 6

**द्वौ षडहौ भवतस्तानि द्वादशाहानि सं पद्यन्ते द्वादशो वै पुरुषो द्वे सक्थ्यौ द्वौ बाहू आत्मा च शिरश्च चत्वार्यङ्गानिस्तनौ द्वादशौ तत्पुरुषमनुपर्यावर्तन्ते ।**

என்பது.

உரை

அவ்வாறு நாட்களையும் இரட்டைப்படுத்தின் பன்னிரண்டு நாட்களாகின்றன. ஒருமனிதனுக்கும், கால்கள், கைகள், உடல், தலை, முள்ளெலும்பு இரண்டு, தோட்கள், முலைகள் எனப் பன்னிரண்டு அவயவங்களிருக்கின்றனவாதலின் மனிதனைத் தழுவி ஆவிருத்தியாகின்றது என்பது.

---

இனி, மூன்றுவதாவிருத்தியை விதிக்கின்றது

பிராமணம் 7

**त्रयः षडहा भवन्ति तान्यष्टादशाहानि सं पद्यन्ते नवान्यानि नवान्यानि नव वै पुरुषे प्राणास्तत्प्राणाननु पर्यावर्तन्ते ।**

என்பது

உரை

ஆறுநாட்களை மூவகையாய்ப் பெருக்கின் பதினெட்டு நாட்கள் ஆகின்றன. அவற்றை இரண்டு பங்காக்கின் ஒன்பதாகின்றன. மனிதனுடைய தலையில் ஒன்பது துளைகளுள் ஒன்பது பிராணன் இருக்கின்றன. இதைத் தழுவியே ஆவிருத்தியாகின்றன என்பது.

---

ஆசங்கைவிடைகளால் எல்லாமாதங்களின் அநுட்டானத்தையும் விதிக்கின்றது

பிராமணம் 8

**चत्वारः षडहा भवन्ति तानि चतुर्विंशतिरहानि सं पद्यन्ते चतुर्विंशतिरर्धमासाः संवत्सरस्तत्संवत्सरमनु पर्यावर्तन्ते ।**

என்பது.

உரை

நான்கு ஆறுநாளாகின்றன. அவை இருபத்துநான்கு நாட்கள். பாதி பாதி மாதங்களாகக் கொள்ளில் மாதங்களும் இருபத்துநான்கு ஆகின்றன. ஆதலின், வருடத்தைத் தழுவி ஆவிருத்தியாகின்றன. இங்கு, மாதம் நிறைவதன் பொருட்டு பிருஷ்டிய ஆறுநாளையுஞ் சேர்த்துக் கொள்ளல் வேண்டுமென்பதை உணர்க என்பது.

---

நான்காவது ஆவிருத்தியை விதிக்கின்றது

பிராமணம் 9

अप्रतिष्ठितः संवत्सर इति खलु वा आहुर्वर्षीयान्प्रतिष्ठाया इत्येतावद्वै संवत्सरस्य ब्राह्मणं यावन्मासो मासिमास्येव प्रतितिष्ठन्तो यन्ति ।

என்பது.

உரை

மேற்கூறிய வகையால் மாதங்களில் நிலைக்கப்படுமேயன்றி வருடத்தி லன்று. வருடத்திற்கு அதிகமாதம் வேண்டியதால் என்று வினவுகின்றனர். அதற்கு, மாதத்தைக் கூறும் பிராமண வாக்கின்படி வருடமும் கூறப்பட்டதே யாகும் அதன் பொருட்டு புதிது ஒன்றுமில்லை. இவ்வாறு ஒவ்வொரு மாத மும் அநுட்டிக்கின்ற எசமானர்கள் அந்த அந்தமாதத்தில் பிரதிட்டை யுடையவர்களாய் முடிவில் வருடத்தில் நிலைக்கின்றார்கள் என்பது.

பதினோராவது அநுவாகம்

முற்றிற்று.

---

ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

பன்னிரண்டாவது அநுவாகம்

முப்பத்தாறு பதங்களைக் கொண்டது.

அபாவ்யம் முதலிய மந்திரங்கள்,

मेषस्त्वा पचतैरवतु लोहितग्रीवश्छागैः शल्मलिर्वृद्ध्या पर्णो ब्रह्मणा प्लक्षो मेधेन न्यग्रोधश्चमसैरुदुम्बर ऊर्जा गायत्री छन्दोभि स्त्रिवृत्स्तोमैरवन्तीः स्थावन्तीस्त्वाऽवन्तु प्रियं त्वा प्रियाणां वर्षिष्ठ- माप्यानां निधीनां त्वा [illegible] पतिꣳ हवामहे वसो मम ॥ ३८ ॥

मेषः षट्त्रिꣳशत् ॥

இனி, இதுமுதல் எஞ்சின அநுவாகங்களில் அசுவமேத மந்திரங்கள் கூறப்படுகின்றன. அவற்றுள், இப்பதினோாமநுவாகத்தில், அபாவ்யங்கள் (பாதுகாப்புக்கள்) என்னும் ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன.

அ[ச]ரவிய முதலாயின)

மந்திரங்கள் 1–9

मेषस्त्वा पचतैरवतु लोहितग्रीवश्छागैः शल्मलिर्वृद्ध्या पर्णो ब्रह्मणा प्लक्षो
मेधेन न्यग्रोधश्चमसैरुदुम्बर ऊर्जा गायत्री छन्दोभिस्त्रिवृत्स्तोमैः ।

என்பது

உரை

குதிரையே! உன்னை, ஆடுகளுக்குட் சிறந்த கடாவானது, சிறிய அவி விசேடங்களுடன் கூட பாதுகாக்க. அவ்வாறே, பள்ளாட்டுக்கடாவும் பள்ளாட்டுக்களுடன்கூட பாதுகாக்க. சல்மலி என்னும் மிகவுயர்ந்த மரமும் தனது வளர்ச்சியுடன் கூட பாதுகாக்க. புரசை மரமும் தன் அபிமானி மந்திரத்துடன், அல்லது, பிரமனுடன்கூட பாதுகாக்க. கல் ஆலன் அத்தி மரம் எக்ஞத்துடன்கூட பாதுகாக்க. ஆலமரம் தன்னாற் செய்யப்படும் சமசங்களுடன் பாதுகாக்க. அத்திமரம் தனது பழத்துடன் பாதுகாக்க. அவ்வாறே காயத்திரிச் சந்தமும் ஏனைய சந்தங்களுடன்கூட பாதுகாக்க. அவ்வாறே திரிவிருத்ஸ்தோமமும் ஏனைய ஸ்தோமங்களுடன் கூட பாதுகாக்க. இம்மந்திரங்கள் ஒன்பதாலும் கொள்ளியால் குதிரையைச் சுற்றும்போது ஒன்பது ஹோமங்கள் செய்தல் வேண்டுமென்பதாம்.

———

அரசனுடைய மனைவிகள், இறந்துபோன குதிரைக்குச்செய்யும் உபசாரமந்திரம்

மந்திரம் 10

अवन्तीः स्थावन्तीस्त्वाऽवन्तु प्रियं त्वा प्रियाणां वर्षिष्ठमाप्यानां निधी-
नां त्वा निधिपतिꣳ हवामहे वसो मम ।

என்பது

உரை

அரசனுடைய மனைவிகளே! நீவிர் குதிரையைப்பாதுகாக்கிறவர்களாக இருக்கின்றீர்கள். குதிரையே! உன்னை, பாதுகாப்பாளராகிய பத்தினிகள் பாதுகாப்பார்களாக. என்னை வாழ்விக்கும் குதிரையே! விருப்பமுடைய உன்னை அழைக்கின்றோம். வேண்டியவற்றை அளிப்பவைகளுள் மிகுந்த பெருமையையுடையோய்! உன்னை அழைக்கின்றோம். நிதிகளுக்குள் மிகுந்த நிதியுடையோய் உன்னை அழைக்கின்றோம் என்பது.

பன்னிரண்டாமநுவாகம்

முற்றிற்று

———

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பதின்மூன்ருவது அநுவாகம்

*நாற்பது பதங்களைக்கொண்டது.*

தண்ணீர் ஹோமமந்திரங்கள்

**कूप्याभ्यः स्वाहा कूल्याभ्यः स्वाहा विकर्याभ्यः स्वाहाऽवट्याभ्यः स्वाहा खन्याभ्यः स्वाहा ह्रद्याभ्यः स्वाहा सूद्याभ्यः स्वाहा सरस्याभ्यः स्वाहा वैशन्तीभ्यः स्वाहा पल्वल्याभ्यः स्वाहा वर्ष्याभ्यः स्वाहाऽवर्ष्याभ्यः स्वाहा ह्रादुनीभ्यः स्वाहा पृष्वाभ्यः स्वाहा स्यन्दमानाभ्यः स्वाहा स्थावराभ्यः स्वाहा नादेयीभ्यः स्वाहा सैन्धवीभ्यः स्वाहा समुद्रियाभ्यः स्वाहा सर्वाभ्यः स्वाहा ३९ ॥**

**कूप्याभ्यश्चत्वारिंशत् ॥ १३ ॥**

*இதில், தண்ணீரின் ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன.*

ஈண்டு, தண்ணீர் ஹோமங்களைக்கூறும் இரண்டு அநுவாகங்களுள் முதலநுவாக மந்திரங்கள்.

மந்திரம் 1-20

कूप्याभ्यः स्वाहा कूल्याभ्यः स्वाहा विकर्याभ्यः स्वाहाऽवट्याभ्यः स्वाहा खन्याभ्यः स्वाहा ह्रद्याभ्यः स्वाहा सूद्याभ्यः स्वाहा सरस्याभ्यः स्वाहा वैशन्तीभ्यः स्वाहा पल्वल्याभ्यः स्वाहा वर्ष्याभ्यः स्वाहाऽवर्ष्याभ्यः स्वाहा ह्रादुनीभ्यः स्वाहा पृष्वाभ्यः स्वाहा स्थावराभ्यः स्वाहा नादेयीभ्यः स्वाहा सैन्धवीभ्यः स्वाहा समुद्रियाभ्यः स्वाहा सर्वाभ्यः स्वाहा ।

*என்பது*

உரை

*கிணற்றிலூறும் நீருக்கும், நதிக்கரையிலூறும் நீருக்கும், பூமிவெடுப்பிலூறும் நீருக்கும், பள்ளத்திலூறும் நீருக்கும், கெல்லுவதிலூறும் நீருக்கும், மடுவிலூறும் நீருக்கும், சேற்றிலூறும் நீருக்கும், ஏரியிலூறும் நீருக்கும், குட்டையிலூறும் நீருக்கும், கால்வாயிலூறும் நீருக்கும், மழை நீருக்கும், பூமியிலுள்ள நீருக்கும், இரைந்தோடும் நீருக்கும், அவசியமாய்த் தோன்று*

எஞ்சிய தண்ணீர் ஹோமம்)

நீருக்கும், ஒழுகும் நீருக்கும், இடைநிருக்கும், ஆற்று நீருக்கும், பெரிய நதி நீருக்கும், கடல் நீருக்கும், மற்றும் எல்லா நீர்கட்கும் இது அர்ப்பணமாகுக என்பது.

பன்னிரண்டாமநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பதினான்காவது அநுவாகம்

*இருபத்தொன்பது பதங்களைக் கொண்டது.*

மீந்த தண்ணீர் ஹோம மந்திரம்

अद्भ्यः स्वाहा वहन्तीभ्यः स्वाहा परिवहन्तीभ्यःस्वाहा समन्तं वहन्तीभ्यः स्वाहा शीघ्रं वहन्तीभ्यः स्वाहा शीभं वहन्तीभ्यः स्वाहोग्रं वहन्तीभ्यः स्वाहा भीमं वहन्तीभ्यः स्वाहाऽम्भोभ्यः स्वाहा नभोभ्यः स्वाहा महोभ्यः स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ४० ॥

अद्भ्य एकान्न त्रिꣳशत् । ॥ १४ ॥

இதில், மீந்ததண்ணீரின் ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன

மந்திரம் 1 - 12

अद्भ्यः स्वाहा वहन्तीभ्यः स्वाहा परिवहन्तीभ्यः स्वाहा समन्तं वहन्तीभ्यः स्वाहा शीघ्रं वहन्तीभ्यः स्वाहा शीभं वहन्तीभ्यः स्वाहोग्रं वहन्तीभ्यः स्वाहा भीमं वहन्तीभ्यः स्वाहाऽम्भोभ्यः स्वाहा नभोभ्यः स्वाहा महोभ्यः स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது.

உரை

*தண்ணீருக்கும், ஓடுநீருக்கும், சுழலுந் தண்ணீருக்கும், எங்கும் வழியு நீருக்கும், பள்ளத்திலிறங்கு நீருக்கும், சிறிது பள்ளத்தில் அழகாய் இறங்கு நீருக்கும். மலையின் உச்சியிலிருந்து இறங்கு நீருக்கும், காணப்படும் மகர மீன் முதலான பயங்கர உயிர்களுடன்கூடிய நீருக்கும், மற்றும் மூன்றுல நீர்களுக்கும் இது அர்ப்பணமாகுக என்பது.*

முன் அநுவாக மந்திரங்களிருபது. இதிலுள்ளவை பன்னிரண்டு ஆக முப்பத்திரண்டு மந்திரங்களாலும் இரவில் அன்னஹோமங்கள் செய்தல் வேண்டும். அம் மந்திரங்களுடன் கூடியவைகட்கே அபாம் ஹோமங்கள் எனப்பெயர் என்பதையுணர்க.

பதினான்காமநுவாகம்
முற்றிற்று.



## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பதினைந்தாவது அநுவாகம்

ஒருபஞ்சாதிக்குமேல் இரண்டு பதங்களைக் கொண்டது.

நாயடித்தல் முதலிய மந்திரங்கள்

यो अर्वन्तं जिघाꣳसति तमभ्यमीति वरुणः । परो मर्तः परः श्वा । अहं च त्वं च वृत्रहन्त्सं बभूव सनिभ्य आ । अरातीवा चिदद्रिवोऽनु नौ शूर मꣳसतै भद्रा इन्द्रस्य रातयः । अभि क्रत्वेन्द्र भूरध ज्मन्न ते विव्यङ्महिमानꣳ रजाꣳसि । स्वेना हि वृत्रꣳ शवसा जघन्थ न शत्रुरन्तं विविदद्युधा ते ॥ ४१ ॥ विविदद्द्वे च ॥१५॥

இதில் நாயை அடித்துக் கொல்லும்வகை கூறப்படுகின்றது.

தாசி புத்திரன் நாயைக் கொல்லுதல் கூறப்படுகின்றது.

மந்திரம் 1

य अर्वन्तं जिघाꣳसति तमभ्यमीति वरुणः ।

என்பது.

உரை

நீரிலிறங்கி நீராடுகின்ற எமது குதிரையைக் கொல்வதற்கு விரும்பி நீரிலிறங்கும் நாயை நீருக்கிறைவனாகிய வருணன் எல்லாவகையானும் பிணியுறும்படி செய்வானாக என்பது.

இம் மந்திரத்தால் நாயை அடித்துக் கொல்லல் வேண்டுமென்பதாம்.



நாயை அடித்தல் முதலாயின)

அடித்தநாயை, குதிரையின் காலின்கீழ்ப் போடுதல்

மந்திரம் 2

परो मर्तः परः श्वा ।

என்பது

உரை

குதிரைக்கு பகைவனாகிய மனிதனும், பகையிற் பெரிதாகிய இந்த நாயும் தூரத்திற்போய் இறக்குக. இவ்விரண்டாலும் நாயைக் கொல்லுதலுமுண்டு என்பது.

---

பிரமன் என்னும் இருத்துவிக்கு எசமானனுடைய கையைப்பிடித்துக் கொள்ளல்.

மந்திரம் 3

अहं च त्वं च वृत्रहन्त्सं बभूव सनिभ्य आ । अरातीवा चिदद्रिवोऽनु नौ शूर मꣳसतै भद्रा इन्द्रस्य रातयः ।

என்பது

உரை

பகைவரைக் கொல்லுதலில் இந்திரனுக்கொப்பாகிய எசமானா! நீயும், பிரமனாகிய யானும், பல்வகைத் தனலாபத்தின் பொருட்டு இனிது கூடுவோமாக. மலைபோன்ற வச்சிராயுதத்தையுடைய இந்திரனைப் போன்றோய்! நாமிருவரும், அவித்தானம் இல்லாதவர்களாவோம். அங்ஙனமாயினும், நமக்கு இந்திரனுடைய மங்களமான பயனின் தானங்கள் ஏற்றுக்கொள்ளப்படுவதாகுக என்பது

---

அத்வரியு எசமானனுக்குப் படிப்பிக்கவேண்டிய மந்திரம்

மந்திரம் 4

अभि क्रत्वेन्द्र भूरध ज्मन्न ते विव्यङ्महिमानꣳ रजाꣳसि । स्वेना हि वृत्रꣳ शवसा जघन्थ न शत्रुरन्तं विविदद्युधा ते ।

என்பது.

உரை

மிகுந்த ஐசுவரியமுடைய எசமான! நீ, இவ்வேள்வியால் பகைவரை யடக்கினவனாக இருக்கின்றாய் உன்னுடைய அதிசய மகிமை இப்பூமியில் ஒருவராலும் அறியமுடியாததாயிருக்கின்றது நீ, தனது வலியால் விருத்திரனைக் கொன்றிருக்கின்றாய். அவன், போரிடுவதில் உன்னைக் கொல்ல முடியாதவனாயினன் என்பது.

பதினைந்தாமநுவாகம்

முற்றிற்று.

---

ஏழாங்காண்டம் நான்காம் பிரபாடகம்

பதினாறுவது அநுவாகம்

இருபத்தொன்பது பதங்களைக் கொண்டது.

யவ்யஹோம மந்திரங்கள்

नमो राज्ञे नमो वरुणाय नमोऽश्वाय नमः प्रजापतये नमोऽधिपतयेऽधिपतिरस्यधिपतिं मा कुर्वधिपतिरहं प्रजानां भूयासं मां धेहि मयि धेह्युपाकृताय स्वाहाऽऽलब्धाय स्वाहा हुताय स्वाहा ॥ ४२ ॥ नम एकान्नत्रिꣳशत् ॥ १६ ॥

இதில், யவ்யம் என்னும் ஹோமமந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

மந்திரம் 1-9

नमो राज्ञे नमो वरुणाय नमोऽश्वाय नमः प्रजापतये नमोऽधिपतयेऽधि-
पतिरस्यधिपतिं मा कुर्वधिपतिरहं प्रजानां भूयासं मां धेहिमयि धेह्यु-
पाकृताय स्वाहाऽऽलब्धाय स्वाहा हुताय स्वाहा ।

என்பது

உரை

சோமராசன் பொருட்டும், வருணன், குதிரை பிரசாபதி, தர்மதேவதை என்பவைகளின் பொருட்டும வணக்கம். தர்மதேவதையே! நீ, எம்மையும் அதிபதியாக்குவாயாக. உனது கிருபையால் யான் பிரசைகட்கு அதிபதியாகின் றேன். பிரசைகட்கு அதிபதியாகிய ஸ்தானத்தில் அமர்த்துவாயாக. அப் பிரசைகளை எம்மிடத்து பாதுகாக்குந் தன்மையால் வைப்பாயாக. கொல்வதற் கும் கொல்லப்படுவதற்கும் அவியாய் ஹோமஞ் செய்வதற்கும் இது அர்ப்பணமாகுக என்பது.

பதினாறாமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

### பதினேழாவது அநுவாகம்

ஒருபஞ்சாதிக்குமேல் முப்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

கவ்யம் என்னும் மந்திரங்கள்

मयोभूर्वातो अभि वातूस्रा ऊर्जस्वतीरोषधीरारिशन्ताम् । पीवस्वतीर्जीवधन्याः पिबन्त्ववसायपद्वते रुद्र मृड । याः सरूपा विरूपा एकरूपा यासामग्निरिष्टया नामानि वेद । या अङ्गिरसस्तपसेह चक्रुस्ताभ्यः पर्जन्य महि शर्म यच्छ । या देवेषु तनुवमैरयन्त यासा२ं सोमो विश्वा रूपाणि वेद । ता अस्मभ्यं पयसा पिन्वमानाः प्रजावतीरिन्द्र ॥ ४३ ॥ गोष्ठे रीरिहि । प्रजापतिर्मह्यमेता रराणो विश्वैर्देवैः पितृभिः संविदानः । शिवाः सतीरुप नो गोष्ठमाऽकस्तासां वयं प्रजयास२ं सदेम । इह धृतिः स्वाहेह विधृतिः स्वाहेहरन्तिः स्वाहेह रमतिः स्वाहा महीमू षु सुत्रामाणम् ॥ ४४ ॥ इन्द्राष्टात्रि२ंशच्च ॥ १७ ॥

இதில், கவ்யம் என்னும் ஹோமங்கள் கூறப்படுகின்றன. கோக்களைப் பற்றியது கவ்யம்.

முதலாவது மந்திரம்

**मयोभूर्वातो अभि वातूस्रा ऊर्जस्वतीरोषधीरारिशन्ताम्। पीवस्वती-जीवधन्याः पिबन्त्ववसाय पद्वते रुद्र मृड।**

என்பது

உரை

சுகத்தையுண்டாக்கும் காற்று கோக்களைக்குறித்து நேர்முகமாய் அசைக, அதாவது புயல்காற்றால் பீடை கொடுக்காததாகுக என்பது. நலந்தருங் காற்றால் நலமளிக்க என்பது பொருள். இக்கோக்கள், இரசமுடைய கொடி செடிகளையருந்துக. எல்லாவுயிர்களும் விரும்புவதும், குடித்தலால் வன்மையுடன் பெருக்கின்றதுமாகிய நீரை கோக்களருந்துக. உருத்திர! நீ பாதுகாத்தருள்வதற்குரிய நாற்காற் பிராணிகளான பசுக்கட்கு சுகத்தைக் கொடுப்பாயாக என்பது.

---

இரண்டாவது மந்திரம்

**याः सरूपा विरूपा एकरूपा यासामग्निरिष्ट्या नामानि वेद। या अङ्गिर-सस्तपसेह चक्रुस्ताभ्यः पर्जन्य महि शर्म यच्छ।**

என்பது.

உரை

ஒத்த அளவுள்ள உடம்புகளையுடையதும், வேறுபட்ட நிறங்களையுடையதும், ஒரே சாதியோடு கூடியவைகளும், ஆகவனீய முதலிய இஷ்டி நிமித்தமாக, விசுவாயு, விசுவய்வசா, விசுவகர்மா, இடா, அதிதா என்பவை முதலான நாமங்களையுடையதுமான கோக்களை நீ அறிவாயாக. அங்கிரசமகரிஷிகள் தமது தலைவியால் பூமிக்குக் கொண்டுவந்தவைகளான கோக்கட்கு மழைத் தேவதையே! நீ சுகங்கொடுப்பாயாக என்பது.

---

மூன்றாவது மந்திரம்

**या देवेषु तनुवमैरयन्त यासा२ँ सोमो विश्वा रूपाणि वेद। ता अस्मभ्यं पयसा पिन्वमानाः प्रजावतीरिन्द्र गोष्ठे रीरिहि।**

என்பது.

கவ்ய ஹோமம்)

உரை

தேவர்களின் பொருட்டு தமது உடம்புகளைப் பூமியிற் செலுத்தியவைக ளும், கறுப்பு சிவப்பு முதலான எல்லாநிறங்களும், குறைந்த பால் மிகுதியா கிய பால் என்பது முதலானவைகளைச் சோமதேவனுலறியப் பெற்றவைகளும், தமது பால்களால் எல்லாவுயிர்களையும் பிரியப்படுத்துகின்றவைகளும், மிகுந்த கன்றுகளையுடையவைகளுமாகிய கோக்களை, இந்திர ! நீ எமது கோசாலையை யடையும்படி செய்வாயாக என்பது.

---

நான்காவது மந்திரம்

**प्रजापतिर्मह्यमेता रराणो विश्वैर्देवैः पितृभिः संविदानः। शिवाः सतीरुप नो गोष्ठमाऽकस्तासां वयं प्रजया सꣳ सदेम।**

என்பது

உரை.

பிரசாபதி, எசமானனுகிய எனக்கு மேற்கூறிய இலங்கணங்களுடன் கூடின கோக்களைக் கொடுப்பானுக. எல்லாத் தேவர்களுடனும், பிதிர்க்க ளுடனும ஒன்றுபட்டு, மிகுந்த பால்கொடுத்தல் முதலானவைகளால் மங்கள வடிவமுடைய இக்கோக்கள் எமது கோசாலையை யடைக. யாம் அவைகளின் கன்றுகளுடன் சேர்ந்திருப்போமாக என்பது.

---

ஐந்து ஆறு ஏழு எட்டாவது மந்திரங்கள்

**इह धृतिः स्वाहेह विधृतिः स्वाहेह रन्तिः स्वाहेहरमतिः स्वाहा।**

என்பது

உரை

இது குதிரைகளின் கால்களைப்பற்றியதாம். இதற்கு உரை, "விபூர் மாத்ரா" என்னும் அநுவாகத்திற் கூறப்பட்டுள்ளது என்பது.

---

இரண்டு இருக்குக்களின் தலைப்புச் சொற்கள் கூறப்படுகின்றன.

ஒன்பதாவது பத்தாவது மந்திரங்கள்

**महीमू षु सुत्रामाणम् ।**

என்பது.

உரை

*இவ்விரண்டிற்கும், "வைசுவானரோ ந ஊத்யா" என்னுமிடத்து உரை கூறப்பட்டிருக்கின்றது. இப் பத்து மந்திரங்களாலும் கவ்ய ஹோமங்களைச் செய்தல் வேண்டும் என்பது.*

பதினேழாம் அநுவாகம்

முற்றிற்று.

---

ஏழாங்காண்டம் நான்காம் பிரபாடகம்

## பதினெட்டாவது அநுவாகம்

பிரமோத்திய மந்திரங்கள்

*ஒரு பஞ்சாதிக்குமேல் நாற்பத்தாறு பதங்களைக்கொண்டது.*

किꣳ स्विदासीत्पूर्वचित्तिः किꣳस्विदासीद्बृहद्वयः । किꣳ स्विदासीत्पिशङ्गिला किꣳस्विदासीत्पिलिप्पिला । द्यौरासीत्पूर्वचित्तिरश्व आसीद्बृहद्वयः । रात्रिरासीत्पिशङ्गिलाऽविं रासीत्पिलिप्पिला । कः स्विदेकाकी चरति क उंस्विज्जायते पुनः। किꣳस्विद्धिमस्य भेषजं किꣳ स्विदावपनंमहत् । सूर्य एकाकी चरति ॥४५॥ चन्द्रमा जायते पुनः। अग्निर्हिमस्य भेषजं भूमिरावपनं महत्। पृच्छामि त्वा परमन्तं पृथिव्याः पृच्छामि त्वा भुवनस्य नाभिम् । पृच्छामि त्वा वृष्णो अश्वस्य रेतः पृच्छामि वाचः परमं व्योम । वेदिमाहुः परमन्तं पृथिव्या यज्ञमाहुर्भुवनस्य नाभिम् । सोममाहुर्वृष्णो अश्वस्य रेतो

பிரமன் கூறும் மந்திரம்)

ब्रह्मैव वाचः परमं व्योम ॥ ४६ ॥ सूर्य एकाकी चरति षट्चत्वारिंशच्च ॥ १८ ॥

இதில், பிரமனும் ஹோதாவும், அக்கினிஷ்டம் என்னும் நடுயூபத்தின் இருபுறத்துமிருந்து கொண்டு செய்யும் வினவிடைகள் கூறப்படுகின்றன.

வினு, இநக்துக் கூறப்படுகின்றது

மந்திரம் 1

किं स्विदासीत्पूर्वचित्तिः किं स्विदासीद्बृहद्वयः । किं स्विदासीत्पिशंगिला किं स्विदासीत्पिलिप्पिला ।

என்பது.

உரை

பிரமனே! பூர்வஞானமுடையது எது? மனதைக்கவரும் அழகுடையது எது? கலப்பு நிறம் எது? மிகுந்தவண்மை ஒளியுடையது எது? என்பது. இவை ஹோதாவின் வினக்கள்.

---

விடை, மந்திரம்

மந்திரம் 2

द्यौरासीत्पूर्वचित्तिरश्व आसीद्बृहद्वयः । रात्रिरासीत्पिशङ्गिलाऽविरासीत्पिलिप्पिला ।

என்பது.

உரை

தேவர்கள் முற்பிறப்பிலுள்ள ஞானமுடையவர்களாதலின் சுவர்க்கம் பூர்வ ஞானமுடையதாம். மிகுந்த அழகுடையது குதிரையாம். இருளும் நட்சத்திரவொளியுங் கலந்திருத்தலின் இரவே கலப்பு நிறமுடையதாம். சம்பத்தே மிகுந்த ஒளியுடையதாம் என்பது. இவை பிரமனுடைய விடைகள்.

---

வினு, மந்திரம்

மந்திரம் 3

कः स्विदेकाकी चरति क उ स्विज्जायते पुनः । किं स्विद्धिमस्य भेषजं किं स्विदावपनं महत् ।

என்பது

உரை

உதவியில்லாமல் தனியாய் சோம்பலின்றி எப்போதும் நடந்துகொண்டிருப்பது எது? மீண்டும் மீண்டும் உதிப்பது எது? குளிருக்கு மருந்து எது? பல்வேறுவகை விதைகளை விதைப்பதற்குரியதும் விசாலமுடையதும் எது? என்பது. இவைஹோதாவின் வினாக்கள்.



விடை மந்திரம்

மந்திரம் 4

सूर्य एकाकी चरति चन्द्रमा जायते पुनः । अग्निर्हिमस्य भेषजं भूमिरावपनं महत् ।

என்பது

உரை

சூரியனே ஒருவனாகச் சென்று கொண்டேயிருக்கின்றவன். சந்திரனே மீண்டும் மீண்டும் உதிப்பவன். குளிருக்குமருந்து தீயாம். எல்லா விதைகளையும் ஊன்றுவதற்கு இடம் பூமியாம் என்பது. இவை பிரமனுடைய விடைகள்.

---

வினா, மந்திரம்

மந்திரம் 5

पृच्छामि त्वा परमन्तं पृथिव्याः पृच्छामि त्वा भुवनस्य नाभिम् । पृच्छामि त्वा वृष्णो अश्वस्य रेतः पृच्छामि वाचः परमं व्योम ।

என்பது

உரை

பிரமனே! உன்னை, பூமியில் மிகுந்த சிறப்புடைய இடம் எது! எனக் கேட்கின்றேன். புவனத்தின் நாபி எது? எனக் கேட்கின்றேன். ஆண் தன்மை மிகுந்த குதிரையின் வீரிய முடையது எது? எனக் கேட்கின்றேன். எழுத்தாகிய வாக்கின் பாதுகாப்புடையது எது? என்று கேட்கின்றேன் என்பது. இவை ஹோதாவின் வினாக்கள்.

---

விடை, மந்திரம்

மந்திரம் 6

**वेदिमाहुः परमन्तं पृथिव्या यज्ञमाहुर्भुवनस्य नाभिम्। सोममाहुर्वृष्णो अश्वस्य रेतो ब्रह्मैव वाचः परमं व्योम।**

*என்பது*

உரை

*யாகத்திற் செய்யும் வேதிகையே பூமியில் சிறந்ததோர் இடமாம் என்கின்றார்கள் யாகஞ் செய்வோர்கள். இதை, சோமப் பிரகரணத்திற் காண்க. எல்லாவுலகங்களின் நடக்கைகள் எக்ஞத்தைப் பற்றியவைகளாமாதலின் எக்ஞம் புவனங்களின் நாபியாம. குதிரையின் சாரமுடையது சோமமாம். எழுத்துக்களின் பாதுகாப்பிடம் அசுவமேத யாகத்திற்குரிய மந்திரத் தொகுதியாம் என்பது. இவை பிரமனுடைய விடைகள்.*

பதினெட்டாமநுவாகம்

முற்றிற்று.

---

ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## பத்தொன்பதாவது அநுவாகம்

*நான்கு பஞ்சாதிக்குமேல் நான்கு பதங்களைக் கொண்டது.*

பத்தினிகளின் மந்திரங்கள்

अम्बे अम्बाल्यम्बिके न मा नयति कश्चन। ससस्त्यश्वकः। सुभगे काम्पीलवासिनि सुवर्गे लोके सं प्रोर्ण्वाथाम्। आऽहमजानि गर्भधमा त्वमजासि गर्भधम्। तौ सह चतुरः पदः सं प्रसारयावहै। वृषा वां रेतोधा रेतो दधातूत्सक्थ्योर्गृदं धेह्यञ्जिमुदञ्जिमन्वज। यस्स्त्रीणां जीवभोजनो य आसाम्॥ ४७॥ बिलधावनः। प्रियः स्त्रीणामपीच्यः। य आसां कृष्णे लक्ष्मणि सर्दिगृदिं परावधीत्। अम्बे अम्बाल्यम्बिके न मा यभति कश्चन। ससस्त्यश्वकः। ऊर्ध्वा

मेनामुच्छ्रयताद्वेणुभारं गिराविव । अथास्या मध्यमेधताꣳ शीते वाते पुनन्निव । अम्बे अम्बाल्यम्बिके न मा यभति कश्चन । ससस्त्यश्वकः । यद्धरिणी यवमत्ति न ॥ ४८ ॥ पुष्टं पशु मन्यते । शूद्रा यदर्य जारा न पोषाय धनायति । अम्बे अम्बाल्यम्बिके न मा यभति कश्चन । ससस्त्यश्वकः । इयं यका शकुन्तिकाऽऽहलमिति सर्पति । आहतं गभे पसो नि जल्गुलीति धाणिका । अम्बे अम्बाल्यम्बिके नमा यभति कश्चन । ससस्त्यश्वकः । माता च ते पिता च तेऽग्रं वृक्षस्य रोहतः ॥४९॥ प्र सुलामीति ते पिता गभे मुष्टिमतꣳसयत् । दधिक्राव्णो अकारिषं जिष्णोरश्वस्य वाजिनः । सुरभि नो मुखा करत्प्रण आयूꣳषि तारिषत् । आपो हि ष्ठा मयोभुवस्ता न ऊर्जे दधातन । महे रणाय चक्षसे । यो वः शिवत-मो रसस्तस्य भाजयतेह नः । उशतीरिव मातरः । तस्मा अरं गमाम वो यस्य क्षयाय जिन्वथ । आपो जनयथा च नः ॥ ५० ॥ आसामत्ति न रोहतो जिन्वथ चत्वारि च ॥ १९ ॥

இதில், அரசனுடைய மனைவிகளின் லீலையாகிற, இறந்த குதிரையின் உபசாரங் கூறப்படுகின்றது.

பிரதிப்பிரஸ்தாதா என்பவன், அரசனுடைய மனைவிகளை யழைத்துக் கொண்டுவருதல்

மந்திரம் 1

अम्बे अम्बाल्यम्बिके न मा नयति कश्चन । ससस्त्यश्वकः ।

என்பது

உரை

உத்தமி, மத்யமி, அதமி என்னும் மூவகையான அரசன் மனைவிகளை, அன்னையென்னும் பொருள்தருஞ் சொற்களால் அழைக்கின்றான். அதா

வது, அம்பே! அம்பாலி! அம்பிகே! என பிரதிப்பிரஸ்தாதா கூப்பிடுகின்றான் என்பதாம். அதற்கு, அம்மூவர்களுள் சிறந்த பட்டத்து ராணி, போகத்தின பொருட்டு ஒருவனும் என்னை இரகசியமாகிய இடத்திற்கு அழைத்திலன். குதிரையும் தூங்குகின்றது அதாவது அருவருப்புடையது என்று கூறுகின்றாள் என்பது.

---

குதிரையையும் இராணியையும் பட்டாடையால் மூடுதல்

மந்திரம் 2

**सुभगे काम्पीलवासिनि सुवर्गे लोके सं प्रोर्ण्वाथाम्। आऽहमजानि गर्भ-धमा त्वमजासि गर्भधम्।**

என்பது

உரை

அழகிய அல்குலையுடையோய்! சிறந்த சேலையைத் தரித்தோய்! நீயும் குதிரையும் சுவர்க்கம் போன்ற இந்த இடத்தில் பட்டு ஆடையால் மூடிக் கொள்வீர்களாக. மூடிக்கொண்டு, கர்ப்பந்தரும் குதிரையே! கருப்பந் தங்கும் இராணீயாகிய நான் உனக்கு நேர் முகமாய் வந்திருக்கின்றேன் நீயும் எனக்கு நேர்முகமாய் இருந்துகொள்வாயாக என்று கூறுவாயாக என்பது.

---

இராணியும் குதிரையும் கால்களை விரித்துக்கொள்ளுதல்

மந்திரம் 3

**तौ सह चतुरः पदः सं प्र सारयावहै।**

என்பது

உரை

குதிரையே! நீயும் நானும், என்கால்களிரண்டும் உனது பின்னங் கால்களின் மேலும், மற்றும் இவ்வாறே நான்கு கால்களும் ஒன்றன்மே லொன்று பொருந்தும்படி விரித்துக் கொள்வோம் என்பது.

---

போற்றுதல்

மந்திரம் 4

**वृषा वां᳚ रेतोधा रेतो दधातु।**

என்பது

நம்மிருவருக்குள்ளும், வீரியத்தைத் தாங்கும் இராணி சுக்கிலத்தை ஏற்றுக் கொள்வாளாக என்பது.

---

குதிரையின் ஆண்குறியை, ராணியின் பெண்குறியில் வைத்தல்

மந்திரம் 5

**उत्सक्थ्योर्गृदं धेह्यञ्जिमुदञ्जिमन्वज । यस्स्त्रीणां जीवभोजनो य आसां बिलधावनः । प्रियस्स्त्रीणामपीच्यः । य आसां कृष्णे लक्ष्मणि सर्दिगृदिं परावधीत् ।**

என்பது.

உரை

குதிரையே! உனது அடித்தொடைகளை, ராணியின் அடித்தொடைகளின் மீது வைப்பாயாக. அங்ஙனமே, எல்லாவற்றிலும் உயர்ந்ததாகிய ராணியின் யோனியில், பெண்களின் சீவனுக்கு இன்பாநுபவத்தைக் கொடுப்பதும், பெண்களின் யோனிக்குழியில் போவதும், உள் நுழைதலால் மிகப்பிரியத்தை யளிப்பதுமாகிய உனது ஆண்குறியை உள்ளேவிடுவாயாக. உள்ளேவிட்டு, கறுப்பாகிய நடுவில் மலர்போன்றதை ஆண்குறி நுனியால் அடிப்பாயாக என்பது.

ஈண்டு, பெண்களின் யோனி, உபஸ்தம், யோனி மத்யமம் என மூவகைபடும். இவை, வெளி, நடு, உள் என்பன. இவற்றுள் மத்தியமத்தில், ஆண்குறியைவிட்டு இழுத்தடிக்கில் சுக்கிலங்கலிதமாய் கருப்பந்தரிக்கும் என்பது.

---

இராணி, குதிரையைப் பழித்தல்

மந்திரம் 6

**अम्बे अम्बाल्यम्बिके न मा यभति कश्चन । ससस्त्यश्वकः ।**

என்பது

உரை

இராணி, புணர்ச்சியின்பம் இலாமையால் வாட்டமுற்றுப் புலம்புகின்றாள். அத்துன்பத்தை, அம்பே! அம்பாலி, அம்பிகே! எனத் தனது அன்னையைக் கூப்பிட்டு, என்னை ஒருவரும் புணரவில்லை குதிரையோ, தூங்குகின்றது என்று அன்னையார்க்குத் தெரிவிக்கின்றாள் என்பது.

வெளியிலிருந்த அரசனுடைய மனைவிகளிருவரும் களிப்புண்டாக்கல்

மந்திரம் 7

**ऊर्ध्वामेनामुच्छ्रापताद्गिरौ भारं हरन्निव । अथास्या मध्यमेधताꣳ शीते वाते पुनन्निव ।**

என்பது

உரை

இராணியே! உனது யோனியை, மலையில் வெட்டிவந்த விறகுக்கட்டையை பூமியில் நிமிர்த்துவைப்பதுபோல் மேலே நோக்காய்த் தூக்கிவைத்துக் கொள்வாயாக. மற்றும், பிறகு, யோனியின் நடுவில் தனக்கு வேண்டியதையடைந்து தால் களிப்படைவாயாக. எதைப்போலெனின்! நெல்லின் கணைகள் படிந்து உடம்பு அயர்ந்தவள் குளிர்காற்றுப்பட்டவுடன் களிப்படைவதுபோலென்க என்பதாம்.

---

அரசனுடைய மனைவிகள் மூவரும் மேல்வரும் இருக்குக்களால் குதிரையைப் பழிக்கின்றார்கள். பிறகு மூவருங் களிப்புண்டாக்குகின்றார்கள்.

மந்திரம் 8

**अम्बे अम्बाल्यम्बिके न मा यभति कश्चन । ससस्त्यश्वकः ।**

என்பது

உரை

இதற்கு, முன்போல் உரை கூறிக்கொள்க என்பது.

---

களிப்புண்டாக்கும் முதல் மந்திரம்

மந்திரம் 9

**यद्धरिणी यवमत्ति न पुष्टं पशु मन्यते । शूद्रा यदर्यजारा न पोषाय धनायति ।**

என்பது.

உரை

மகிஷி(ராணி)யே! பெண்மான் இரவில் பயிர்களை அருந்திவிட்டு மீண்டும் அரண்யத்தை யடைந்தபோது வன்மைமிக்கதாய் ஆகியும் பயிரிட்டவன் அதை அறியாததுபோல், தேவதையாக வந்து உன்னைப் புணர்ந்து மறைந்த குதிரையை நீயும் உணரவில்லை, உனக்குப் போகம் உண்டாயிற்று மற்றும்,

ஒரு அடியாள், தனது கள்ளப்புருடனைக் கலந்து களிப்புறுகின்றாளே அவள் அவனிடத்தில் பணத்தைவிரும்பிலள் என்னை? கள்ளப்புருடனுடன் கலந்ததே தனமென்று கொண்டதாலென்க. அதுபோல் மனிதவுடம்பையுடைய நீயும், தேவதையாகிற குதிரையைப்புணர்ந்த மாத்திரத்தால் களிப்படைவாயாக. அற்பமாகிய மனிதபோகத்தை வெறுப்பாயாக என்பது.

---

இரண்டாவது பழிப்பு இருக்கு மந்திரம்

மந்திரம் 10

**अम्बे अम्बाल्यम्बिके न मा यभति कश्चन । ससस्त्यश्वकः ।**

என்பது

உரை

இதற்கும் முன்போல் உரை கூறிக்கொள்க என்பது.

---

களிப்புண்டாக்கும் இரண்டாவது மந்திரம்

மந்திரம் 11

**इयं यका शकुन्तिकाऽऽहलमिति सर्पति । आहतं गभे पसो नि जल्गुलीति धाणिका ।**

என்பது.

உரை

காணப்படும் இப்பெண் பறவை ஆஹல என்று கத்திக்கொண்டு ஆண் பறவைக்குப் பின்றொடர்ந்து போய்க்கொண்டேயிருக்கிறதேயொழிய போது மென நின்றதில்லை. அவ்வாறே, இராணியே! நீயும் திருப்தியடைந்திலாய். இது உசிதமன்றென்பது கருத்து. மற்றும், கருப்பத்தைத் தாங்கும் பெண், புணர்ச்சியால் யோனியிலிருந்து வரும் சோணிதத்தை உள்ளே வைத்துக் கொண்டு களிப்புறுகின்றாள். நீயும் அவ்வாறே களிப்புறுவாயாக என்பது கருத்து.

---

மூன்றாவது பழிப்பு மந்திரம்

மந்திரம் 12

**अम्बे अम्बाल्यम्बिके न मा यभति कश्चन । ससस्त्यश्वकः ।**

என்பது

உரை

இதற்கும் முன்போல் உரை கூறிக்கொள்க என்பது.

களிப்புண்டாக்கும் மூன்றவது மந்திரம்

மந்திரம் 13

**माता च ते पिता च तेऽग्रं वृक्षस्य रोहतः । प्र सुलामीति ते पिता गभे मुष्टिमतंसयत् ।**

என்பது

உரை

இராணியே! உனது தந்தையும் தாயும் கொம்புகளாற் செய்த மாடிப் படுக்கையிலேறிப் படுத்திருக்கும்போது உனது தந்தை, உள்ளே நுழைகின் றேன் என்று, யோனியில் ஆண்குறியை உள்ளே விடுகின்றானன்றோ, அது போல் இக்குதிரையுஞ் செய்தது. நீ எழுந்திருப்பாயாக என்பது கருத்து என்பது

---

செபிக்க வேண்டிய சுரபி நறுமண) மந்திரம்

மந்திரம் 14

**दधिक्राव्णो अकारिषं जिष्णोरश्वस्य वाजिनः । सुरभि नो मुखा करत्प्रण आयूंषि तारिषत् ।**

என்பது.

உரை

ததிக்ராவா என்னும் தயிரில் பிரியமுடைய தேவதையின் கருமத்தை யான் செய்து கொண்டிருக்கின்றேன். அத் தேவதை எத்தன்மையதெனின்? குதிரையின் உணவுப்பொருளையுடையதாம் என்க. அத் தேவதை, எமது முகங்களை, கற்பூர முதலியவைகளைப் பூசுவதால் நறுமணமுண்டாம்படி செய்க. மற்றும், எமது ஆயுளையும் வளர்க்குக என்பது.

---

தண்ணீர் தெளித்துக்கொள்ளுள் மந்திரங்களுள் முதலாவது மந்திரம்

மந்திரம் 15

**आपो हि ष्ठा मयोभुवस्ता न ऊर्जे दधातन । महे रणाय चक्षसे ।**

என்பது

உரை

தண்ணீரே! நீ சுகத்தை யுண்டாக்குவதா யிருக்கின்றாய். அத்தகைய நீ உனது இரசத்தையநுவிப்பதன் பொருட்டு எம்மை நிறுவுவாயாக. மற்றும், எம்மை, நல்ல காட்சியின் பொருட்டும் நிறுத்துவாயாக. அதாவது பரம் பொருளை உள்ளவாறு காணும்படி செய்தருள்வாயாக என்பது.



இரண்டாவது மந்திரம்

மந்திரம் 16

यो वश्शिवतमो रसस्तस्य भाजयतेह नः । उशतीरिव मातरः ।

என்பது

உரை

தண்ணீராகிய தேவியே! நீ, மிக மங்களமாகிய உன்னுடைய இனிய இரசத்தை, அன்புமிக்க தாய்மார்கள் தமது முலைப்பால இரசத்தை குழந்தைகட்கு அருத்துவதுபோல் இக்கருமத்தில் யாம் அடையுமாறு செய்வாயாக என்பது.

---

மூன்றுமந்திரம்

மந்திரம் 17

तस्मा अरं गमाम वो यस्य क्षयाय जिन्वथ । आपो जनयथा च नः ।

என்பது

உரை

எந்த இரசமிருத்தலால் நீ பிரியமாகின்றாயோ, அந்த இரசத்தின் பொருட்டு உன்னை எப்போதும் யாம் அடைவோமாக. மற்றும், தண்ணீராகிய தேவியே! நீ, எமக்குப் புத்திரப்பேற்றை யுண்டாக்குவாயாக என்பது. தமிழைப்பற்றி ஒருமை.

பத்தோன்பதாமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இருபதாவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் இருபத்தைந்து பதங்களைக் கொண்டது.

குதிரையின் அலங்கார மந்திரங்கள்

भूर्भुवः सुवर्वसवस्त्वाऽञ्जन्तु गायत्रेण छन्दसारुद्रास्त्वाऽञ्जन्तु त्रैष्टुभेन छन्दसाऽऽदित्यास्त्वाऽञ्जन्तु जागतेन छन्दसा यद्वातो अपो अगमदिन्द्रस्य तनुवं प्रियाम्। एतᳲ स्तोतरेतेन पथा पुनरश्वमा वर्तयासि नः। लाजी३ञ्छाची३न्यशो ममा३म्। यव्यायै गव्याया एतद्देवा अन्नमत्तैतदन्नमद्धि प्रजापते। युञ्जन्ति ब्रध्नम रुषं चरन्तं परि तस्थुषः। रोचन्ते रोचना दिवि। युञ्जन्त्यस्य काम्या हरी विपक्षसारथे। शोणा धृष्णू नृवाहसा। केतुं कृण्वन्न-केतवे पेशो मर्या अपेशसे। समुषद्भिरजायथाः॥ ५१ ॥

ब्रध्नं पञ्चविंशतिश्च ॥ २० ॥

இதில், கொல்லப்படுமுன் குதிரைக்குச் செய்யவேண்டிய உபசாரங்கள் கூறப்படுகின்றன.

---

அரசனுடைய மனைவிகள் மூவரும் குதிரையை அலங்கரித்தல்

மந்திரங்கள் 1 - 3

भूर्भुवः सुवः।

என்பது.

உரை

பூ:, புவ:, சுவ: என்னும் மந்திரங்களால் பத்தினிகள் மூவரும் முறையே குதிரையின் மயிர்களில், பொன் மணிகள், வெள்ளி மணிகள், சங்கு மணிகள் என்பவைகளைக் கட்டித்தொங்கவிடல் வேண்டும் என்பது.

---

மூவரும் குதிரைக்கு எண்ணெயிடல்

மந்திரங்கள் 4 – 6

वसवस्त्वाऽऽञ्जन्तु गायत्रेण छन्दसा रुद्रास्त्वाऽऽञ्जन्तु त्रैष्टुभेन छन्दसाऽऽदित्यास्त्वाऽऽञ्जन्तु जागतेन छन्दसा ।

என்பது

உரை

குதிரையே! எட்டுவசுக்களும், காயத்திரிச் சந்தத்துடன் கூடவே குல் குலுத்தைலத்தை குதிரையின் முகத்தில் தடவுவார்களாக. அவ்வாறே, பதினொரு உருத்திரர்களும் குசும்பாப்பூத்தைலத்தை திரிஷ்டுப் சந்தத்துடன் நடுவுடம்பில் தடவுவார்களாக. பன்னிரண்டு ஆதித்தர்களும், சகதிச் சந்தத் துடன் முஸ்தாவேரின் தைலத்தை குதிரையின் பின்புறத்தில் தடவுவார்க ளாக என்பது. இம்மந்திரங்கள் மூன்றாலும் மூன்று பத்தினிகளும் குதிரை யின் மூன்றிடங்களிலும் எண்ணெயைத் தடவுவார்களாக என்பது.

---

வலம் வருதல்

மந்திரம் 7

यद्वातो अपो अगमदिन्द्रस्य तनुवं प्रियाम् । एतꣳ स्तोतरेतेन पथा पुनरश्वमा वर्तयासि नः ।

என்பது.

உரை

முன் எம்மார்க்கத்தால் வாயு நீர் இந்திரனுடைய பிரிவுடம்பாகிய மழை யையடைந்ததோ, துதியாளா? நீயும், குதிரையைச் செலுத்துவதற்கு சத்த மிட்டுக்கொண்டு முந்திய அம் மார்க்கத்தால் எம்மைக் குறித்து குதிரையைச் செலுத்துவாயாக என்பது.

---

பத்தினிகள், ஹோமஞ்செய்து மீந்த அன்னங்களை குதிரை முகர்ந்துபார்க்கும்படி செய்தல்.

மந்தியம் 8

लाजी३ञ्छाची३न्यशो ममा३म् । यव्यायै गव्याया एतद्देवा अन्नमत्तैतदन्नमद्धि प्रजापते ।

என்பது.

உரை

இரவில் ஹோமஞ் செய்து மீந்த பொரியும், மற்றும் குதிரையருந்தும் உணவுப் பொருள்களும் இருக்கின்றன. மற்றும், யசசு (பெருமை) எசமானனுக்குத் தேடுகின்றது ஆதலின் அதைக்குறித்து யசசு அதன் பெயராகக் கூறப்பட்டிருக்கின்றது. லாசி, சாசி, எசலே என்னும் மூன்று பெயர்களாலும் மூன்று பத்தினிகளும் குதிரையைக் கூப்பிட்டு, குதிரையின்பால் உள்ள தேவர்களைக்குறித்து, தேவர்காள் ? யாங்கள் அளித்ததை குதிரை வடிவால் அருந்துவீர்ராளாக. பிரசாபதியே ! நீயும், இவ்வன்னத்தை பருந்துவாயாக என்னல் வேண்டும் என்பது.

---

குதிரையை இரதத்திற்பூட்டுதல்

மந்திரம் 9

**युञ्जन्ति ब्रध्नमरुषं चरन्तं परि तस्थुषः। रोचन्ते रोचना दिवि।**

என்பது

உரை

சூரியனாகவும், அக்கினியாகவும், வாயு வடிவாகவுமுள்ள இக்குதிரையையும், அங்ஙனமே நாற்புறமும் பரந்திருக்கும் மூன்றுநிறங்களான இக்குதிரையின் உருவங்களையும் எல்லாத் தேவர்களும் இரதத்தில் பூட்டுகின்றார்கள். விண்ணுலகிலுள்ள நட்சத்திரங்களும் இக்குதிரையை விளக்குகின்றன என்பது.

---

உதவியாக மற்றிரண்டு குதிரைகளையும் பூட்டுதல்

மந்திரம் 10

**युञ्जन्त्यस्य काम्या हरी विपक्षसा रथे। शोणा धृष्णू नृवाहसा।**

என்பது.

உரை

அழகுடையவைகளும், இரதத்தின் பக்கங்களில் இருக்கின்றவைகளும், சிவந்த நிறமுடையவைகளும், பகைவரைப் பயமுறுத்துகின்றவைகளும், மனிதரைத் தூக்கிக்கொண்டு போகின்றவைகளுமான மற்றிரண்டு குதிரைகளையும் இரதத்திற் பூட்டுகின்றார்கள் என்பது.

---

இரதத்தின் மீது கொடியை மாட்டுதல்

மந்திரம் 11

**केतुं कृण्वन्नकेतवे पेशो मर्या अपेशसे । समुषद्भिरजायथाः ।**

என்பது.

உரை

மனிதர்கள் கொடியில்லாத இரதத்திற்குக் கொடிக்கட்டுகின்றார்கள். பொன்னலங்காரமின்றியதற்கு பொன்னலங்காரஞ் செய்கின்றார்கள். இரதமே! நீயும், சுவாலை போனற பொறகிரணங்களுடன் கூடியிருக்கின்றாய் என்பது.

இருபதாமநுவாகம்

முற்றிற்று

---

ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இருபத்தோராவது அநுவாகம்

இருபத்தெட்டுப் பதங்களைக்கொண்டது.

சந்ததி மந்திரங்கள்

प्राणाय स्वाहा व्यानाय स्वाहाऽपानाय स्वाहा स्नावभ्यस्स्वाहा सन्तानेभ्यस्स्वाहा परि सन्तानेभ्यः स्वाहा पर्वभ्यः स्वाहा संधानेभ्यः स्वाहा शरीरेभ्यः स्वाहा यज्ञाय स्वाहा दक्षिणाभ्यः स्वाहा सुवर्गाय स्वाहा लोकाय स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ५२ ॥ प्राणायाष्टाविंशतिः ॥ २१ ॥

இதில் 'சந்ததி, என்னும் அன்னஹோம விசேடங் கூறப்படுகின்றது.

மந்திரங்கள் 1-14

**प्राणाय स्वाहा व्यानाय स्वाहाऽपानाय स्वाहा स्नावभ्यस्स्वाहा सन्तानेभ्यस्स्वाहा परिसन्तानेभ्यः स्वाहा पर्वभ्यः स्वाहा शरीरेभ्यः स्वाहा यज्ञाय स्वाहा दक्षिणाभ्यः स्वाहा सुवर्गाय स्वाहा लोकाय स्वाहा सर्वस्मै स्वाहा ।**

என்பது

உரை

பிராணன், வியானன், அபானன், நாடிகள், அதிலுண்டான சந்தான நாடிகள், அவற்றிலுண்டான உபசாகை நாடிகள், கணுக்கள், மூட்டுக்கள், உடம்பு, எக்ஞம், தக்ஷிணை, சுவர்க்கம், லோகம், மற்றும் எல்லாவற்றிற்கும் அர்ப்பணமாகுக. இப்பதிநான்கு மந்திரங்களாலும் ஹோமங்கள் செய்தல் வேண்டும் என்பது.

இருபத்தோராமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் நான்காம் பிரபாடகம்

## இருபத்திரண்டாவது அநுவாகம்

முப்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

பிரமுக்தி மந்திரங்கள்

सिताय स्वाहाऽसिताय स्वाहाऽभिहिताय स्वाहाऽनभिहिताय स्वाहा युक्ताय स्वाहाऽयुक्ताय स्वाहा सुयुक्ताय स्वाहोद्युक्ताय स्वाहा विमुक्ताय स्वाहा प्रमुक्ताय स्वाहा वञ्चते स्वाहा परिवञ्चते स्वाहा संवञ्चते स्वाहाऽनुवञ्चते स्वाहोद्वञ्चते स्वाहा यते स्वाहा धावते स्वाहा तिष्ठते स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ५३ ॥ सिताया-ष्टात्रिंशत् ॥ २२ ॥

இப்பிரபாடகத்திலுள்ள அநுவாக எண்ணைக்காட்டுந் தலைப்புச் சொற்கள்:-

बृहस्पतिः अग्यथा वा ऋक्षा वै प्रजापतिर्येनयेन द्वे वावाऽदित्या वसिष्ठः संवत्सराय सुवर्गं ब्रह्मवादिनो ज्योतिष्टोमं मेषः कूप्याभ्यो-ऽद्भ्यो यो अर्वन्तं नमोराज्ञेमयोभूः किꣳ स्विदम्बे भूः प्राणाय सिताय द्वाविꣳशतिः ॥ २२ ॥

பஞ்சாதிகளின் எண்ணைக்காட்டுந் தலைப்புச் சொற்கள் :-

बृहस्पतिः प्रीतिं तिष्ठन्ति वै दशरात्रेण सुवर्गं यो अर्वन्तं भूम्ने पञ्चाशत् ॥ ५२ ॥

இதில் பிரமுக்தி என்னும் மந்திரங்கள் கூறப்படுகின்றன.

மந்திரங்கள்1 - 19

सिताय स्वाहाऽसिताय स्वाहाऽभिहिताय स्वाहाऽनभिहिताय स्वाहा युक्ताय स्वाहाऽयुक्ताय स्वाहा सुयुक्ताय स्वाहोद्युक्ताय स्वाहा विमुक्ताय स्वाहा प्रमुक्ताय स्वाहा वञ्चते स्वाहा परिवञ्चते स्वाहा संवञ्चते स्वाहाऽनुवञ्चते स्वाहोद्वञ्चते स्वाहा यते स्वाहा धावते स्वाहा सर्वस्मै स्वाहा ।

எனபது

உரை

ஏறும்போது கட்டுவதும் கட்டாததுமாகிய இரண்டு கயிறுகட்கும், குதிரையைக் கட்டுவதுங் கட்டாததுமான இரண்டு கயிறுகட்கும், பூட்டல், பூட்டாமை நன்றாய்ப் பூட்டல், மேலே பூட்டல் என்பவைகட்கும், அவிழ்த்தல் நன்றாயவிழ்த்தல்கட்கும், நடை, இனிய நடை, நேர் நடை, மேல் நடை, சுற்றிய நடை என்பவைகட்கும், மனம்போல் தாவுதல், நிற்றல், மற்றும் எல்லாச் செய்கைகட்கும் அர்ப்பணமாகுக என்பது. இப்பத்தொன்பது மந்திரங்களாலும் ஹோமங்கள் செய்தல் வேண்டும் என்பதாம்.

இருபத்திரண்டாவது அநுவாகம்

முற்றிற்று.

———

நான்காம் பிரபாடகம் முடிந்தது



சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம். சுப்ரமண்யோம்.

ஐந்தாம் பிரபாடக விடயச்சுருக்கம்

विहितं पञ्चमस्याऽऽद्ये गवामयन सत्रकम् ।
तद्वैविध्यं द्वितीयेस्यात्तृतीये पृष्ठनिर्णयः ॥ १ ॥
चतुर्थेव्यत्ययः पूर्व पक्षस्यान्त्यस्यपक्षसि ।
पञ्चमे संसवष्षष्ठे भवेदुत्सर्ग सत्रकम् ॥ २ ॥
तन्मीमांसा सप्तमेस्यादष्टमेतु महाव्रतम् ।
सामानि नवमेप्रोक्ता वीणाद्या दशमेपुनः ॥ ३ ॥
दासीनृत्यं ततस्तूर्ध्वं मन्त्रा अन्येऽश्वमेधगाः ।
पृथ्व्यन्नहोमाः पञ्चाशदेक पञ्चाशदीरिताः ॥ ४ ॥
दत्वते परिधीनान्तु कस्त्वामन्त्रत्रयं भवेत् ।
अग्नये सर्वपृष्ठेष्टिः प्रयोगोऽनन्तरेश्रुतः ॥ ५ ॥
यः प्राणतोय आत्मेति तावुभौ महिमग्रहौ ।
आब्रह्मन्दशभिर्मन्त्रैर्ब्रह्मवर्चसहोमकः ॥ ६ ॥
आक्रानश्वं मन्त्रयेत जज्ञीति (पञ्च) दशभिर्हुतिः
आग्नेनैमित्तिकायागा मृगारेष्टिरथाग्नये ॥ ७ ॥
अग्न संनतिहोमास्युर्दशमे स्वामिवाचनम् ।
नमस्त्रिभिरुपस्थानं योवै विधिरुपासने ॥ ८ ॥
क्रतुराडश्वमेधोऽयं विराड्ध्यानमुपास्तिराद् ।
ताभ्यामुत्पद्यतेज्ञानं कृतकृत्यं भवत्यतः ॥ ९ ॥

இவ்வைந்தாம் பிரபாடக முதலநுவாகத்தில் கவாமயன மென்னுஞ் சத்திரயாகஞ் சொல்லப்படுகிறது. இரண்டாவதில் அதன் விகல்பமும், மூன்றாவதில் பிருஷ்டியஷடஹமும், நான்காவதில் முற்கூறியதின் உத்திர பக்ஷத்தில் உள்ளவிசேஷமும், ஐந்தாவதில் விரோதத்தால் செய்யும் கவா மயனமும், ஆறாவதில் உத்சவர்க சத்திரமும், ஏழாவதில் மேற்கூறியதின் சில விசேடங்களும், எட்டாவதில் சாம விசேடங்களும், ஒன்பதாவதில் நாறு கம்பிகள் உள்ள வீணைவாசித்தல் முதலியவைகளும், பத்தாவதில் தாசிகளு டைய நிருத்தியங்களும், பதினொன்றாவது முதல் பிரபாடகம் முடியும்வரை

அசுவமேத மந்திரங்களுமாகக் கூறப்படுகின்றன. அவற்றுள் பதினொன்றாவது பன்னிரண்டாவது அநுவாகங்களில அன்னஹோம மந்திரங்களும், பதின்மூன்றாவதில் பரிதிகளைப்போடும் மந்திரங்களும், பதினான்காவதில் சருவப்பிருஷ்ட இஷ்டியின் அவிகளின் விதியும், பதினைந்தாவதில் மேற்கூறிய அவிகளின் பிராமணமும், பதினாறாவது பதினேழாவதுகளில் 'மஹிமா' என்னும் இரண்டு கிரகங்களை ஹோமஞ்செய்யும் மந்திரங்களும், பதினெட்டாவதில் 'பிரமவர்ச்சம், என்னும் ஹோமமந்திரங்களும், பத்தொன்பதாவதில் அசுவத்தை அபிமந்திரணம் செய்யும் மந்திரமும், இருபதாவதில் சிலஹோமமந்திரங்களும், இருபத்தொன்றாவதில் சில இஷ்டிகளின் விதியும் இருபத்திரண்டாவதில் மிருகாரம் என்னும் இஷ்டியின விதியும், இருபத்துமூன்றாவதில் 'சன்னதி, என்னும் ஹோமமந்திரங்களும், இருபத்துநான்காவதில் அத்துவ யுஎசமானனை ஓதுவிக்கும் மந்திரங்களும், இருபத்தைந்தாவதில் குதிரையின் துதியும் கூறப்படுகின்றன. இத்துடன் எசுர்வேத சங்கிதை முடிகின்றது.

---

## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## முதலாவது அநுவாகம்

*ஆறு பஞ்சாதிக்குமேல் பதின்மூன்று பதங்களைக் கொண்டது.*

கவாமயனத்தைக் கூறும் பிராமணங்கள்

गावो वा एतत्सत्रमासताशृङ्गाः सतीः शृङ्गाणिनो जायन्ता इति कामेन तासां दश मासा निषण्णा आसन्नथ शृङ्गाण्यजायन्त ता उदतिष्ठन्नरात्स्मेत्यथ यासां नाजायन्त ताः संवत्सरमाप्त्वोदतिष्ठ-न्नरात्स्मेति यासां चाजायन्त यासां च न ता उभयीरुदतिष्ठन्नरा-स्स्मेति गोसत्रं वै ॥ १ ॥ संवत्सरो य एवं विद्वाꣳसः संवत्सर-मुपयन्त्यृध्नुवन्त्येव तस्मात्तूपरा वार्षिकौ मासौ पर्त्वा चरति सत्राभिजितꣳह्यस्यै तस्मात्संवत्सरसदो यत्किं च गृहे क्रियते तदाप्तमवरुद्धमभिजितं क्रि तेयसमुद्रं वा एते प्र प्लवन्ते ये संव-त्सरमुपयन्ति यो वै समुद्रस्य पारं न पश्यति न वै स तत उदेति

संवत्सरः ॥ २ ॥ वै समुद्रस्तस्यैतत्पारं यदतिरात्रौ य एवं विद्वाꣳसः संवत्सरमुपयन्त्यनार्ता एवोदचं गच्छन्तीयं वै पूर्वोऽतिरात्रोऽसावुत्तरो मनः पूर्वो वागुत्तरः प्राणः पूर्वोऽपान उत्तरः प्ररोधनं पूर्व उदयनमुत्तरो ज्योतिष्टोमो वैश्वानरोऽतिरात्रो भवति ज्योतिरेव पुरस्ताद्दधते सुवर्गस्य लोकस्यानुख्यात्यै चतुर्विꣳशः प्रायणीयो भवति चतुर्विꣳशतिरर्धमासाः ॥ ३ ॥ संवत्सरः प्रयन्त एव संवत्सरे प्रतितिष्ठन्ति तस्य त्रीणि च शतानि षष्टिश्च स्तोत्रीयास्तावतीः संवत्सरस्य रात्रय उभे एव संवत्सरस्य रूपे आप्नुवन्ति ते सꣳस्थित्या अरिष्ट्या उत्तरैरहोभिश्चरन्ति षडहा भवन्ति षड्वा ऋतवः संवत्सरऋतुष्वेव संवत्सरे प्रति तिष्ठन्ति गौश्चाऽऽयुश्चमध्यतः स्तोमौ भवतः संवत्सरस्यैव तन्मिथुनं मध्यतः ॥ ४ ॥ दधति प्रजननाय ज्योतिरभितो भवति विमोचनमेव तच्छन्दाꣳस्येव तद्विमोकं यन्त्यथो उभयतोज्योतिषैव षडहेन सुवर्गं लोकं यन्ति ब्रह्मवादिनो वदन्त्यासते केन यन्तीति देवयानेन पथेति ब्रूयाच्छन्दाꣳसि वै देवयानः पन्था गायत्री त्रिष्टुब्जगती ज्योतिर्वै गायत्री गौस्त्रिष्टुगायुर्जगती यदेते स्तोमा भवन्ति देवयानेनैव ॥ ५ ॥ तत्पथा यन्ति समानꣳसाम भवति देवलोको वै साम देवलोकादेव न यन्त्यन्यान्या ऋचो भवन्ति मनुष्यलोको वा ऋचो मनुष्यलोकादेवान्यमन्यं देवलोकमभ्यारोहन्तो यन्त्यभिवर्तो ब्रह्मसामं भवति सुवर्गस्य लोकस्याभिवृत्त्या अभिजिद्भवति सुवर्गस्य लोकस्याभिजित्यै विश्वजिद्भवति विश्वस्य जित्यै मासिमासि पृष्ठान्युप यन्ति मासिमा-

स्यतिग्राह्या गृह्यन्ते मासिमास्येव वीर्यं दधाति मासां प्रतिष्ठित्या उपरिष्टान्मासां पृष्ठान्युप यन्ति तस्मादुपरिष्टादोषधयः फलं गृह्णन्ति ॥ ६ ॥ गोसत्रं वा एति संवत्सरोऽर्धमासा मिथुनं मध्यतो देवया- नेनैव वीर्यं त्रयोदश च ॥ १ ॥

இவ்வநுவாகத்தில் வருடசத்திரயாகம் விதிக்கப்படுகின்றது. இதுவே, வாமயன மெனப்படுவதாம்.

---

அதன் விதி

பிராமணம் 1

गावो वा एतत्सत्रमासताशृङ्गाः सतीः शृङ्गाणि नो जायन्ता इति कामेन तासां दश मासा निषण्णा आसन्नथ शृङ्गाण्यजायन्त ता उदतिष्ठन्नरा- त्स्मेत्यथ यासां नाजायन्त ताः संवत्सरमाप्त्वोदतिष्ठन्नरात्स्मेति यासां चाजायन्त यासां च न ता उभयीरुदतिष्ठन्नरात्स्मेति गोसत्रं वै संव- त्सरो य एवं विद्वांसः संवत्सरमुपयन्त्यृध्नुवन्त्येव ।

என்பது

உரை

ஈண்டுக் கோக்கள் விலங்குகளாதலின் கருமங்கட்கு அதிகாரம் இல்லை. ஆயினும், அவற்றின் அபிமானி தேவதையைக் கொண்டு விவகாரஞ் செய்யப் படுகின்றது. கோக்கள் கொம்பிலாதவைகளாயிருந்து கொம்பை விரும்பி வருடசத்திரஞ் செய்ய தீட்சை பண்ணிக்கொண்டு செய்யும்போது பத்துமா தங்களில் கொம்புகள் முளைத்தன. அப்போது கோக்கள் வேண்டிய பயனை யடைந்துவிட்டோ மென்று சத்திரயாகத்திலிருந்தும் எழும்பின. இதுபற்றி யே, சில கோக்கட்கு கொம்புகள் இல்லை. அவைகள், மீண்டும் இரண்டு மாதம் சத்திரயாகத்தைச் செய்து ஒருவருடம் நிரம்புதலால் வேண்டிய பயனை இனி தடைந்தன. கொம்புடையவைகளும் கொம்பில்லாதவைகளுமான இருவகை களும் ஒன்றுசேர்ந்து நாம் வேண்டியபயனையடைந்தனம் என்று யாகத்தை முடித்துவிட்டெழுந்தன. இவ்வாறு கோக்களால் அநுட்டிக்கப்பட்டதால் இவ்வருட சத்திரயாகம் கோசத்திரம் எனவும் வழங்கப்படுகின்றது. இவ்வுண் மையையுணர்ந்து இதைச் செய்கின்றவன் எல்லாச் சம்பத்தையு மடைகின்றான் என்பது.

---

கவாமனயம்)

கொம்பு முளைத்தவைகளும், முளைக்காதவைகளும் பயனையடைந்தன என்று முன் கூறப்பட்டது. அதில், கொம்பு முளையாதவைகட்கு ப்யன் எவ்வாறாம்? என்றுசங்கித்துக் கூறுகின்றது.

பிராமணம் 2

**तस्मात्तूपरा वार्षिकौ मासौ पर्त्वा चरति सत्राभिजितꣳ ह्यस्यै ।**

என்பது.

உரை

சத்திரயாகத்தில் சம்பத்தை யடைந்ததனாலன்றோ, மொட்டையான கோக்கள் மழைக்காலமாகிய இரண்டு மாதங்களிலும் மகிழ்வோடு வனத்தில் இனிது திரிந்துவருகின்றன என்னை? நீண்டகொம்புகளுள்ள கோக்கள் மழையில் தலையைக் கீழே தொங்கவிட்டுக்கொண்டு கொம்புகளால் அடித்துக் கொள்ளுகின்றன. மொட்டைகள் இத்தகைய பீடைகளை யடைவதில்லை. இது தலைமழித்துக்கொண்டவனைப்போ லெண்க. இவ்வாற்றால் மொட்டையான கோக்கள் மழையில் களிப்புடனிருப்பதே சத்திரயாக அநுட்டான பயனும் என்பது.

---

மற்றொரு வகையால் சத்திரயாகத்தைப் புகழ்கின்றது.

பிராமணம் 3

**तस्मात्संवत्सरसदो यत्किं च गृहे क्रियते तदाप्तमवरुद्धमभिजितं क्रियते ।**

என்பது

உரை

சத்திரயாகம் பெருமை யுடையதாமாதலின் வருடசத்திரயாகஞ் செய்தவனுடைய வீட்டில் அங்கக் குறைவுடன் அக்கினி ஹோத்திர முதலானவைகள் செய்யினும் அது நிறைந்த அங்கமுடையதாகின்றன. காலமாறிச் செய்யினும் தனது காலத்தில் செய்ததாகின்றது. பயனை விரும்பாவிடினும் பயன் கிடைக்கின்றது என்பது.

---

அச் சத்திரயாகத்தின் பிராயணீய உதயனீய நாட்களை விதிக்கின்றது.

பிரமாணம் 4

**समुद्रं वा एते प्र प्लवन्ते ये संवत्सरमुपयन्ति यो वै समुद्रस्य पारं न पश्यति न वै स तत उदेति संवत्सरो वै समुद्रस्तस्यैतत्पारं यदतिरात्रौ य एवं विद्वाꣳसः संवत्सरमुपयन्त्यनार्ता एवोदृचं गच्छन्ति ।**

என்பது.

உரை.

வருடசத்திர யாகத்தைத் தொடங்குகின்றவர்கள், கடலைக் கையால் நீந்த எழுந்தவர்களாவர். என்னை? வருடசத்திர யாகம் கடல்போல் பரந்திருத்தலி னென்க. ஆதலின், கடலின் கரையைக் காணுதவன் கடலை நீந்திக் கடக்க முடியாதவனவன் அதுபோல் வருடசத்திர யாகம் கடல்போன்றதாமாதலின், அதன் கரையைத் தெரிந்துகொள்ளல் வேண்டும். ஆதலின் வருடசத்திரத்தின் பிராயணீய உதயனீயம் (தொடக்கத்திலும் முடிவிலுஞ் செய்யும் இஷ்டிகள்) என்னும் இரண்டு அதிராத்திரங்களும் கரைகளாம். அவற்றை யறியாவிடில் சத்திரயாகத்தில் உற்சாகம் எழாது. ஆதலின் பிராயணீயம் உதயனீயம் என்னும் அதிராத்திரங்கள் முதலிலும் கடையிலும் அநுட்டித்தற்குரியன என்பது.

---

அவ்விரண்டு அதிராத்திரங்களையுப் பல்வகையாகப் புகழ்கின்றது.

பிராமணம் 5

इयं वै पूर्वोऽतिरात्रोऽसावुत्तरो मनः पूर्वो वागुत्तरः प्राणः पूर्वोऽपान उत्तरः प्ररोधनं पूर्व उदयनमुत्तरः ।

என்பது

உரை

முதலில் பிராயணீய மென்னும் அதிராத்திரமாம். ஆதலின், அது முதலாவதாந் தன்மையால் மண் முதலிய வடிவமாம். உதயனீய மென்னும் அதிராத்திரம் கடையாம் ஆதலின் அது விண் முதலான வடிவமாம். மனம் முன், வாக்குபின், பிராணன்முன், அபானம் பின், உலகியல் வைதிகியற் செயல்களின் தொடக்கம் முதலாம் என்பது.

---

பொதுவகையாற் கூறப்பட்ட அவ்விரண்டு அதிராத்திரங்களையும், சிறப்பாக அவற்றின் வடிவங்களையும் விதிக்கின்றது.

பிராமணம் 6

ज्योतिष्टोमो वैश्वानरोऽतिरात्रो भवति ज्योतिरेव पुरस्ताद्दधते सुवर्गस्य लोकस्यानुख्यात्यै ।

என்பது.

உரை

இவ்வதிராத்திரம் சோதிட்டோமமாம். அதுவும் வைசுவா நரனால் காணப்பட்டது. அதை அநுட்டித்தலால் சுவர்க்கத்திற்குப் போகும் வழியில் விளக்கொளி வைத்ததாகின்றது. அது சுவர்க்கத்தை விளக்குதற் பொருட்டாம் என்பது.

கவாமயனம்)

பிராயணீயமாகிய அதிராத்திரத்தை விட்டுவிட்டு, இருபத்துநான்கு ஸ்தோமங்கள் கொண்ட உக்த்ய ஆரம்பணீயத்தை விதிக்கின்றது.

பிராமணம் 7

**चतुर्विंशः प्रायणीयो भवति चतुर्विंशतिरर्धमासाः संवत्सरः प्रयन्त एव संवत्सरे प्रति तिष्ठन्ति तस्य त्रीणि च शतानि षष्टिश्च स्तोत्रीयास्तावतीः संवत्सरस्य रात्रय उभे एव संवत्सरस्य रूपे आप्नुवन्ति ।**

என்பது

உரை

ஆரம்பணீயம் என்னும் நாள் முற்கூறிய அதிராத்திரத்திற்கு பிறகு உண்டாவதாமாயினும் மேலே கூறப்படும் அபிப்லவ ஆறு நாளின் ஆவிருத்தி மாதங்கட்கு முன்னும் ஆதலின் பிராயணீய மெனப்படுகின்றது. அந்நாளை இருபத்துநான்கு ஸ்தோமங்களுடன் அநுட்டித்தல் வேண்டும். அநுட்டிக்கில், ஒருவருடத்திற்கு பாதி மாதங்கள் இருபத்துநான்காமாதலின் அதன் ஒப்பால் அவற்றின்வாயிலாக வருடத்தை யடைகின்றனர். அடையத்தொடங்கிய வருடசத்திரயாகத்தில் நிலையுள்ளவராகின்றனர். மற்றும், இந்நாள் உக்த்ய வடிவாமாதலின், உக்த்தியத்திற்கும் பதினைந்து துதிகளாகின்றன. ஒவ்வொரு துதிக்கும் இருபத்துநான்கு இருக்குக்களில் துதிக்கும்போது முந்நூற்றறுபது துதிகளாகின்றன. இவ்வாறு, இருபத்துநான்கு பாதி மாதங்கள், முன்னூற்றறுபது நாட்கள் என்னும் இருவகையானும் ஒப்பிருத்தலின் வருடமடையப் படுகின்றது என்பது.

---

மேல்வரும் நாட்களை விதிக்கின்றது.

பிராமணம் 8

**तेसंस्थित्या अरिष्ट्या उत्तरैरहोभिश्चरन्ति ।**

என்பது

உரை

பிராயணீயம், ஆரம்பணீய மென்னும் இரண்டு நாளையும் அநுட்டித்த பிறகு யாகம் இனிது முடிதற் பொருட்டு மேல் சோதி முதலிய நாட்களால் அநுட்டிப்பார்களாக என்பது.

---

சோதி முதலான அபிப்லவ ஆறுநாட்களை விதிக்கின்றது.

பிராமணம் 9

**षडहा भवन्ति षड्वा ऋतवः संवत्सर ऋतुष्वेव संवत्सरे प्रति तिष्ठन्ति ।**

என்பது.

உரை

சோதி, கௌ, ஆயுள். ஆயுள், கௌ, சோதி என்பது ஆறுநாட்களாம். இருதுக்களும் ஆறுமாதலின் ஆறு இருதுக்கள் வருடமாதலின் வருடத்தில் நிலைக்கின்றான் என்பது.

---

கூறிய ஆறுநாட்களின் நடுவிலுள்ள இரண்டு நாட்களைப் புகழ்கின்றது.

பிராமணம் 10

**गौश्चाऽऽयुश्च मध्यतः स्तोमौ भवतः संवत्सरस्यैव तन्मिथुनं मध्यतो द-धति प्रजननाय ।**

என்பது

உரை

கௌ, ஆயுள் என்னும் இரண்டு நாளையும் ஆறுநாட்களின் நடுவில் அநுட்டிக்கிறபடியால் வருட சக்கிரயாகத்தின் நடுவில் புணர்ச்சியையுண்டாக்குகின்றது. இதனால் பிறப்பு உண்டாகின்றது என்பது.

---

ஆறுநாட்களின் முன்னாள் பின்னாள் இரண்டையும் புகழ்கின்றது

பிராமணங்கள் 11

**ज्योतिरभितो भवति विमोचनमेव तच्छन्दाꣳस्येव तद्विमोकं यन्त्यथो उभयतोज्योतिषैव षडहेन सुवर्गं लोकं यन्ति ।**

என்பது

உரை

ஆறுநாளின் முதலுங்கடையும் செய்தல் வேண்டும். செய்யில், முதலில் சோதிட்டோமத்தை அநுட்டித்து மீண்டும் முடிவில் அதை அநுட்டிக்கில் தொடங்கியதை விட்டது போலாகும். அதனால், சோதி முதலிய மூன்று காயத்திரி முதலிய சந்தங்களே விடுபட்டவகளாகும். மற்றும், இரண்டு பக்கங்களிலும் சோதியுடன் கூடியதால் ஆறுநாளால் விளக்கப் பெற்ற சுவர்க்கம் இனிது அடையப்படுகின்றது என்பது.

வினவிடைகளால் சோதி முதலியவைகளைப் புகழ்கின்றது.

பிராமணம் 12

**ब्रह्मवादिनो वदन्त्यासते केन यन्तीति देवयानेन पथेति ब्रूयाच्छन्दाꣳसि वै देवयानः पन्था गायत्री त्रिष्टुब्जगती ज्योतिर्वै गायत्री गौस्त्रिष्टुगायुर्जगती यदेते स्तोमा भवन्ति देवयानेनैव तत्पथा यन्ति ।**

என்பது.

உரை

சத்திரயாகத்தைச் செய்கின்றவர்கள் எம்மார்க்கத்தால் சுவர்க்கத்தை யடைகின்றார்கள்? என்று பிரமவாதிகள் வினவுகின்றனர். அதற்கு, தேவ யான வழியாகச் செல்கின்றார்கள் என்று உத்தரங்கூறுகிறார்கள் சில அறிஞர் என்பது. என்னை? இங்கு, காயத்திரி திரிஷ்டுப் சகதி என்னுஞ் சந்தங்களே வழியில் உதவிபுரிவதால் அது தேவர்கள் செல்லும் மார்க்கம் எனப்படுகின் றது. இதிலோ, சோதிட்டோம முதலியவைகளே காயத்திரி முதலியவைகளா கின்றன. ஆதலின், இதை அநுட்டித்தலால் அம்மார்க்கத்தினாலேயே சுவர்க் கத்தை அடைகின்றார்கள் என்பது.

---

எல்லா நாட்களிலும் பிருஷ்டத் துதிகளில் சாமம் ஒன்றேன விதிக்கின்றது.

பிராமணம் 13

**समानꣳ साम भवति देवलोको वै साम देवलोकादेव न यन्ति ।**

என்பது

உரை

பிருகத், அல்லது, ரதந்தரம் என்னும் ஒரு சாமமே எல்லா நாட்களி லும் பிருஷ்டத் துதி இருத்தல் வேண்டும். தேவலோகம் பட்சபாதமின்மை யின் சமமாதலால் சாமவடிவாம். ஒரு சாமத்தால் ஒருபோதும் தேவ லோகத்திலிருந்தும் மாறமாட்டான். உறுதியாய்த் தேவலோகத்தையே அடை வான் என்பது.

---

அச் சாமத்திற்கு ஆதாரமாகிய இருக்குக்களுக்கு இந்நாட்களில் பேதம் உள்ளது என விதிக்கின்றது.

பிராமணம் 14

**अन्या अन्या ऋचो भवन्ति मनुष्यलोको वा ऋचो मनुष्यलोकादेवान्यमन्यं देवलोकमभ्यारोहन्तो यन्ति ।**

என்பது

உரை

இருக்குக்கள் 'மனிதலோக வடிவங்கள். ஏனெனின்? சாமங்கட்கு ஆதாரமாயிருத்தலினென்க. இது கருமாநுட்டான வாயிலாக தேவலோகத்திற்கு ஆதாரமாகிய மனிதவுலகம்போல் என்பதாம். எசமானர்கள் இருக்குவடிவ வெவ்வேறு மனிதவுலகங்களிலிருந்து தேவலோகத்திற்கு ஏறுகின்றார்கள் சுகத்தையுமடைகின்றார்கள். மனிதலோகம் பல்வகைக் கருமங்கட்கு ஆதாரமாதலின் பல்வேறு வகைப்பட்டதாம் என்பது.

———

பிரகிருதியிலுள்ள சாமத்தை நீக்குதற்பொருட்டு மற்றொரு சாமத்தை விதிக்கின்றது.

பிராமணம் 15

अभिवर्तो ब्रह्मसामं भवति सुवर्गस्य लोकस्याभिवृत्त्यै ।

என்பது

உரை

பிராமணச்சம்சியின் சம்பந்தமுடைய சாமம் அபிவர்த்த சாமமெனப்படும். அதுவே இங்குப் பாடல்வேண்டும். அது, சுவர்க்கலோகத்தை நன்கு அடைதற்பொருட்டாம் என்பது.

———

வேறுநாளை விதிக்கின்றது

பிராமணம் 16

अभिजिद्भवति सुवर्गस्य लोकस्याभिजित्यै ।

என்பது

உரை

'விஷுவத்' என்னும் முக்கியமாகிய நாளுக்கு முன், ஸ்வரசாமங்கள் என்னும் மூன்றுநாள் விசேடங்கள் உள. அவைகட்கும் முன் 'அபிசித்' என்னும் ஒருநாள் அநுட்டித்தல் வேண்டும். இதனால் சுவர்க்கலோகம் வெற்றியாகிறது என்பது.

———

மீண்டும் மற்றொரு நாளை விதிக்கின்றது.

பிராமணம் 17

विश्वजिद्भवति विश्वस्य जित्यै ।

என்பது

கவாமயனம்)

உரை

விஷுவத் என்னும் நாளுக்குமேல் அநுட்டிக்கத்தக்க ஸ்வரசாமங்களென்னும் மூன்று நாள்விசேடங்களுக்குமேல் விசுவசித் என்னும் நாள் அநுட்டிக்கத்தக்கது. இதனால் விசுவ (உலக)ம் வெற்றியாகின்றது என்பது.

---

ஒவ்வொரு மாதமுமுள்ள அபிப்லவ ஆறுநாளுக்குமேல் பிருஷ்டிய ஆறுநாளையும் அதிக்கிராகிய நியமத்தையும் விதிக்கின்றது.

பிராமணம் 18

**मासिमासि पृष्ठान्युप यन्ति मासिमास्यतिग्राह्या गृह्यन्ते मासिमास्येव वीर्यं दधति मासां प्रतिष्ठित्यै ।**

என்பது.

உரை

ஒவ்வொரு மாதத்திலும் பிருஷ்டிய ஆறுநாளும் அநுட்டித்தல் வேண்டும். அதிக்கிராகிய மென்னும் கிரகத்தையுங் கிரகித்தல் வேண்டும். இதனால், ஒவ்வொருமாதத்திலும் வீரியமுண்டாகின்றது என்பது.

---

பிருஷ்டிய ஆறுநாட்கு, மாதங்களின் முதற்பாகம் இடமெனவிதிக்கின்றது.

பிராமணம் 19

**उपरिष्टान्मासां पृष्ठान्युप यन्ति तस्मादुपरिष्टादोषधयः फलं गृह्णन्ति ।**

என்பது

உரை

மாதங்களின் முன்பாகத்தில் பிருஷ்டியங்கள் அநுட்டிக்கப்படுகின்றன. இதனால், கொடி செடிகள் மேல்பாகத்தில் பயனுடையவைகளாகின்றன என்பது.

முதலநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## இரண்டாவது அநுவாகம்

*இரண்டு பஞ்சாதிக்குமேல் இரண்டு பதங்களைக் கொண்டது.*

மேற்கூறியதின் விகல்பத்தைக்கூறும் பிராமணங்கள்

गावो वा एतत्सत्रमासताशृङ्गाः सतीः शृङ्गाणि सिषासन्तीस्तासां दश मासा निषण्णा आसन्नथ शृङ्गाण्यजायन्त ता अब्रुवन्नरात्स्मोत्तिष्ठामाव तं काममरुत्स्महि येन कामेन न्यषदामेति तासामुत्वा अब्रुवन्नर्धा वा यावतीर्वाऽऽसामहा एवेमौ द्वादशौ मासौ संवन्सरं संपाद्योत्तिष्ठामेति तासाम् ॥ ७ ॥ द्वादशे मासि शृङ्गाणि प्रावर्तन्त श्रद्धया वाऽश्रद्धया वा ता इमा यास्तूपरा उभय्यो वाव ता आर्ध्नुवन्याश्च शृङ्गाण्यसन्वन्याश्चोर्जमवारुन्धतर्ध्नोति दशसु मासूत्तिष्ठन्नृध्नोति द्वादशसु य एवं वेद पदेन खलु वा एते यन्ति विन्दति खलु वै पदेन यन्तद्वा एतदृद्धमयनं तस्मादेतद्गो सनि ॥ ८ ॥ तिष्ठामेति तासां तस्माद्द्वे च ॥ २ ॥

ஈண்டுச் சோமயாகம், ஆஹிருக்கி அநாஹிருக்கியென இருவகைத்தாம். அவற்றுள், ஆஹிருக்கியும் அஹீனம் சக்கிரமென இருவகைத்தாம். அதாவது, இரண்டு இரவுகள்முதல் பன்னிரண்டு இரவுகள்வரை உள்ளது அஹீனமாம். துவாதசராத்திரமும் அஹீனம் சக்கிரம் என இருவகைக்காம். அதாவது பதின்மூன்று இரவுகட்குமேல் உள்ளவைகள் சத்திரங்கள். அதுவும், இராத்திரிச்சத்திரம் அயனசக்கிரம் என இருவகைக்காம். அவற்றுள், நூறு இரவுகள்வரையுள்ளவை ராத்திரிச் சத்திரங்கள் வருடசத்திர முதற்கொண்டு மேலேயுள்ளவைகள் அயன சத்திரங்கள் இவை அனைத்திற்கும் மூலகாரணமானதோ, கவாமயனமாகிய இதுவேயாம். அதிலும் ஒருவருடகால சாத்தியமானது முன் அநுவாகத்திற் கூறியதாம். இவ்விரண்டாமநுவாகத்தில் பத்து மாதங்களில் சாத்தியமாவது விகற்பமாய்க் கூறப்படுகின்றது.

கவாமயன விகற்பம்)

அதை விதிப்பதற்கு முற்கூறிய அர்த்தவாதத்தையே ஒரு விசேடத்தால் மீண்டும் ஓதுகின்றது

பிராமணம் 1

**गावो वा एतत्सत्रमासताशृङ्गाः सतीः शृङ्गाणि सिषासन्तीस्तासां दश मासा निषण्णा आसन्नथ शृङ्गाण्यजायन्त ता अब्रुवन्नरात्स्मोत्तिष्ठामाव तं काममरुत्स्महि येन कामेन न्यषदामेति ।**

என்பது

உரை

முன்னர் கொம்பின்றியவைகளாயிருந்த கோக்கள் கொம்பைவிரும்பி இச் சத்திரயாகத்தை பத்துமாதம் அநுட்டித்தன. அப்போது கொம்புகள் முளைத்தன. கொம்பு முளைத்துள்ளகோக்கள் தம்முள் ஒன்றற்கொன்று, யாம் கொம்புவேண்டுமென்று ஒன்றுகூடி சத்திரயாகஞ்செய்தோம் அது கிடைத்து விட்டது என்றும் சில கோக்கள் செய்த பயன் வந்தது என்றும் சத்திரத்தி லிருந்து எழுந்தன என்பது முன் அர்த்தவாதத்திற்கூறப்படுகின்றது. மற்றும், கொம்புகள் முளைக்காத கோக்கள் ஒருவருடம் வரை சத்திரயாகத் தை முடித்து பிறகு எழுந்தன என்பது.



அவற்றுள், குறித்த விசேடத்தை விளக்குகின்றது

பிராமணம் 2

**तासामु त्वा अब्रुवन्नर्धा वा यावतीर्वाऽऽसामहा एवेमौ द्वादशौ मासौ संवत्सरꣳ संपाद्योत्तिष्ठामेति तासां द्वादशे मासि शृङ्गाणि प्रावर्तन्त श्रद्धया वाऽश्रद्धया वा ता इमा यास्तूपरा उभय्यो वाव ता आर्ध्नुवन्याश्च शृङ्गाण्यसन्वन्याश्चोर्जमवारुन्धत ।**

என்பது

உரை

அவ்வாறு எழும்பாமல் இருந்த கோக்களும், இருவகையாய் சில கொம்பு களையே விரும்பின, சில இரசத்தை விரும்பின. இவ்விருவகைக் கோக்க ளும் ஒன்றுகூடி ஒருவருடத்தில் பாக்கியாயுள்ள இரண்டு மாதங்களிலும் அநுட்டித்து வருடத்தை நிறைவாக்குவோம் என்று பேசிக்கொண்டு சத்திரத் ரத்தை அநுட்டித்தன. அவற்றுள், கொம்பைவிரும்பினவைகள் கொம்புகளை யடைந்தன. கொம்பில் விருப்பமில்லாதவைகட்கு கொம்புகள் முளைக்கவில்லை.

ஆனால், அவைகளும் தாம் விரும்பிய இரசத்தையடைந்தன. இவ்வாறு, இச் சத்திரயாகத்தை பத்துமாதங்கள் அநுட்டிக்கில் கொம்புகள் மாத்திரம் முளைக் கும். ஒருவருட மநுட்டிக்கில், அழகிய கொம்புகளும் இரசங்களுந் கிடைக் கும் என்பது.

---

முற்கூறிய இரண்டு பக்ஷங்களையும் விதிக்கின்றது

பிராமணம் 3

**ऋध्नोति दशसु मासूत्तिष्ठन्नृध्नोति द्वादशसु य एवं वेद ।**

என்பது.

உரை

இவ்விருவகைகளையும் உணர்ந்து, பத்து, அல்லது, பன்னிரண்டுமாதங் கள் இதை அநுட்டிக்கின்றவன் அதற்குரிய பயனை அடைகின்றான் என்பது.

---

பன்னிரண்டுமாதம் வரை அநுட்டிக்கில் அநுட்டானம் உள்ளவாறு முடிந்ததால் பயன் உண்டாதக. பத்துமாதம் என்பதில் பயன் உண்டாதல் எவ்வாறு? என்றாசங்கித் துப் பொருத்திக் காட்டுகின்றது.

பிராமணம் 4

**पदेन खलु वा एते यन्ति विन्दति खलु वै पदेन यन् ।**

என்பது

உரை

பத்துமாதம் அநுட்டிக்கின்றவர்களும், காலங்குறைவாயினும் சாத்திர முறைப்படியே அநுட்டிக்கின்றார்கள். உலகிலும், இராசபாட்டையிற் போகின்றவன் சிறிது பழுதடையினும் கிராமத்தையடைந்து விடுகின்றான் அதுபோல் இதிலும் பயன் உண்டு என்பது.

---

அமைத்துக் காட்டிய இரண்டு பக்ஷங்களையும் முடிக்கின்றது.

பிராமணம் 5

**तद्वा एतदृद्धमयनं तस्मादेतद्गोसनि ।**

என்பது.

உரை

கவாமயனம் என்னும் இந்தயாகம் பத்துமாதம் அநுட்டிக்கினும் பன்னிரண்டு மாதம் அநுட்டிக்கினும் பயனைக் கொடுக்கின்றது இது கோக்களுக்குப் பயனை அளிக்குமானால், அறிவுமிகுந்த அந்தணர்கள் அநுட்டிக்கில் அவர்கட்கு என் சொல்லவேண்டும் ? என்பது.

இரண்டாமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## மூன்றாவது அநுவாகம்

*ஒரு பஞ்சாதிக்குமேல் முப்பத்துநான்கு பதங்களைக்கொண்டது.*

பிருஷ்டிய ஆறுநாட்களைப்பற்றிய விகற்பங்களைக் கூறும் பிராமணங்கள்

प्रथमे मासि पृष्ठान्युप यन्ति मध्यम उपयन्त्युत्तम उप यन्ति तदाहुर्यां वै त्रिरेकस्याह्न उपसीदन्ति दह्रं वै साऽपराभ्यां दोहाभ्यां दुहेऽथकुतः सा धोक्ष्यते यां द्वादश कृत्व उपसीदन्तीति संवत्सरꣳ संपाद्योत्तमे मासि सकृत्पृष्ठान्युपेयुस्तद्यजमाना यज्ञं पशूनव रुन्धते समुद्रं वै ॥ ९ ॥ एतेऽनवारमपारं प्र प्लवन्ते ये संवत्सरमुपयन्ति यद्बृहद्रथंतरे अन्वर्जेयुर्यथा मध्ये समुद्रस्य प्लवमन्वर्जेयुस्तादृक्तदनुत्सर्गं बृहद्रथंतराभ्यामित्वा प्रतिष्ठां गच्छन्ति सर्वेभ्यो वै कामेभ्यः संधिर्दुहेतद्यजमानास्सर्वान्कामानव रुन्धते ॥ १० ॥ समुद्रं वै चतुस्त्रिꣳशच्च ॥ ३ ॥

*இதில், பிருஷ்டிய ஆறுநாட்களைப்பற்றிய விகற்பங் கூறப்படுகின்றது.*

முன், 'மாதம் மாதம் பிருஷ்டியங்கள்,' என்றதில் மற்றொரு பக்ஷத்தை விதிக்கின்றது

பிராமணம் 1

**प्रथमे मासि पृष्ठान्युप यन्ति मध्यम उपयन्त्युत्तम उप यन्ति ।**

என்பது

உரை

எல்லாமாதங்களிலும் பிருஷ்டிய ஆறுநாள் இல்லை. மற்றோ, முதல்மாதம் நடுமாதம், கடைமாதம் என்னு மூன்றிலும் அநுட்டித்தல் வேண்டும் என்பது ஒரு பக்ஷமாம் என்பது.

---

மீண்டும் மற்றொரு பக்ஷத்தை விதிக்கின்றது

பிராமணம் 2

**तदाहुर्या वै त्रिरेकस्याह्न उपसीदन्ति दह्रं वै साऽपराभ्यां दोहाभ्यां दुहेऽथ कुतस्सा धोक्ष्यते यां द्वादश कृत्व उपसीदन्तीति संवत्सरꣳ संपाद्योत्तमे मासि सकृत्पृष्ठान्युपेयुस्तद्यजमाना यज्ञं पशूनव रुन्धते ।**

என்பது.

உரை

உலகில், பால் கறக்கும் ஒரு பசுவில் மும்முறை பால்கறக்கவிரும்பில் முதன்முறை மிகுதியாயப் பால்கொடுக்கின்றது. இரண்டாமுறை சிறிதளவு குறைவாய்க் கொடுக்கின்றது. மூன்றாமுறையோ. மிகச்சிறிதளவே கொடுக்கின்றது. இவ்வாறிருக்கும்போது ஒருநாளில் பன்னிரண்டுமுறை பால் கறக்கும்போது எவ்வாறு பால்கொடுக்கும்? பிருஷ்டிய ஆறுநாள் ஒரு கோவாம் அதில் மும்முறை பால் கறத்தல் எவ்வாறும் ! பன்னிரண்டு முறை கறக்கிலோ, சொல்லவேண்டியதே இல்லை என்று பிருஷ்டிய ஆறுநாளை யுணர்ந்தவர்கள் கூறுகின்றார்கள். ஆதலின், ஒருவருடம் சத்திரத்தை யநுட்டித்து விட்டு கடைமாதத்தில் ஒருமுறையே பிருஷ்டிய ஆறுநாளை அநுட்டித்தல் வேண்டும். அநுட்டிக்கில், பிருஷ்டிய ஆறுநாள் சாரமுடையதால் எக்ஞம் முடிவு பெறுகின்றது என்பது.

---

முன், சமம் சமானம் என விதித்ததை இப்போது சிறப்பாய் விதிக்கின்றது.

பிராமணம் 3

**समुद्रं वा एतेऽनवारमपारं प्र प्लवन्ते ये संवत्सरमुपयन्ति यद्बृहद्रथंतरे अन्वर्जेयुर्यथा मध्ये समुद्रस्य प्लवमन्वर्जेयुस्तादृक्तदनुत्सर्गं बृहद्रथंतराभ्यामित्वा प्रतिष्ठां गच्छन्ति सर्वेभ्यो वै कामेभ्यः संधिर्दुहे तद्यजमानास्सर्वान्कामानव रुन्धते ।**

என்பது

உத்தரபக்ஷம்)

உரை

வருடசத்திரயாகத்தை அநுட்டிக்கின்ற எசமானர்கள் இருகரைகளுமின்றிய கடலை கையால் நீந்த எழுந்தவர்களாவர். அது முடியாத காரியமாம். ஆகையால் பிருஷ்டியத் துதியில், பிருகத், ரதந்தரமென்னும் கரைபோன்ற இரண்டையுஞ் சம்பாதிப்பார்களாக. சம்பாதிக்கில், கடலில் நடுவில் நீந்துவதற்கு தெப்பமுதலான சாதனத்தைத் தேடியவர்களாவர். ஆதலின், பிருகத் ரதந்தரங்களுடன் கூடவே பிருஷ்டியத்துதிகளையும் அநுட்டித்து எக்ஞத்தை முடிப்பார்களாக. மற்றொரு கன்றைக்கொண்டு பால் கறக்கும் பசு வேண்டும் போதெல்லாம் பால் கறப்பதுபோல் ப்ரகிருதியிலுள்ளதும் வேறுமாகிய பிருகத் ரதந்தரமெனனும் சாமத்தால் அந்நாளில் அநுட்டானஞ் செய்யில் எல்லா விருப்பங்களையும் அடைகின்றார்கள் என்பது.

மூன்றுமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## நான்காவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் இரண்டு பதங்களைக் கொண்டது.

உத்தரபக்ஷங்களை விதிக்கும் பிராமணங்கள்.

समान्य ऋचो भवन्ति मनुष्यलोको वा ऋचो मनुष्यलोकादेव न यन्त्यन्यदन्यत्साम भवति देवलोकोवै साम देवलोकादेवान्यमन्यं मनुष्यलोकं प्रत्यवरोहन्तो यन्ति जगतीमग्र उप यन्ति जगतीं वै छन्दाꣳसि प्रत्यवरोहन्त्याग्रयणं ग्रहा बृहत्पृष्ठानि त्रयस्त्रिꣳशꣳ स्तोमास्तस्माज्ज्यायाꣳसं कनीयान्प्रत्यवरोहति वैश्वकर्मणो गृह्यते विश्वान्येव तेन कर्माणि यजमाना अव रुन्धत आदित्यः ॥११॥ गृह्यत इयं वा अदितिरस्यामेव प्रति तिष्ठन्त्यन्योन्यो गृह्येते मिथुनत्वाय प्रजात्या अवान्तरं दशरात्रेण प्रजापतिः प्रजा असृजत

यद्दशरात्रो भवति प्रजा एव तद्यजमानाः सृजन्त एतां ह वा उदङ्कः शौल्बायनः सत्रस्यर्धिमुवाच यद्दशरात्रो यद्दशरात्रो भवति सत्रस्यर्ध्या अथो यदेव पूर्वेष्वहस्सु विलोम क्रियते तस्यैवैषा शान्तिः ॥१२॥ आदित्यस्तस्यैव द्वे च ॥४॥

இதில், உத்தரபக்ஷத்தின் விசேடங்கள் விதிக்கப்படுகின்றன. அதாவது, வருடசத்திரயாகத்திற்கு இரண்டு பக்ஷங்கள் உள இதை பிறவிடத்திற் காண்க. அவற்றுள், முதலாவது ஆறுமாதமாகிய முதல் பக்ஷத்திற்கு சாமம் ஒன்றென்பதும், இருக்குக்கள் அநேகம் என்பதும் முன் கூறப்பட்டன. இப்போது, அதற்கு மாறாக இரண்டாவது ஆறுமாதமாகிய இரண்டாம் பக்ஷத்திற்கு இருக்கு ஒன்றும், சாமம் அநேகமாமென்பதும் விதிக்கப்படுகின்றது. அவற்றுள்,

இருக்கு ஒன்றென்பது விதிக்கப்படுகின்றது

பிராமணம் 1

समान्य ऋचो भवन्ति मनुष्यलोको वा ऋचो मनुष्यलोकादेव नयन्ति ।

என்பது

உரை

மனிதலவுகில் கருமத்தைச் செய்து பிறகு தேவலோகத்தையடைகின்றார்கள். இவ்வாறே ஆதாரமாகிய இருக்கை வரப்படுத்தி அதில் சாமப்பாடலைப் பாடுகின்றார்கள். ஆதலின், இருக்கு மனிதவுலகவடிவாம். அது பொதுவாக ஒன்றாகவே இருத்தல்வேண்டும். ஒருநாளில் உள்ள ஒரு இருக்கையே வேறிடத்திலும் பிரயோகித்தல் வேண்டும். இவ்வாறு செய்யில் சந்தானம் (தொடர்பு) கெடாமையின் மனிதவுலகத்தைவிட்டு நீங்கார்கள் என்பது.

---

சாமம் அநேகம் என்பதை விதிக்கின்றது

பிராமணம் 2

अन्यदन्यत्साम भवति देवलोको वै साम देवलोकादेवान्यमन्यं मनुष्य-लोकं प्रत्यवरोहन्तो यन्ति ।

என்பது

உத்தரபக்ஷம்)

உரை

சாமம் பிறகு உண்டாகும் ஒப்புமையால் தேவலோகமாம். அத்தகைய, சாமம் முதல்நாளிலிருந்தது எதுவோ, அதை விட வேறுசாமம் மறுநாளில் செய்தல் வேண்டும். உலகியலிலும், தேவலோகத்திலிருந்து கிளம்பியவன் வெவ்வேறு மனிதவுலகை யடைகின்றான். அல்லது, அன்யம் என்பதால் ஐந்தாம் வேற்றுமையாம் ஆகவே அன்யத்கிலிருந்து அதாவது கருமவிசிக்கிரத்தால் பல்வகைப்பட்ட தேவலோகங்களிலிருந்து வந்து மனிதவுலகையடைகின்றான் என்பது.

---

மற்றொரு விசேடத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

**जगतीमग्र उप यन्ति जगतीं वै छन्दाꣳसि प्रत्यवरोहन्ति ।**

என்பது

உரை

முதலாம் பக்ஷத்தில் முதலில் காயத்திரி அநுட்டிக்கப்பட்டது. இரண்டாம் பக்ஷத்தில் சகதி முதலில் அநுட்டித்தல் வேண்டும். அநுட்டிக்கில் சகதியினும் வேறான அனைத்தும் அவரோகணமாகின்றன என்பது.

---

மீண்டும், முறையே மூன்றுவிசேடங்கள் விதிக்கப்படுகின்றன

பிராமணம் 4

**आग्रयणं ग्रहाबृहत्पृष्ठानि त्रयस्त्रिꣳशꣳ स्तोमास्तस्माज्ज्यायाꣳसं कनीयान्प्रत्यवरोहति ।**

என்பது.

உரை

பூர்வபக்ஷத்திலிருந்து உத்தரபக்ஷத்தில் காயத்திரி முதலியவற்றை மாறாக அநுட்டிப்பதுபோல் கிரகங்களின் சாமங்களும் மாறுமென்பதையுணர்க. மற்றும், ஆக்ரயணம் அங்குக் கடைசியில் கிரகித்தல் வேண்டும் இங்கோ, ஆதியில் கிரகித்தல் வேண்டும். கிரகிக்கவே, கிரகங்கள் கீழிறங்கி வருகின்றன. அவ்வாறே, அதில் ரதந்தரம் பிருஷ்டம் முதல்நாளில் அநுட்டானம் இதில் பிருகத் பிருஷ்டம் முதல் நாள் அநுட்டிக்கும்போது எல்லாப் பிருஷ்டத் துதிகளும் கீழிறங்கி வருகின்றன. அங்ஙனமே, முப்பத்துமூன்று ஸ்தோமங்

கள் கடைசியில் அநுட்டானம் இங்கு முதலில் அநுட்டானம். அநுட்டிக்கவே எல்லா ஸ்தோமங்களும் கீழாய ஆகின்றன. இவ்வாறு, அதில் பெரிதான முப்பத்துமூன்று ஸ்தோமங்கள் முன் ஆகின்றன. இதில், இருபத்தேழு; இருபத்தொன்பது முதலாயின பிறகு வருகின்றன. ஆதலின் உலகிலும், பெரியோரான தந்தை பாட்டன் மார்களை புத்திரன் பேரன்மார்கள் வாகனங்களிலிருந்தும் குதிரைகளிலிருந்தும் கீழே இறக்கிவிடுகின்றார்கள் என்பது.

---

இரண்டு அதிக்கிராகியங்களை விதிக்கின்றது

பிராமணம் 5

**वैश्वकर्मणो गृह्यते विश्वान्येव तेन कर्माणि यजमाना अव रुन्धत आदित्यो गृह्यत इयं वा अदितिरस्यामेव प्रति तिष्ठन्ति ।**

என்பது

உரை

"வாசஸ்பதிம்,, என்பது முதலிய மந்திரத்தால் கிரகிக்கப்படும் அதிக் கிராகியம் வைசுவகருமமாம். அதனால், எசமானன், எல்லாக் கருமங்களையு மடைகின்றான். 'மஹீமூஷு', என்பது முதலியதால் கிரகிக்கப்படும் அதிக் கிராகியம் ஆதித்யமாம். பூமி அதிதியாமாதலின், அதனால் பூமியில் பெரு மையை யடைகின்றான் என்பது.

---

அவ்விரண்டின் வேறுபாட்டை விதிக்கின்றது

பிராமணம் 6

**अन्योन्यो गृह्येते मिथुनत्वाय प्रजात्यै ।**

என்பது

உரை

ஒன்று ஒன்று கிரகித்தல் வேண்டும். அதாவது வைசுவகருமம் கிரகிக் கும் நாளுக்கு அடுத்தநாள் ஆதித்யம் கிரகித்தல் வேண்டும். பிறகு அதற் கடுத்த நாள் வைசுவகருமம். மறுநாள் ஆதித்யம் என்றிவ்வாறு மகாவிரதம் வரை கிரகிக்கில் இரண்டு இரண்டாதல் புணர்ச்சி வடிவமாதலின் இது பிரசை உற்பத்தியின் பொருட்டாம் என்பது.

---

பன்னிரண்டு நாட்களிலுள்ள பத்துநாளை விதிக்கின்றது

பிராமணம் 7

अवान्तरं वै दशरात्रेण प्रजापतिः प्रजा असृजत यद्दशरात्रो भवति प्रजा एव तद्यजमानाः सृजन्त एता५ ह वा उदङ्कः शौल्बायनः सत्रस्यर्धिमुवाच यद्दशरात्रो यद्दशरात्रो भवति सत्रस्यर्ध्यां अथो यदेव पूर्वेष्वहस्सु विलोम क्रियते तस्यैवैषा शान्तिः ।

என்பது

உரை

பன்னிரு நாட்களுக்கு இடையிலுள்ள பத்து இரவால் முன் பிரமன் உயிர்களைப்படைத்தனன். ஆதலின், அத்தகைய பத்து இரவுகளால் எசமானனும் பிரசைகளையுண்டாக்குகின்றான். சுல்பாயனருடைய புத்திரராகிய உதங்கமுனிவர், இதனால் எல்லாச் சத்திரபலன்களும் கிடைக்கின்றன என்கின்றனர். இது முழுச்சம்பத்தையும் உண்டாக்குகிறது. அதாவது குறைவையும்நிறைவாக்கும் என்பது.

நான்காமநுவாகம்

முற்றிற்று

---

ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

ஐந்தாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

பொறுமையாற் செய்யும் கவாமயனத்தை விதிக்கும் பிராமணங்கள்

यदि सोमौ सꣳसुतौ स्यातां महति रात्रियै प्रातरनुवाकमुपाकुर्यात्पूर्वो वाचं पूर्वो देवताः पूर्वश्छन्दाꣳसि वृङ्क्ते वृषण्वतीं प्रतिपदं कुर्यात्प्रातस्सवनादेवैषामिन्द्रं वृङ्क्तेऽथो खल्वाहुः सवनमुखेसवनमुखे कार्येति सवनमुखात्सवनमुखादेवैषामिन्द्रं वृङ्क्ते संवेशायोपवेशाय गायत्रियास्त्रिष्टुभो जगत्या अनुष्टुभः पङ्क्त्या अभिभूत्यै

स्वाहा छन्दाꣳसि वै संवेश उपवेशश्छन्दोभिरेवैषाम् ॥ १३ ॥ छन्दाꣳसि वृङ्क्ते सजनीयꣳ शस्यं विहव्यꣳ शस्यमगस्त्यस्य कयाशुभीयꣳ शस्यमेतावद्वा अस्ति यावदेतद्यावदेवास्ति तदेषां वृङ्क्ते यदि प्रातस्सवने कलशो दीर्येत वैष्णवीषु शिपिविष्टवतीषु स्तुवीरन्यद्वै यज्ञस्यातिरिच्यते विष्णुं तच्छिपिविष्टमभ्यतिरिच्यते तद्विष्णुः शिपिविष्टोऽतिरिक्त एवातिरिक्तं दधात्यथो अतिरिक्तेनैवातिरिक्तमाप्त्वाऽव रुन्धते यदि मध्यंदिने दीर्येत वषट्कारनिधनꣳ साम कुर्युर्वषट्कारो वै यज्ञस्य प्रतिष्ठा प्रतिष्ठामेवैनद्गमयन्ति यदि तृतीयसवन एतदेव ॥ १४ ॥ छन्दोभिरेवैषामवैकान्नविꣳशतिश्च ॥ ५ ॥

இதில், பொருமையாற் செய்யப்படும் இரண்டு கவாமயனங்களின் விசேடத்தைக் கூறுகின்றது.

அதை விதிக்கின்றது

பிராமணம் 1

यदि सोमौ सꣳसुतौ स्यातां महति रात्रियै प्रातरनुवाकमुपाकुर्यात्पूर्वो वाचं पूर्वो देवताः पूर्वश्छन्दाꣳसि वृङ्क्ते ।

என்பது

உரை

பொருமையால் இரண்டு வேள்வித் தலைவர்களின் கூட்டம் ஒன்றுகூடிச் சோமரசம் பிழியில் அதிகாலையில் எழுந்து பிராதரநுவாக சஸ்திரத்தை உபாகரணஞ் செய்தல் வேண்டும். அதாவது, "பிராதர்யாவப்போதேவேப்ய:" என்பது முதலிய பிரேஷையை அத்துவர்யு ஓதல் வேண்டும். ஈண்டு, எவ்வெசமானனுடைய கூட்டம் முதலிற்றொடங்கி உபாகரணஞ் செய்கின்றார்களோ, அவர்கள், ஏனையகூட்டத்தின் வாக்கு முதலானவைகளை இழுத்துக் கொள்கின்றார்கள் என்பது.

---

பேர்றமைக் கவர்மயனம்)

பிராதரநுர்வர்க்கத்திற்கு இருக்கு விசேடங்களை விதிக்கின்றது

பிராமணம் 2

वृषण्वतीं प्रतिपदं कुर्यात्प्रातस्सवनादेवैषामिन्द्रं वृङ्क्ते ।

என்பது

உரை

பிரகிருதியில், "ஆபோரேவதி:, என்பது முதலியது முதலாவதாம். இங்கு, அதை விட்டுவிட்டு, விருஷன் என்னுஞ் சொல்லையுடைய வேறொரு இருக்கை முதலாவதாகச் செய்தல் வேண்டும். செய்யில், அன்னிய எசமானர்களுக்கு இந்திரதேவதை காலைச்சவனத்திலிருந்து நழுகிவிடுகின்றது என்பது.

---

மற்றொரு பக்ஷத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

अथो खल्वाहुस्सवनमुखेसवनमुखे कार्येति सवनमुखात्सवनमुखादेवैषामिन्द्रं वृङ्क्ते ।

என்பது

உரை

ஒவ்வொரு வேளையுஞ் சோமரசம் பிழிதலிலும், அதாவது மூன்று சவனத்திலும், 'விருஷன், என்னுஞ் சொல்லையுடைய இருக்கையே ஓதல் வேண்டுமென்கின்றனர் சிலர். இதனால், ஒவ்வொரு சவனத்திலிருந்தும் இந்திரன் நீக்கப்படுகின்றான் என்பது.

---

அபிபூதி ஹோம மந்திரங்களைக் கூறுகின்றது

மந்திரங்கள் 1 - 5

संवेशायोपवेशाय गायत्रियास्त्रिष्टुभो जगत्या अनुष्टुभः पङ्क्त्या अभिभूत्यै स्वाहा ।

என்பது

உரை

காயத்திரி முதலான சந்தங்கள் தனது எக்ஞத்தில் நன்கு பிரவேசித்தற் பொருட்டும், புகுந்த அதிலேயே நிலைத்திருத்தற் பொருட்டும் பிறருடைய காயத்திரியானது சந்தத்தால் குறைவையடைதற் பொருட்டும் இவ்வாகுதி

அர்ப்பணமாகுக. இவ்வாறே, திரிஷ்டுப், சகதி, அநுஷ்டுப், பங்தி என்னுஞ் சந்தங்கட்கும் ஸ்வாஹா என்பதை முடிவில் சேர்த்து உரைத்துக் கொள்க என்பது.

---

மந்திரங்களின் கருத்தைக் கூறுகின்றது

## பிரமாணம் 4

**छन्दाꣳसि वै संवेश उपवेशश्छन्दोभिरेवैषां छन्दाꣳसि वृङ्क्ते ।**

என்பது.

உரை

பிரவேசிக்தல் நிலைத்திருக்கல் என்னும் இரண்டும் சந்தவிடயமாமாதலின் சந்தமேயாம். இதனுல் தனது சந்தங்களால் பிறருடைய சந்தங்கள் நாசமாகின்றன என்பது.

---

சஸ்திர விசேடத்தை விதிக்கின்றது

## பிராமணம் 5

**सजनीयꣳ शस्यं विहव्यꣳ शस्यमगस्त्यस्य कयाशुभीयꣳ शस्यमेतावद्वा अस्ति यावदेतद्यावदेवास्ति तदेषां वृङ्क्ते ।**

என்பது

உரை

நிஷ்கேவல்ய சஸ்திரத்தில், "இந்திரஸ்யவீர்யாணி,, என்னுமிடத்தில் மனஸ்வான் என்பதிலுள்ள 'ஸசநாஸ இந்திர, என்னும் சஜனீயச சூக்தத்தை ஓதல் வேண்டும். "மமாக்னே, என்னுஞ் சூக்தத்தில் உள்ள விஹவ்ய சூக்தத்தை மஹாவைசுவதேவசஸ்திரத்தில் "ஆநோபத்ரா, என்னுமிடத்தில் ஓதல் வேண்டும். "கயா சுபா,, என்னும் அகஸ்திய சூக்தத்தை, மருத்வதீய சஸ்கிரத்தில் ஜனிஷ்டா உக்ர என்னுமிடத்தில் ஓதல் வேண்டும். அல்லது, அவ் வச்சஸ்திரத்தின் முதலில் கூறியபடி சூக்தக் கூட்டத்தை ஓதல் வேண்டும். மூன்று சூக்தத்தின் சாரமிதுவாம். இவ்வாறு படித்தலால் பிறருருடைய சாரங்களனைத்துங் கெட்டு விடுகின்றது என்பது.

---

நைமித்திக துதி விசேடத்தை விதிக்கின்றது

## பிராமணம் 6

यदि प्रातस्सवने कलशो दीर्येत वैष्णवीषु शिपिविष्टवतीषु स्तुवीरन्यद्वै यज्ञस्यातिरिच्यते विष्णुं तच्छिपिविष्टमभ्यति रिच्यते तद्विष्णुश्शिपिविष्टोऽतिरिक्त एवातिरिक्तं दधात्यथो अतिरिक्तेनैवातिरिक्तमाप्त्वाऽव रुन्धते ।

என்பது

### உரை

காலையில் சோமரசம் பிழியும்போது துரோணகலசம் உடைந்துவிடில், துதியாளன, விஷ்ணுதுதியில, சிபிவிஷ்டன்' என்னுஞ் சொல்லையுடைய துதியைச்செய்தல் வேண்டும். என்னை ? எக்ஞத்தின் அங்கம் சாத்திரமுறையைக் கடந்திருக்கில் அது சிபிவிஷ்டனுகிய விஷ்ணுவைக் குறித்துப் புறம்பானதாம். சிபி = பசுவாம். அவைகட்கு சுவாமியாந் தன்மையிலுள்ளவன் சிபிவிஷ்டன் என்னும் விஷ்ணுவேயாவன். ஆதலின் அவனைத்துதிக்கில், வேறுபட்ட விஷ்ணுவிற்கு வேறுகிய அங்கத்தை நிறுவுதல் கூடும். மற்றும், வேறுபாடாகிய விஷ்ணுவால் சாத்திரமுறையற்ற அங்கம் அடையப்பெற்று பிறகு அதைச் சாத்திரமுறையுடையதாகச் செய்தும் சாத்திரத்திற் கூறிய பயனையடைகின்றார்கள் என்பது.

---

இரண்டாவது மூன்றவது சவன விசேடங்களை விதிக்கின்றது

## பிராமணம் 7

यदि मध्यंदिने दीर्येत वषट्कारनिधनꣳ साम कुर्युर्वषट्कारो वै यज्ञस्य प्रतिष्ठा प्रतिष्ठामेवैनद्गमयन्ति यदि तृतीयसवन एतदेव ।

என்பது.

### உரை

இரண்டாவது மூன்றுவது சவனங்களில் துரோண கலசம் உடைந்துபோய்விடில், வஷட்கார நிதன, மென்னுஞ், சாமத்தைப் பாடல் வேணடும். நிதனம் = முடிவு. அதாவது சாமத்தின் ஐந்தாம் பாகத்தில் வஷட் என்னுஞ்

சொல்வருதலாம். 'வஷட், என்பது அவிகொடுப்பதற்குச் சாதனமாமாதலின் எக்ஞம் முடியுமிடமாம். அதையுடைய சாமப்பாடலைப்பாடலால் சத்திரயாகம் குறைவுபடாமல் முடிந்துவிடும். மூன்றுஞ் சவனத்தில் கலசமுடையினும் இம் முறையேயாம் என்பது.

ஐந்தாமநுவாகம்

முற்றிற்று.

---

ஏழாங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## ஆறுவது அநுவாகம்

*நான்கு பஞ்சாதிக்குமேல் பதினைந்து பதங்களைக் கொண்டது.*

உத்சர்க்க நாளை விதிக்கும் பிராமணங்கள்

षडहैर्मासान्त्संपाद्याहरुत्सृजन्ति षडहैर्हि मासान्त्संपश्यन्त्यर्ध-मासैर्मासान्त्संपाद्याहरुत्सृजन्त्यर्धमासैर्हि मासान्त्संपश्यन्त्यमावा-स्यया मासान्त्संपाद्याहरुत्सृजन्त्यमावास्यया हि मासान्त्संपश्य-न्ति पौर्णमास्या मासान्त्संपाद्याहरुत्सृजन्ति पौर्णमास्या हि मासा-न्त्संपश्यन्ति यो वै पूर्ण आसिञ्चति परा स सिञ्चति यः पूर्णादुद-चति ॥ १५ ॥ प्राणमस्मिन्त्मदधाति यत्पौर्णमास्या मासान्त्सं पाद्याहरुत्सृजन्ति संवत्सरायैव तत्प्राणं दधति तदनु सत्रिणः प्राणन्ति यदहर्नोत्सृजेयुर्यथा दृतिरुपनद्धो विपतत्येवꣳ संवत्सरो वि पतेदार्तिमार्छेयुर्यत्पौर्णमास्यामासान्त्संपाद्याहरुत्सृजन्ति संवत्स-रायैव तदुदानं दधति तदनुसत्रिण उत् ॥ १६ ॥ अनन्ति नाऽऽ-र्तिमार्छन्ति पूर्णमासे वै देवानाꣳ सुतो यत्पौर्णमास्या मासान्त्सं-

पाद्याहरुत्सृजन्ति देवानामेव तद्यज्ञेन यज्ञं प्रत्यवरोहन्ति वि वा एतद्यज्ञं छिन्दन्ति यत्षडहसंततꣳ सन्तमथाहरुत्सृजन्ति प्राजापत्यं पशुमा लभन्ते प्रजापतिस्सर्वा देवता देवताभिरेव यज्ञꣳ सं तन्वन्ति यन्ति वा एते सवनाद्येऽहः ॥ १७ ॥ उत्सृजन्ति तुरीयं खलु वा एतत्सवनं यत्सांनाय्यं भवति तेनैव सवनान्न यन्ति समुपहूय भक्षयन्त्येतत्सोमपीथा ह्येतर्हि यथायतनं वा एतेषाꣳ सवनभाजो देवता गच्छन्ति येऽहरुत्सृजन्त्यनुसवनं पुरोडाशान्निर्वपन्ति यथायतनादेव सवनभाजो देवता अवरुन्धतेऽष्टाकपालान्प्रातस्सवन एकादशकपालान्माध्यंदिने सवने द्वादशकपालाꣳस्तृतीयसवने छन्दाꣳस्येवाऽऽप्त्वाव रुन्धते वैश्वदेवं चरुं तृतीयसवने निर्वपन्ति वैश्वदेवं वै तृतीयसवनं तेनैव तृतीयसवनान्न यन्ति ॥ १८ ॥ उदचत्युद्येऽहराप्त्वा पञ्चदश च ॥ ६ ॥

இதில், கவாமயனத்தின் துணைவிகாரமாகிய நாளை விட்டுவிட்டு வீதியை விதிக்கின்றது. உத்சர்க்கம் = விடுதல்.

பிராமணம் 1

षडहैर्मासान्त्संपाद्य हरुत्सृजन्ति षडहैर्हि मासान्त्संपश्यन्ति ।

என்பது

உரை

அபிப்லவ ஆறுநாளை ஐந்து முறை திருப்பி ஒருமாதம் அநுட்டித்துக் கொண்டு மேல் மாதத்தில் முதலிற் செய்யப்படும் சோதி என்னு நாளை விட்டு விடல்வேண்டும. அல்லது, நான்கு அபிப்லவங்களாலும் ஒருபிருஷ்டியத்தாலும் மாதத்தை நிறைவுசெய்து கொண்டு மேல்வரும் நாளைவிட்டுவிடல் வேண்டும். உலகிலும், ஐந்து ஆறுநாட்களை எண்ணி முப்பதுநாள் எனக்கண்டு இது சாவனமாதம் எனத்தெரிந்து கொள்கின்றனர் என்பது.

மற்றேந பக்ஷத்தை விதிக்கின்றது

## பிராமணம் 2

**अर्धमासैर्मासान्त्संपाद्याहरुत्सृजन्त्यर्धमासैर्हि मासान्त्संपश्यन्ति ।**

என்பது.

உரை

முன்பக்ஷத்தில் பிராயணீய ஆரம்பணீய நாட்களிரண்டையும் விட்டு விட்டு மூன்றுநாளில் ஆறுநாள் தொடங்கப்பட்டது. அப்போது, தொடங்கிய முப்பது நாட்கொண்ட சாவனமாதம் போனவிடத்து அதற்குமேல் உள்ள நாள் விட்டுவிடப்பட்டது. இப்போது, பிராயணீயநாள் முதல் பதினைந்து பதினைந்து நாட்களாக மாதத்தை முடித்து அதன்பிறகு செய்யவேண்டிய நாளை விட்டுவிடல் வேண்டும். உலகிலும் பாதிமாதங்களிரண்டால் ஒரு மாதம் கண்டு கொள்ளப்படுகின்றது. இது சாவனமாதக் கருமத்தைப் பற்றிய தாம் என்பது.

---

இனி, சாந்திரமாதக் கருத்தைப்பற்றி இரண்டு பக்ஷங்கள் உள, அவற்றுள் முதற் பக்ஷங்கூறப்படுகின்றது.

## பிராமணம் 3

**अमावास्यया मासान्त्संपाद्याहरुत्सृजन्त्यमावास्यया हि मासान्त्संपश्य-न्ति ।**

என்பது.

உரை

சந்திரனைப்பார்க்குஞ் சிலர் அமாவாசையால் மாதமுடிவை உறுதிப் படுத்துகின்றனர். இதிலும் அவ்வாறே மாதத்தை முடித்துக்கொண்டு சுக்கில பக்ஷப்பிரதிபகத்தி(பாட்டிமையி)ல் அநுட்டிக்கவேண்டியநாளை விட்டுவிடல் வேண்டும் என்பது.

---

சாந்திரமாதத்தைத் தழுவியே மற்றேந பக்ஷத்தை விதிக்கின்றது

## பிராமணம் 4

**पौर्णमास्या मासान्त्संपाद्याहरुत्सृजन्ति पौर्णमास्या हि मासान्त्संपश्यन्ति ।**

என்பது

உரை

சுக்கிலபக்ஷ பிரதிபதந்தொடங்கி அமாவாசை வரை சாந்திரமாதம் என்பது மேலே போனபக்ஷம். கிருஷ்ண பக்ஷந்தொடங்கி பௌர்ணிமிவரை ஒருமாதம் என்பது இப்பட்சமாம். இதில், கிருஷ்ணபக்ஷ பிரதிபதத்தில் வரும் நாளை விட்டுவிடல் வேண்டும் என்பது.

---

இப்பக்ஷத்தையே புகழ்கின்றது

பிராமணம் 5

यो वै पूर्ण आसिञ्चति परा स सिञ्चति यः पूर्णादुद्चति प्राणमस्मिन्स दधाति यत्पौर्णमास्या मासान्त्संपाद्याहरुत्सृजन्ति संवत्सरायैव तत्प्राणं दधाति तदनु सत्रिणः प्राणन्ति ।

என்பது.

உரை

உலகில் நெய் பால் முதலியன நிறைந்திருக்கும் பாத்திரத்தில் மேலேயும் அதை வார்க்கின்றனர் அது மண்ணில் வழிந்துவிடுகின்றது. அறிவாளியோ, நிறைய இருப்பதில் சிறிது எடுத்துவிட்டு காற்றுப்படும்படி செய்வான் அதுபோல், எசமானர்கள், அவ்வப்பூரணிமையால் அவ்வம்மாதத்தை நிறைவாக்கிக்கொண்டு கிருஷ்ணபட்ச பிரதிபதத்தில் செய்யும் நாளை விட்டுவிடுகின்றார்கள்; அது, வருடசத்திரமாகிய அத்தினத்தில் ஒருமனிதனுக்கு பிராண வாயுவை நிறுவுகின்றதாம். அதைப்பற்றி, சத்திரயாகஞ் செய்யும் எசமானர்களும் மூச்சடைக்காமல் பிழைத்திருக்கின்றார்கள் என்பது.

---

எதிர்மறை வாயிலாக அப்பக்ஷத்தையே புகழ்கின்றது

பிராமணம் 6

यद्‌हर्नोत्सृजेयुर्यथा दृतिरुपनद्धो विपतत्येवꣳ संवत्सरो वि पतेदार्तिमार्छेयुर्यत्पौर्णमास्या मासान्त्संपाद्याहरुत्सृजन्ति संवत्सरायैव तदुदानं दधाति तदनु सत्रिण उदनन्ति नाऽऽर्तिमार्छन्ति ।

என்பது

உரை

கூறிப் போந்த வகையால் நாளைவிட்டுவிடாமல் செய்யில பால் நிறைந்து கட்டுப்பட்ட பாத்திரம் விரிந்து உடைந்துவிடுவதுபோல் வருட சத்திரயாகங் கெடும். எசமானர்களும் இறந்துவிடுவார்கள். அதை நீக்குதற்பொருட்டு நாளை விட்டுவிடில் சம்வத்சரசத்திரயாகப்பாதுகாப்பின் பொருட்டு பிராணன் அசையும்படி செய்ததாகும். இதனால், சத்திரயாகஞ் செய்தவர்கள் மூச்சுவிடுகின்றனர் ஆதலின் துன்பப்படமாட்டார்கள் என்பது.

---

மீண்டும் மற்றொருவகையால் இப்பக்ஷத்தையே புகழ்கின்றது

பிராமணம் 7

पूर्णमासे वै देवानाꣳ सुतो यत्पौर्णमास्या मासान्त्संपाद्याहरुत्सृजन्ति देवानामेव तद्यज्ञेन यज्ञं प्रत्यवरोहन्ति ।

என்பது

உரை

பிரகிருதியில் பூரணிமையில் தேவர்கட்கு சோமரசம் பிழியப்படுகின்றது. இதனால், பௌர்ணமியில் மாதத்தை முடித்துவிட்டு பிந்திய நாளை விட்டுவிடில் தேவர்கள் சம்பந்தமாகிய முன் யாகத்துடன் சேர்ப்பதற்கு இவ் வேள்வியை கீழே இறக்குகின்றார்கள் என்பது.

---

உத்சர்க்கநாளில் மற்றொன்று செய்தல் வேண்டுமென்று விதிக்கின்றது

பிராமணம் 8

वि वा एतद्यज्ञं छिन्दन्ति यत्षडहसंततꣳ सन्तमथाहरुत्सृजन्ति प्राजापत्यं पशुमा लभन्ते प्रजापतिस्सर्वा देवता देवताभिरेव यज्ञꣳ सं तन्वन्ति ।

என்பது

உரை

அபிப்லவ ஆறுநாளான பிருஷ்டிய நாட்களால் சந்ததமாய் நடந்துவந்த எக்ஞத்தை விட்டுவிட்டு நாளை உத்சர்ச்சனஞ் செய்யில் எக்ஞம் விடுபட்டதாகின்றது. அதன்பொருட்டு பிரசாபதீயப்பசுவைக் கொன்று வேட்பார்களாக, பிரசாபதி படைப்பவனாதலின் எல்லாத் தேவதைகளின் வடிவனாவன். இதனால், தேவதைகளாலேயே எக்ஞத்தை இடைவிடாது செய்தவர்களாகின்றார்கள் என்பது.

அதில் செய்யவேண்டிய மற்றொன்றை விதிக்கின்றது

பிராமணம் 9

**यन्ति वा एते सवनाद्येऽहरुत्सृजन्ति तुरीयं खलु वा एतत्सवनं यत्सां-
नाय्यं यत्सांनाय्यं भवति तेनैव सवनान्न यन्ति ।**

என்பது.

உரை

நாளை உத்சர்க்கஞ் செய்கின்றவர்கள் சவனத்திலிருந்து நழுவி விடுகின்றார்கள். காலைச்சவன முதலியன அநுட்டிக்கப்பட்டமையின் அதற்கு உபாயம் யாதெனின்? சாம்நாய்யம் காலைச் சவன முதலிய மூன்றிற்கும் வேறாய் நான்காவதாமாதலின் அதையநுட்டிக்கில் சவனங்களிலிருந்து விடுபடாதவர்களாவார்கள் என்பது.

---

சாம்நாய்யத்தின் பரிசேடம், சோமம்போல் ஒருவர்க்கொருவர் தெரிவித்துக் கொண்டு அருந்தத்தக்கது என விதிக்கின்றது.

பிராமணம் 10

**समुपहूय भक्षयन्त्येतत्सोमपीथा ह्येतर्हि ।**

என்பது

உரை.

விட்டநாளில் முக்கிய சோமம் ஒன்றும் இன்மையின் சோமத்தையும் சாம்நாய்ய சேடத்தையும் அருந்துகின்றனர் என்பது.

---

மீண்டுமொரு காரியத்தை விதிக்கின்றது

பிராமணம் 11

**यथायतनं वा एतेषाᳪं सवनभाजो देवता गच्छन्ति येऽहरुत्सृजन्त्यनुसवनं
पुरोडाशान्निर्वपन्ति यथायतनादेव सवनभाजो देवता अव रुन्धते ।**

என்பது

உரை

உத்சர்க்கநாளில் அதன் சம்பந்தமான சவனத்தை யருந்துந் தேவர்கள் அதில் விருப்பமற்று தமது இடத்திற்குச் சென்றுவிடுகின்றார்கள் அன்று சவனமின்மையின் என்க. அவ்வாறாகாமையின் பொருட்டு அவ் வச்சவனஞ் செய்யுமிடத்தில் புரோடாசங்களைச் செய்தல் வேண்டும். செய்யில், அங்கங்கிருந்து அவற்றை தேவர்கள் அடைகின்றார்கள என்பது.

———

அப்புரோடாசங்களிலுள்ள விசேடத்தை விதிக்கின்றது

பிராமணம் 8

**अष्टाकपालान्प्रातस्सवन एकादशकपालान्माध्यंदिने सवने द्वादशकपा-
लाग्ंस्तृतीयसवने छन्दाग्ंस्येवाऽऽप्त्वाऽव रुन्धते ।**

என்பது

உரை

காலைச் சவனத்தில் எட்டுக் கபாலங்கள், மாத்தியந்தின சவனத்தில் பதினொரு கபாலங்கள், மூன்றாஞ்சவனத்தில் பனனிரண்டு கபாலங்கள் வைத்தல் வேண்டும். முறையே எண்கள் ஒப்பாமாதலின் இவைகளால் காயத்திரி முதலிய சந்தங்கள் அடையப்படுகின்றன என்பது.

———

மீண்டுஞ் செய்யவேண்டிய தொன்றை விதிக்கின்றது

பிராமணம் 9

**वैश्वदेवं चरुं तृतीयसवने निर्वपन्ति वैश्वदेवं वै तृतीयसवनं तेनैव तृतीय-
सवनान्न यन्ति ।**

என்பது

உரை

மூன்றாஞ் சவனம் வைசுவதேவம் என வேறிடத்திற் கூறப்பெற்றிருத்தலின் வைசுவதேவப் பொங்கலைச் செய்யில் மூன்றாஞ் சவனத்திலிருந்தும் நழுகமாட்டார்கள் என்பது.

ஆறுமநுவாகம்

முற்றிற்று.

ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## ஏழாவது அநுவாகம்

*நான்கு பஞ்சாதிக்குமேல் இருபது பதங்களைக் கொண்டது.*

முற்கூறிய உத்சர்க்கத்திலேயே சில விசேடங்களைக் கூறும் பிராமணங்கள்

उत्सृज्यां ३ नोत्सृज्या३मिति मीमाꣳसन्ते ब्रह्मवादिनस्तद्वा-
हुरुत्सृज्यमेवेत्यमावास्यायां च पौर्णमास्यां चोत्सृज्यमित्याहुरेते
हि यज्ञं वहत इति ते त्वाव नोत्सृज्ये इत्याहुर्ये अवान्तरं यज्ञं
भेजाते इति या प्रथमा व्यष्टका तस्यामुत्सृज्यमित्याहुरेष वै मासो
विशर इति नाऽऽदिष्टम् ॥ १९ ॥ उत्सृजेयुर्यदादिष्टमुत्सृजेयुर्या-
दृशे पुनः पर्याप्लावेमध्ये षडहस्य संपद्येत षडहैर्मासान्त्संपाद्य
यत्सप्तममहस्तस्मिन्नुत्सृजेयुस्तदग्नये वसुमते पुरोडाशमष्टाकपालं
निर्वपेयुरैन्द्रं दधीन्द्राय मरुत्वते पुरोडाशमेकादशकपालं वैश्वदेवं
द्वादशकपालमग्नेर्वै वसुमतः प्रातस्सवनं यदग्नयेवसुमते पुरोडाशमष्टाक
पालंनिर्वपन्ति देवतामेव तद्भागिनीं कुर्वन्ति॥२०॥ सवनमष्टाभिरुप
यन्ति यदैन्द्रं दधि भवतीन्द्रमेव तद्भागधेयान्न च्यावयन्तीन्द्रस्य
वै मरुत्वतो माध्यंदिनꣳ सवनं यदिन्द्राय मरुत्वते पुरोडाशमेका
दशकपालं निर्वपन्ति देवतामेव तद्भागिनीं कुर्वन्ति सवनमेकादश-
भिरुप यन्ति विश्वेषां वै देवानामृभुमतां तृतीयसवनं यद्वैश्वदेवं
द्वादशकपालं निर्वपन्ति देवता एव तद्भागिनीः कुर्वन्ति सवनं
द्वादशभिः ॥ २१ ॥ उप यन्ति प्राजापत्यं पशुमा लभन्ते यज्ञो
वै प्रजापतिर्यज्ञस्यानन्नुसर्गायाभिवर्त इतषण्मासो ब्रह्मसामं भवति

ब्रह्म वा अभिवर्तो ब्रह्मणैव तत्सुवर्गं लोकमभिवर्तयन्तो यन्ति प्रति-कूलमिव हीतस्सुवर्गो लोक इन्द्र क्रतुं न आ भर पिता पुत्रेभ्यो यथा । शिक्षा नो अस्मिन्पुरुहूत यामनि जीवा ज्योतिरशीमहीत्य-मुतं आयता॰ षण्मासो ब्रह्मसामं भवत्ययं वै लोको ज्योतिः प्रजा ज्योतिरिममेव तल्लोकं पश्यन्तोऽभिवदन्त आ यन्ति ॥ २२ ॥

नाऽऽदिष्टं कुर्वन्ति द्वादशभिरिति विंशतिश्च । ॥ ७ ॥

இதிலும் உத்சர்க்க நாள் விசேடம் கூறப்படுகின்றது.

அதை உறுதிப்படுத்தற்பொருட்டு ஒருவிசாரத்தைத் தெரிவிக்கின்றது.

பிராமணம் 1

उत्सृज्यां ३ नोत्सृज्या ३ मिति मीमा॰सन्ते ब्रह्मवादिनस्तद्वाहुरुत्सृज्य-मेवेति ।

என்பது.

உரை

நாளை உத்சர்க்கஞ் செய்யும் பக்ஷத்தில் எக்ஞம் கெட்டுப்போகின்றது. உத்சர்க்கஞ் செய்யாவிடில் தலைவன் மூச்சடைக்கின்றது என்பதை மனதில் வைத்துக்கொண்டு பிரமவாதிகள் ஆராய்ச்சிசெய்து, பிரசாபத்திய பசுமுதலானவைகளைக்கொண்டு எக்ஞங் கெடுவதை சமாதானம் பண்ணிக்கொள்ளல் கூடுமாதலின், மூச்சடைப்பதை நீக்குவதற்கு உத்சர்க்கமே செய்தல் வேண்டுமென உறுதிபண்ணினர் என்பது.

---

அந்தநாளை விதிக்கின்றது

பிராமணம் 2

अमावास्यायां च पौर्णमास्यां चोत्सृज्यमित्याहुरेते हि यज्ञं वहत इति ।

என்பது.

உரை

அமாவாசையும் பௌர்ணமியும் எக்ஞத்தை நடாத்துகின்றவைகளென்பது வெளிப்படை. அவ்விரண்டின் நிலைமையில் எந்த எந்த நாள் வருகின்றதோ, அது விடத்தக்கதேயாம் என்பது.

பிறநடைய பக்ஷத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

**ते त्वाव नोत्सृज्ये इत्याहुर्ये अवान्तरं यज्ञं मेजाते इति ।**

என்பது

உரை

அமாவாசை பௌர்ணமிகட்கு இடையிலுள்ள கருமங்களை உத்சர்க்கஞ் செய்தல் கூடாது. இது, பிரகிருதியாகிய தரிசபூரணமாதத்தை மாத்திரம் உண்டாக்குவதன்று, மற்றோ, அயன முதலியவைகளின் இடையிலுள்ள கருமத்தையும் உண்டாக்குகின்றது. ஆதலின், அவ்விரண்டையும் விட்டுவிடுதல் பொருத்தமுடையதன்று என்பது.

---

அற்றேல், எந்நாளில் உத்சர்க்கம் ? என்றசங்கித்து அவைகளின் வாக்கியத்தை விளக்குகின்றது

பிராமணம் 4

**या प्रथमा व्यष्टका तस्यामुत्सृज्यमित्याहुरेष वै मासो विशर इति ।**

என்பது

உரை

,, கிருஷ்ணபக்ஷ பிரதிபத நாள் உத்சர்க்கஞ் செய்யத்தக்கது. அதாவது கிருஷ்ணபக்ஷ பிரதிபதத்தில் வரும் நாள்விடத்தக்கதாம் என்று கூறுகின்றார்கள். பௌர்ணமியில் முன்மாதம் முடிதலின் இத் தினவிசேடம் விசீர்ண மாதமெனப்படும். இதனால் மாதம் விட்டுப் போதலின்மையின் இது பொருத்தமாம் என்பது.

---

ஒரு உத்சர்க்கத்தை விளக்குகின்றது

பிராமணம் 5

**नाऽऽदिष्टमुत्सृजेयुः ।**

என்பது

உரை

விஷுவான் மகாவிரதம் என நாமத்துடன் சிறப்பித்துக் கூறுவது ஆதிஷ்டம் எனப்படும் ; அது விடத்தக்கதன்று ஆறுநாள் வாயிலாக பொதுவாக வந்ததே உத்சர்க்கஞ் செய்யத் தக்கது. அல்லது உத்சர்க்கமில்லாதபக்ஷமே, 'ஏஷவைமாஸ: என்பது முதலியதால் கொள்ளற்பாலதாம்

நாளை விட்டுவிடுவதால் மாதம் நிறையாமையின் மாதம் விசீர்ணமாம். இதனால் நாளைவிட்டுவிடின் மாதம் குறைவுபடுதலின் சாத்திரஞ் சொன்ன நாளை உத்சர்க்கஞ் செய்தல் கூடாது என்னும் பக்ஷத்தைக் கொள்ளவும். இதுவே சூத்திரக்காரர் கருத்துமாம் என்பது.

---

அத்தகைய இவ்விசேடத்தைக் கூறுவதற்கு உத்சர்க்க பக்ஷத்தை மீண்டும் விதிக்கின்றது.

பிராமணம் 6

**यद्यादिशमुत्सृजेयुर्यादशे पुनः पर्याप्लावे मध्ये षडहस्य संपद्येत षडहैर्मासान्त्संपाद्य यत्सप्तममहस्तस्मिन्नुत्सृजेयुः ।**

என்பது

உரை

சாத்திரத்திற்கூறியபகையும் விடல் வேண்டுமெனில், சோதி முதலியன ஆவிருத்தி செய்யும்போது உண்டாகும் ஆறுநாளில் நடுவில் வருவதை விட்டுவிடல்வேண்டும். பிரதிபதக்கில் வரும் விஷூமுதலிய நாட்கள் விடத்தக்கவைகளல்ல என்பதை வருவித்துக்கொள்க. அபிப்லவ ஆறுநாள் என்னும் ஆறுநாட்களால் மாதத்தை நிறைவாக்கிக்கொண்டு பிருஷ்டிய ஆறுநாட்கு மேல் வரும் ஏழாம்நாளில் செய்யவேண்டிய சோதியாகத்தை விட்டுவிடல் வேண்டும் என்பது.

---

இவ்வாறு உத்சர்கத்தை விரித்துக்கூறிவிட்டு அதில் அநுட்டிக்கத்தக்க விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம் 7

**तदग्नये वसुमते पुरोडाशमष्टाकपालं निर्वपेयुरैन्द्रं दधीन्द्राय मरुत्वते पुरोडाशमेकादशकपालं वैश्वदेवं द्वादशकपालम् ।**

என்பது

உரை

அத்தினத்தில். வசுமானாகிய அக்கினியின் பொருட்டு எட்டுக்கபாலப் புரோடாசம், இந்திரனுக்குத் ததிர், மருத்துவனாகிய இந்திரனுக்கு பதினொரு கபால புரோடாசம், வைசுவ தேவர்கட்கு பன்னிரண்டு கபாலப் புரோடாசம் என நான்கு அவிகளையுஞ் செய்வார்களாக என்பது.

அவற்றுள் முதலாவது அவியைப் புகழ்கின்றது

பிராமணம் 8

**अग्नेर्वै वसुमतः प्रातस्सवनं यदग्नये वसुमते पुरोडाशमष्टाकपालं निर्वपन्ति देवतामेव तद्भागिनीं कुर्वन्ति सवनमष्टाभिरुप यन्ति ।**

என்பது

உரை

அக்கினி தனமுடையதாம். காலைச் சவனத்தில் வசுமானாகிய அக்கினிக்கு எட்டுக் கபாலங்களை வைத்துப் புரோடாசஞ் செய்கின்றவர்கள் வசுமானாகிய அக்கினியையே பாகமுடையதாகச் செய்கின்றார்கள். இதனால், எட்டெழுத்துக்களையுடைய காயத்திரிவாயிலாகச் சவனத்தையுமடைகின்றார்கள் என்பது.

---

இரண்டாவது அவியைப் புகழ்கின்றது

பிராமணம் 9

**यदैन्द्रं दधि भवतीन्द्रमेव तद्भागधेयान्न च्यावयन्ति ।**

என்பது

உரை

இந்திரனுடைய தயிரைச் செய்கின்றவர்கள் அவனுடைய பாகதேயத்தைக் கொடுத்தலால் நழுவிவிடமாட்டார்கள் என்பது.

---

மூன்றாம் அவியைப் புகழ்கின்றது

பிராமணம் 10

**इन्द्रस्य वै मरुत्वतो माध्यंदिनꣳ सवनं यदिन्द्राय मरुत्वते पुरोडाशमेकादशकपालं निर्वपन्ति देवतामेव तद्भागिनीं कुर्वन्ति सवनमेकादशाभिरुप यन्ति ।**

என்பது

உரை

மருத்துவானாகிய இந்திரன் மாத்தியந்தின சவனத்திற்குத் தலைவனாவன்; அத்தகைய மருத்துவானாகிய இந்திரனுக்கு பதினொரு கபாலங்களில் புரோடாசஞ் செய்கின்றவர்கள் மருத்துவானாகிய இந்திரனுக்குப் பாகதேயத்தை

யளிக்கின்றார்கள். இதனால், பதினொரு எழுத்துக்களைக் கொண்ட திருஷ்டுப் சந்தவாயிலாக சவனத்தையடைகின்றார்கள் என்பது.

---

நான்காம் அவியைப் புகழ்கின்றது

பிராமணம் 11

विश्वेषां वै देवानामृभुमतां तृतीयसवनं यद्वैश्वदेवं द्वादशकपालं निर्वप-न्ति देवता एव तद्भागिनीः कुर्वन्ति सवनं द्वादशभिरुप यन्ति ।

என்பது

உரை

ருபுமான்களான வைசுவதேவர்கள் மூன்றாஞ் சவனத்தின் சுவாமிகள். அவர்கட்கு, பன்னிரண்டுகபாலங்களில் புரோடசஞ் செய்யில் அவர்களைப் பாகமுடையவர்களாக்குகின்றார்கள். இதனால், பன்னிரண்டு எழுத்துங்களை யுடைய சகதிச் சந்தவாயிலாக சவனத்தையடைகிடைகின்றார்கள் என்பது.

---

முன், அநுவாகத்திற்கூறிய பிராசாபத்தியத்தைப் புகழ்கின்றது.

பிராமணம் 12

प्राजापत्यं पशुमा लभन्ते यज्ञो वै प्रजापतिर्यज्ञस्याननुसर्गाय ।

என்பது

உரை

பிரசாபதிக்குரிய பசுவைக்கொன்று வேட்கில் உத்சர்க்கநாளிலும் பிராசாபத்தியமாதலால் எக்ஞம் விடுபடாததேயாகும் என்பது.

---

பூர்வபக்ஷத்தில் பிரமசாமத்தை விதிக்கின்றது.

பிராமணம் 13

अभिवर्त इतष्षण्मासो ब्रह्मसामं भवति ब्रह्म वा अभिवर्तो ब्रह्मणैव तत्सु-वर्गं लोकमभिवर्तयन्तो यन्ति प्रतिकूलमिव हीतस्सुवर्गो लोकः ।

என்பது

உரை

கவாமயனத்தின் விகிருதியாமாதலின் 'உத்சர்க்கிணுமயனத்திற்கும் இரண்டு பக்ஷங்களுண்டு. அவற்றுள் முதல் பக்ஷத்தால் சுவர்க்கமடையப் படுகின்றது இரண்டாவதுபக்ஷத்தால் மீண்டும் பூலோகமடையப்படுகின்றது. இவ்வாறுகும்போது பூலோகத்திலிருந்து சுவர்க்கம் போகின்ற எசமானர் கட்கு அநுகூலமாக முதல் ஆறுமாதங்களும் ஒவ்வொருநாளும் பிரமசாமத் தைப் பாடல்வேண்டும். அபிவர்த்த சாமம் பிரமரூபமாதலின் அதன் வலி யால் சுவர்க்கததை நோக்கிப போகின்றவர்களாய்ச் சுவர்க்கத்தையடைகின் ருர்கள் என்பது.

---

உத்தரபக்ஷத்திற்கு பிரமசாமத்தை விதிக்கின்றது

பிராமணம் 14

इन्द्र क्रतुं न आ भर पिता पुत्रेभ्यो यथा। शिक्षा नो अस्मिन्पुरुहूत यामनि जीवा ज्योतिरशीमहीत्यमुत आयतां षण्मासो ब्रह्मसामं भवत्ययं वै लोको ज्योतिः प्रजा ज्योतिरिममेव तल्लोकं पश्यन्तोऽभि-वदन्त आ यन्ति।

என்பது

உரை

சுவர்க்கலோகத்திலிருந்து பூலோகத்திற்கு வருகின்ற வேள்வித் தலைவர் களுக்கு அநுகூலமாக உத்தரபக்ஷம் ஆறுமாதமும் நாடோறும் "இந்திரக்ர தும்,, என்பது முதலிய இருக்கிலுண்டாகும் பிரமசாமத்தைப் பாடல்வேண் டும். அதன்பொருள் :— இந்திர! தந்தை, மக்கட்கு பாகங்கொண்டுவந்து கொடுப்பதுபோல் எமது கிருதுவைப் பெற்றுக்கொள்வாயாக. புருகூத! அநுட்டிக்கப்படும் இவ்வேள்வி விசேடத்தில் நல்ல உபதேசஞ் செய்வாயாக. யாம் உனது உபதேசத்தால் பிரகாசமாகிய மனிதவுலகை 'யடைகின்றோம் என்பது. இத்தகைய சாமப்பிரயோகத்தால் பூலோகத்தை ஒளியால் பார்த் துக் கொண்டும். அடைகின்றோம் என வாயாற் சொல்லிக்கொண்டும் அடை கின்றுர்கள் என்பது

ஏழாமநுவாகம்
முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## எட்டாவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்குமேல் பதினொரு பதங்களைக்கொண்டது

மஹாவிரதத்தில் உள்ள சாம விசேடங்களை விதிக்கும் பிராமணங்கள்.

देवानां वा अन्तं जग्मुषामिन्द्रियं वीर्यमपाक्रामत्तत्क्रोशेनावा-
रुन्धत तत्क्रोशस्य क्रोशत्वं यत्क्रोशेन चात्वालस्यान्ते स्तुवन्ति
यज्ञस्यैवान्तं गत्वेन्द्रियं वीर्यमव रुन्धते सत्रस्यर्ध्याऽऽहवनीयस्या-
न्ते स्तुवन्त्यग्निमेवोपद्रष्टारं कृत्वर्धिमुप यन्ति प्रजापतेर्हृदयेन हवि-
र्धानेऽन्तस्स्तुवन्ति प्रेमाणमेवास्य गच्छन्ति श्लोकेन पुरस्तात्सदसः
॥ २३ ॥ स्तुवन्त्यनुश्लोकेन पश्चाद्यज्ञस्यैवान्तं गत्वा श्लोकभाजो
भवन्ति नवभिरध्वर्युरुद्गायति नव वै पुरुषे प्राणाः प्राणानेव यज-
मानेषु दधाति सर्वा ऐन्द्रियो भवन्ति प्राणेष्वेवेन्द्रियं दधत्यप्रति-
हृताभिरुद्गायति तस्मात्पुरुषः सर्वाण्यन्यानि शीर्ष्णोऽङ्गानि प्रत्यञ्चति
शिर एव न पञ्चदशꣳ रथंतरं भवतीन्द्रियमेवाव रुन्धते सप्तदशम्
॥ २४ ॥ बृहदन्नाद्यस्यावरुद्ध्या अथो प्रैव तेन जायन्त एकविꣳशं
भद्रं द्विपदासु प्रतिष्ठित्यै पत्नय उप गायन्ति मिथुनत्वाय प्रजात्यै
प्रजापतिः प्रजा असृजत सोऽकामयताऽऽसामहꣳ राज्यं परीया-
मिति तासाꣳ राजनेनैव राज्यं पर्यैत्तद्राजनस्य राजनत्वं यद्राजनं
भवति प्रजानामेव तद्यजमाना राज्यं परि यन्ति पञ्चविꣳशं
भवति प्रजापतेः ॥ २५ ॥ आप्त्यै पञ्चभिस्तिष्ठन्तः स्तुवन्ति देव-
लोकमेवाभि जयन्ति पञ्चभिरासीना मनुष्यलोकमेवाभि जयन्ति
दश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्विराजैवान्नाद्यमव रुन्धते
पञ्चधा विनिषद्य स्तुवन्ति पञ्च दिशो दिक्ष्वेव प्रति तिष्ठन्त्यैकै-

कयाऽस्तुत्या समायन्ति दिग्भ्य एवान्नाद्यꣳ सं भरन्ति ताभिरुद्गा-तोद्गायति दिग्भ्य एवान्नाद्यम् ॥ २६ ॥ संभृत्य तेज आत्मन्दधते तस्मादेकः प्राणस्सर्वाण्यङ्गान्यवत्यथो यथा सुपर्ण उत्पतिष्य-ञ्छिर उत्तमं कुरुत एवमेव तद्यजमानाः प्रजानामुत्तमा भवन्त्या-सन्दीमुद्गाताऽऽरोहति साम्राज्यमेव गच्छन्ति प्लेङ्खꣳ होता ना-कस्यैव पृष्ठꣳ रोहन्ति कूर्चावध्वर्युर्ब्रध्नस्यैव विष्टपं गच्छन्त्येतावन्तो वै देवलोकास्तेष्वेव यथापूर्वं प्रति तिष्ठन्त्यथो आक्रमणमेव तत्सेतुं यजमानाः कुर्वते सुवर्गस्य लोकस्य समष्ट्यै ॥ २७ ॥ सदसः सप्तदशं प्रजापतेर्गायति दिग्भ्य एवान्नाद्यं प्रत्येकादश च । ॥ ८ ॥

இதில், பிரகிருதியிலுள்ள மகாவிரதத்தின் விசேடங்கள் மூன்று அநுவாகங்களாற் கூறப்படுகின்றன. அவற்றுள், இதிற் சில சாமவிசேடங்கள் கூறப்படுகின்றன.

குரோசம் என்னுஞ் சாமத்தை விதிக்கின்றது

பிராமணம் 1

देवानां वा अन्तं जग्मुषामिन्द्रियं वीर्यमपाक्रामत्तत्क्रोशेनावारुन्धत तत्क्रो-शस्य क्रोशत्वं यत्क्रोशेन चात्वालस्यान्ते स्तुवन्ति यज्ञस्यैवान्तं गत्वे-न्द्रियं वीर्यमव रुन्धते ।

என்பது

உரை

முன்னொருகால் சத்திரயாகஞ்செய்து முடிவுபண்ணிய தேவர்களுடைய இந்திரியங்களும் அவற்றின் வன்மையும் போய்விட்டன. அவற்றை, குரோசம் என்னுஞ்சாமப்பாடலால் மீண்டும் பெற்றுக்கொண்டனர். குரோசம் = களிப்பித்தல். அழைத்தற்குச் சாதனமாம். ஆதலின், போய்விட்ட வீரியத்தை மீண்டும் வரவழைத்தலால் இச்சாமப்பாடலுக்கு குரோசம் எனப்பெயர்வந்தது. இச்சாமத்தை மண்வெண்டுக்குமிடத்திலிருந்து (சாத்துவாலத்திலிருந்து) பாடுவார்களாக. அதனால் இந்திரியவன்மையுடன் எக்ஞத்தையுமடைவார்கள் என்பது.

சத்திரஸ்யர்தி என்னும் மற்றொரு சாமத்தை விதிக்கின்றது.

பிராமணம் 2

सत्रस्यर्ध्याऽऽहवनीयस्यान्ते स्तुवन्त्यग्निमेवोपद्रष्टारं कृत्वर्धिमुप यन्ति ।

என்பது.

உரை

'சத்திரஸ்யர்தி, என்னுஞ் சாமத்தை ஆகவனீயத்திற் கருகிலிருந்து கொண்டு பாடுவார்களாக பாடில் அக்கினியையே சாட்சியாகவைத்துக் கொண்டுபாடியதாகும். அதனால் நிறைந்த சம்பத்தையடைகின்றார்கள் என்பது.

---

மற்றொரு சாமத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

प्रजापतेर्हृदयेन हविर्धानेऽन्तस्स्तुवन्ति प्रेमाणमेवास्य गच्छन्ति ।

என்பது

உரை

" பிரசாபதி இருதயம்,, என்னுஞ் சாமத்தை, அவிர்த்தான மண்டத்திற்குள்ளிருந்துகொண்டு பாடுவார்களாக. பாடில், அதனால் பிரசாபதியினுடைய பிரியத்தையடைகின்றார்கள் என்பது.

---

மற்றிரண்டு சாமங்களை விதிக்கின்றது

பிராமணம் 4

श्लोकेन पुरस्तात्सदसस्स्तुवन्त्यनुश्लोकेन पश्चाद्यज्ञस्यैवान्तं गत्वा श्लोकभाजो भवन्ति ।

என்பது

உரை

சுலோகம், அநுசுலோகம் என்னும் இரண்டு சாமப்பாடல்களையும் சபையின் இரண்டுபக்கங்களிலிமிருந்து பாடுவார்களாக. அதனால் எக்ஞம் இனிது முடிவதுடன் கீர்த்தியையும் அடைகின்றார்கள் என்பது.

---

ஒரு விசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம் 5

**नवभिरध्वर्युरुद्गायति नव वै पुरुषे प्राणाः प्राणानेव यजमानेषु दधाति ।**

என்பது

உரை

இச்சாமத்திற்கு ஆதாரமாகிய துதிஇருக்குக்கள் ஒன்பதாம். பாடுகின்றவன் அத்வரியுவாவவன் உக்காதா அல்லன். மனிதனுடைய உடம்பில் ஒன்பது துளைகளிருத்தலின் பிராணனும் ஒன்பதாமாதலின் அவைகளை எசமானனிடத்தில் நிறுவுகின்றான் என்பது.

---

அந்த இருக்குக்களில் சிலவிசேடத்தை விதிக்கின்றது.

பிராமணம் 6

**सर्वा ऐन्द्रियो भवन्ति प्राणेष्वेवेन्द्रियं दधाति ।**

என்பது

உரை

இந்திரனையே தேவதையாகவுடைய ஒன்பது இருக்குக்களையும் பாடல் வேண்டும். அதனால் பிராணனிடத்தில் வன்மையை நிறுவுகின்றான் என்பது.

---

அவ்விருக்குக்களில் "பிரதிஹாரம்,, என்னும்பகுதியை பாடுதல் கூடாதென்கின்றது

பிராமணம் 7

**अप्रतिहृताभिरुद्गायति तस्मात्पुरुषस्सर्वाण्यन्यानि शीर्ष्णोऽङ्गानि प्रत्यञ्चति शिर एव न ।**

என்பது

உரை

இருக்கில் பாடவேண்டிய சாமத்திற்கு, ஹிங்காரம், பிரஸ்தாவம், உத்கீதம் பிரதிஹாரம், நிதனம் என ஐந்துபாகங்கள் உள. அவற்றுள், பிரதிஹாரம் என்னும் பாகத்தைவிட்டுவிட்டு ஒன்பது இருக்குக்களாலும் பாடல் வேண்டும். ஏனெனின்? தலை யொழிந்த ஏனைய கைகால் முதலான அங்கங்கள் மடக்கவும் நீட்டவும் வருகின்றன. தலையோ, அவ்வாறு வருவதில்லை. அதுபோல் இது தலையாம். அதாவது பிரதிஹாரம் விட்டுவிடத்தக்கது என்பது.

அத்தகைய் பாடலுக்கு பக்கங்களில் இரண்டுஸ்தோமங்களுடன்கூடிய இரண்டு சாமங்களை விதிக்கின்றது.

பிராமணம் 8

**पञ्चदशꣳ रथंतरं भवतीन्द्रियमेवाव रुन्धते सप्तदशं बृहदन्नाद्यस्याव-रुद्ध्या अथो प्रैव तेन जायन्ते ।**

என்பது

உரை

பதினைந்து ஸ்தோமங்களுடன்கூடிய ரதந்தரமென்னும் சாமம் ஒரு பக்கத்தில பாடல் வேண்டும். அதனால் பதினைந்துஸ்தோமம் இந்திரனுடன் உண்டானதால் இந்திரியங்கிடைக்கின்றது. பதினேழு ஸ்தோமத்துடன்கூடிய பிருகத் என்னுஞ் சாமம் மற்றொரு புறத்தில் பாடல் வேண்டும். பதினேழு துதிகள் அன்னம் பிரசை என்பவைகளையடையக் காரணமாதலின் அவைகளால் அவை அடையப்படுகின்றன. பறவைகட்கு இரண்டு சிறகுகள் போன்று இரண்டு பாடல்கள் என்பதை யுணர்க என்பது.

---

இருக்குவிசேடங்களுள், ஸ்தோமம் சாமம் என்னுமிவற்றின் விசேடங்களை விதிக்கின்றது

பிராமணம் 9

**एकविꣳशं भद्रं द्विपदासु प्रतिष्ठित्यै ।**

என்பது

உரை

இருபத்தொன்று ஸ்தோம விசேடம், பத்திரம் ஒரு சாமவிசேடமாம். இரண்டு பாதங்களுடன்கூடிய இருக்கு துவிபதங்கள் எனப்படுகின்றது இதனால் நிலைமையுண்டாகின்றது என்பது.

---

பத்திரம் என்னுஞ்சாமத்திற்கருகில் பத்தினிகானத்தை விதிக்கின்றது.

பிராமணம் 10

**पत्नय उप गायन्ति मिथुनत्वाय प्रजात्यै ।**

என்பது

உரை

எசமானனுடைய பத்தினிமார்கள், பத்திரம் என்னுஞ் சாமத்தைப் பாடும்போது அருகிலிருந்து சாமம் பாடுவார்களாக. ஆண்பெண் என்னும் இருவருடைய பாடல்களால புணர்ச்சியாம். அதனால் புத்திரப்பேறு உண்டாகின்றது என்பது.

---

மற்றொருசாமத்தை விதிக்கின்றது

பிராமணம் 11

प्रजापतिः प्रजा असृजत सोऽकामयताऽऽसामहꣳ राज्यं परीयामिति ताःसाꣳ राजनेनैव राज्यं पर्यैत्तद्राजनस्य राजनत्वं यद्राजनं भवति प्रजानामेव तद्यजमाना राज्यं परि यन्ति ।

என்பது.

உரை

பிரசாபதி பிரசைகளைப்படைத்தனன். படைத்து அவைகளின் இராச்சியத்தையடையவிரும்பி 'ராசனம்' என்னும் சாமப்பாடலால் இராச்சியத்தையடைந்தனன். ராச்சியத்தைக் கொடுத்தலால் ராசனம். ஆதலின் ராசனம் என்னுஞ் சாமத்தைப்பாடுகின்றவர்கள் இராச்சியத்தையடைகின்றார்கள் என்பது.

---

அதில் ஸ்தோம விசேடத்தை விதிக்கின்றது

பிராமணம் 12

पञ्चविꣳशं भवति प्रजापतेराप्त्यै ।

என்பது.

உரை

இருபத்தைந்து ஸ்தோமங்களாகின்றன. இது பிரசாபதியால் படைத்தலால் இதனால் பிரசாபதியை யடைகின்றனன் என்பது.

---

மற்றொரு விசேடத்தை விதிக்கின்றது

### பிராமணம் 13

**पञ्चभिस्तिष्ठन्तस्स्तुवन्ति देवलोकमेवाभि जयन्ति पञ्चभिरासीना मनु-
ष्यलोकमेवाभि जयन्ति दश सं पद्यन्ते दशाक्षरा विराडन्नं विराड्-
विराजैवान्नाद्यमव रुन्धते ।**

என்பது

உரை

முதலாவது ஐந்து துதிகளை நின்றுகொண்டு படித்தல் வேண்டும். இரண்டாவது ஐந்தை உட்கார்ந்து கொண்டு படித்தல் வேண்டும். இதனால் இரண்டுலகமும் அடையப்படுகின்றன. பத்தெழுத்துக்கள் கொண்ட விராட் சந்தமும் அடையப்படுகின்றது என்பது.

---

உட்கார்ந்து பாடுவதில் ஒரு விசேடத்தை விதிக்கின்றது

### பிராமணம் 14

**पञ्चधा विनिषद्य स्तुवन्ति पञ्च दिशो दिक्ष्वेव प्रति तिष्ठन्ति ।**

என்பது.

உரை

ஐவகையிடங்களிலும் பெருமையையடைகின்றார்கள் என்பது. அதாவது மேல்வெளியுடன் ஐந்து திசைகளிலும் பெருமையை யடைகின்றார்கள் என்பது.

---

மற்றொரு விசேடத்தை விதிக்கின்றது

### பிராமணம் 15

**एकैकयाऽस्तुतया समायन्ति दिग्भ्य एवान्नाद्यꣳ सं भरन्ति ।**

என்பது

உரை

ஐந்துவகையான இடவிசேடங்களுள் உத்காதா உட்கார்ந்துகொண்டு செய்வானாகில் ஏனையவர்களும் துதியால் அவனிடத்தில் வந்து உட்காருகின்றனர். இவ்வாறு ஒவ்வொரு விடத்திலும் முதலில் உத்காதா உட்காரும்போது அந்த இருக்கின் துதியின் பொருட்டு எல்லாரும் உத்காதாவையடைகின்றார்கள். இவ்வண்ணஞ் செய்யும்போது எல்லாத் திக்குக்களிலும் உணவுப் பொருளைத் தேடியடைகின்றார்கள் என்பது.

அன்னியர்கள் வந்தவுடன் உத்காதா செய்யவேண்டியதை விதிக்கின்றது.

பிராமணம் 16

**ताभिरुद्गातोद्गायति दिग्भ्य एवान्नाद्यꣳ संभृत्य तेज आत्मन्दधते तस्मादेकः प्राणः सर्वाण्यङ्गान्यवत्यथो यथा सुपर्ण उत्पतिष्यञ्छिर उत्तमं कुरुत एवमेव तद्यजमानाः प्रजानामुत्तमा भवन्ति ।**

என்பது.

உரை

எந்தத் துதியைக் குறித்து உத்காதாவை யடைகின்றார்களோ, அத்துதியால் உத்காதா பாடல் வேண்டும். அவ்வாறுபாடில், திசைகளில் தேடிய அன்னமாகிய ஒளியை அனைவரும் தமதான்மாவின்கண் நிறுவுகின்றனர். எல்லாரும் உட்கார்ந்திருக்கும்போது உத்காதாஒருவனே பாடுகின்றானாதலின் உடம்பின் நடுவில் இருந்துகொண்டு ஒரே பிராணன் எல்லா அங்கங்களையும் பாதுகாக்கின்றது. மற்றும், பறவைவிசேடம் வானில் பறந்துபோய் தலையை நிமிர்ப்பதுபோல் உத்காதாவின் பாடலால் பிரசைகளுக்குள் எசமானர்கள் உயர்ந்தவர்களாகின்றனர் என்பது.

---

மூன்று இருத்துவிக்குக்களின் ஆதாரவிசேடங்களை விதிக்கின்றது.

பிராமணம் 17

**असन्दीमुद्गाताऽऽरोहति साम्राज्यमेव गच्छन्ति प्लेङ्खꣳ होता नाकस्यैव पृष्ठꣳ रोहन्ति कूर्चावध्वर्युर्ब्रध्नस्यैव विष्टपं गच्छन्त्येतावन्तो वै देवलोकास्तेष्वेव यथापूर्वं प्रति तिष्ठन्त्यथो आक्रमणमेव तत्सेतुं यजमानाः कुर्वते सुवर्गस्य लोकस्य समष्ट्यै ।**

என்பது

உரை

உத்காதா நாற்காலியின்மீது ஏறுதலால் எல்லா எசமானர்களும் சாம்ராச்சியத்தையடைகின்றார்கள். ஹோதா தொட்டில்மீது ஏறில், எல்லோரும் சுவர்க்கத்தையடைகின்றார்கள். அத்வர்யு கூர்ச்சத் (தருப்பைவிசேடத)தில் ஏறில் அனைவரும் சூரியனுடைய இடத்தையடைகின்றார்கள். இம்மூன்று பதவிகளே தேவலோகத்தில் விருப்புடையவைகளாம் முறையாய் அவைகளை யடைகின்றார்கள். மற்றும், அவ்வாறு ஏறுதலால் சுவர்க்கமாகிய கடலுக்குப் பாலங்கட்டுகின்றதாகும். அது சுவர்க்கத்தையடைவதற்கு உதவியாம் என்பது.

எட்டாநுவாகம்
முற்றிற்று

## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## ஒன்பதாவது அநுவாகம்

*மூன்று பஞ்சாதிக்குமேல் முப்பது பதங்களைக் கொண்டது.*

நூறு கம்பிகளையுடைய வீணை வாசித்தல் முதலியதைக் கூறும் பிராமணங்கள்.

अर्क्येण वै सहस्रशः प्रजापतिः प्रजा असृजत ताभ्य इलान्देनेरां
लूतामवारुन्ध यदर्क्यं भवति प्रजा एव तद्यजमानाः सृजन्त इला-
न्दं भवति प्रजाभ्य एव सृष्टाभ्य इरां लूतामव रुन्धते तस्माद्याꣳ
समाꣳ सत्त्रꣳ समृद्धं क्षोधुकास्ताꣳ समां प्रजा इषꣳ ह्यासामूर्जमा-
ददते याꣳ समां व्यृद्धमक्षोधुकास्ताꣳ समां प्रजाः ॥२८॥ न ह्या-
सामिषमूर्जमाददत उत्क्रोदं कुर्वते यथा बन्धान्मुमुचाना उत्क्रोदं
कुर्वत एवमेव तद्यजमाना देवबन्धान्मुमुचाना उत्क्रोदं कुर्वत इष-
मूर्जमात्मन्दधाना वाणश्शततन्तुर्भवति शतायुः पुरुषः शतेन्द्रिय
आयुष्येवेन्द्रिये प्रति तिष्ठन्त्याजिं धावन्त्यनभिजितस्याभिजित्यै
दुन्दुभीन्त्स माघ्नन्ति परमा वा एषा वाग्या दुन्दुभौ
परमामेव ॥ २९ ॥ वाचमव रुन्धते भूमिदुन्दुभिमा घ्न-
न्ति यैवेमां वाक्प्रविष्टा तामेवाव रुन्धतेऽथो इमामेव जयन्ति सर्वा
वाचो वदन्ति सर्वासां वाचामवरुद्ध्या आर्द्रे चर्मन्व्यायच्छेते
इन्द्रियस्यावरुद्ध्या आऽन्यः क्रोशति प्रान्यः शꣳसति य आक्रो-
शति पुनात्येवैनान्त्स यः प्रशꣳसति पूतेष्वेवान्नाद्यं दधात्यृषिकृतं
च ॥ ३० ॥ वा एते देवकृतं च पूर्वैर्मासैरव रुन्धते यद्भूतेच्छ-
दाꣳ सामानि भवन्त्युभयस्यावरुद्ध्यै यन्ति वा एते मिथुनाद्ये
संवत्सरमुपयन्त्यन्तर्वेदि मिथुनौ सं भवतस्तेनैव मिथुनान्न यन्ति

வீணைவாசித்தல்)

॥ ३१ ॥ व्यृद्धमक्षोधुकास्ताꣳ समां प्रजाः परमामेव च त्रिꣳ-शच्च । ॥ ९ ॥

இதில், நூறு கம்பிகளையுடைய வீணை வாசித்தல் முதலியன கூறப் படுகின்றன.

அதில் இரண்டு சாமங்களை விதிக்கின்றது.

பிராமணம் 1

अर्क्येण वै सहस्रशः प्रजापतिः प्रजा असृजत ताभ्य इलान्देनेरां लूताम-वारुन्ध यदर्क्यं भवति प्रजा एव तद्यजमानास्सृजन्त इलान्दं भवति प्रजाभ्य एव सृष्टाभ्य इरां लूतामव रुन्धते तस्माद्याꣳ समाꣳ सत्रꣳ-समृद्धं क्षोधुकास्ताꣳ समां प्रजा इषꣳ ह्यासामूर्जमाददते याꣳ समां व्यृद्धमक्षोधुकास्ताꣳ समां प्रजा न ह्यासामिषमूर्जमाददते ।

என்பது

உரை

முன், பிரசாபதியானவன் அர்க்கியம் என்னும் ஒரு சாம விசேடத்தால் பல்வகையான உயிர்களைப்படைத்தனன். பிறகு,'இலாந்தம்' என்னுஞ் சாமத் தால், உண்டாக்கிய பிரசைகட்குக் கிடைக்காத உணவுப் பொருள்களை மீண் டுந் தேடினன். ஆதலின், அதைப்போல் எசமானர்களும் இவ்விரண்டு சாமங் களால் உயிர்களையுண்டாக்கி அவைகட்கு உணவுப் பொருள்களையுந் தேடு கின்றார்கள். சாமத்தால் அன்னந் தேடப்படுவதாலும், எப்போதும் சத்ரயா கம் சம்பத்துடையதாமாதலானும் அத்தகைய சாமசத்ரயாகத்தைக் குறித்து பசியால் வாடின உயிர்கள் இதில் வந்து சேர்கின்றன. சத்ரயாகஞ் செய் தவர்கள் அவைகட்கு பல்வகையான இரசங்கள் உணவுப்பொருள்களைத் தேடிக்கொடுக்கின்றனர். எவ்வருடத்தில் சம்பத்துநிறைந்த சத்திரயாகத் தைச் செய்யவில்லையோ, அவ்வருடத்தில் பசி மிகுந்தவர்கள் ஒருவரும் வரு கின்றிலர். ஆதலின், நெல் முதலிய உணவுப் பொருள்களும் அவ்வருடத்தில் பால் முதலிய இரசமுந்தேடிக் கொடுக்கிறதில்லை என்பது.

---

அநுட்டிக்கவேண்டிய மற்றொன்றை விதிக்கின்றது

பிராமணம் 2

उत्क्रोदं कुर्वते यथा बन्धान्मुमुचाना उत्क्रोदं कुर्वत एवमेव तद्यजमाना-देवबन्धान्मुमुचाना उत्क्रोदं कुर्वत इषमूर्जमात्मन्दधानाः ।

என்பது.

உரை

எல்லா எசாமானர்களும் சத்ரயாகம் முடிந்ததால் களிப்புற்று பேரிரைச்சலிட்டல் வேண்டும். எப்படியெனின்? விலங்கு போடப்பட்டு பலகாலம் தன் புற்றுக் கிடந்தவன் அவ்விலங்கு விடுபடில் களிப்புற்று பேரிரைச்சலிடுவது போல்என்க. இவ்வாறே, நெடுநாள் சத்ரயாகமாகிய தேவபந்தத்திலிருந்த எசமானர்கள் சத்ரயாகஞ் செய்த வலியால் அன்னத்தையும் இரசத்தையும் தம தான்மாவில் தேடிக்கொள்ளுங் களிப்புமிகுதியால் பேரிரைச்சலிடுகின்றனர் என்பது.

---

நூறு நூல்கள் கட்டிய வீணையை விதிக்கின்றது.

பிரமணம் 3

**वाणश्शततन्तुर्भवति शतायुः पुरुषश्शतेन्द्रिय आयुष्येवेन्द्रिये प्रति तिष्ठन्ति ।**

என்பது

உரை

அத்தி மரத்தாற்செய்த வீணைத்தண்டத்தில் பத்துப்பத்தாக நூறு முஞ்சம்புல்லுகளால் திரித்தக்கயிறுகளைப் பரப்பியிழுத்துக் கட்டுதல் சதவாணம் எனப்படும். பத்து இந்திரியங்களும் பத்து நாடிகளின் விருத்தி பேதங்களால் நூறுகின்றன. ஒரு மனிதனுடைய வயதும் நூறும் ஆதலின் நூறு இந்திரியங்களாகிற ஆயுளில் நிலைக்கின்றார்கள் என்பது.

---

உற்சாகமடைந்த எசமானர்கட்கு ஒரு அளவைக் கற்பித்து அதுவரை ஓடல் வேண்டும் என்பதை விதிக்கின்றது.

பிரமாணம் 4

**आजिं धावन्त्यनभिजितस्याभिजित्यै ।**

என்பது

உரை

அம்பைவிட்டுக்கொண்டே ஓடுதல் ஆஜி தாவனமாம். அது முன் தேடாத பயனையடையும் வரை ஓடுதல் வேண்டும்; அதைத் தேடுதற் பொருட்டே ஓடுதலாம் என்பது.

---

வீணைவாசித்தல்)

உற்சாகத்தை விளக்கும் மற்றொன்றை விதிக்கின்றது.

பிராமணம் 5

दुन्दुभीन्त्समाघ्नन्ति परमा वा एषा वाग्या दुन्दुभौ परमामेव वाचमव रुन्धते ।

என்பது

உரை

நான்கு திக்குக்களிலும் வைத்திருக்கின்ற துந்துபி என்னும் பறைகளை நன்றாய் அடித்தல் வேண்டும். இவ்வாத்திய வொலி எல்லா ஒலிகட்கும் மேலாகியதால் அதை அடித்தலால் எசமானர்கள் சபையிலுள்ளவர்களை இரமிக்கத் தக்க வாக்கைப் பேசுகின்றவர்களாகின்றார்கள் என்பது.

---

பூமி துந்துபியை அடித்தல் விதிக்கின்றது

பிராமணம் 6

भूमिदुन्दुभिमाघ्नन्ति यैवेमां वाक्प्रविष्टा तामेवाव रुन्धतेऽथो इमामेव जयन्ति ।

என்பது

உரை.

ஆக்கினீத்ர மண்டபத்திற்கு மேற்கில் பாதி அந்தர் வேதியிலும் பாதி வெளியிலுமாக பள்ளங் கெல்லி மயிர்கள் மேலேயிருக்கும்படி ஈரமாயுள்ள தோலை அப்பள்ளத்தின்மீது விரித்து நாற்புறமும் சிறிய முளைக்குச்சில்களை யடித்துவிட்டு புல்லின் தண்டால் அடித்தல் வேண்டும். இதனால், மட்பொருள்களின் உராஞ்சுதலால் உண்டாகும் ஒலிகளனைத்தும் இவர்களுடைய வசமாகின்றன என்பது.

---

மாகேந்திர துதியின் உபாகரணத்தின்போது, அபாகாடலி, தும்புந, வீணை, பிச்சேலா என்னும் வாத்தியங்களை பத்தினிகள் முழங்கல் வேண்டுமென்று விதிக்கின்றது.

பிராமணம் 7

सर्वा वाचो वदन्ति सर्वासां वाचामवरुद्ध्यै ।

என்பது

உரை

இதனால். அபாகாடலி முதலிய வாத்தியங்களின் ஒலிகளையும், மனிதர் கோ, குதிரை முதலியவைகளின் ஒலி விசேடங்களனைத்தையுமடைகின்றார் கள் என்பது.

---

தோல் நிமித்தம் அந்தணன் சூத்திரன் என்பவர்கட்கு கலகத்தை விதிக்கின்றது.

பிராமணம் 8

**आर्द्रे चर्मन्व्यायच्छेते इन्द्रियस्यावरुद्ध्यै ।**

என்பது

உரை

சூத்திரனும் ஆரியனும் பூமிதுங்சபிக்கு தோல்போடும்போது கலகஞ் செய்து கொள்கின்றனர். அந்தர்வேதியில் அந்தணன் புகழ்ந்துகொண்டும், வெளிவேதியில் சூத்திரன் பழித்துக்கொண்டும் தோலைப் போடல் வேண்டும். இதனால் இந்திரிய வன்மையுண்டாகின்றது என்பது.

---

அதில், நிந்தையையும் புகழையும் முறையாய் விதிக்கின்றது.

பிராமணம் 9

**आऽन्यः क्रोशति प्रान्यश्शꣳसति य आक्रोशति पुनात्येवैनान्त्स यः प्र-
शꣳसति पूतेष्वेवान्नाद्यं दधाति ।**

என்பது.

உரை

சத்ரயாகஞ் செய்த இவ்வெசமானர்கள் பொருளைச் செலவிட்டு தூர் வியாபாரஞ் செய்து எல்லாவற்றையும் சூன்யமாக்கினர் என்று சூத்திரன் பழித்தல் வேண்டும். இவ்வெசமானர்கள், நல்ல வியாபாரத்தைச் செய்து சம்பத்தையடைந்தார்கள் என்று அந்தணன் புகழ்தல் வேண்டும். இவற்றுள், பழித்தலால் எசமானர்களுடைய பாவநீங்கிப் புனிதர்களாகின்றனர். புகழ்தலால் புநிதமானபோது உணவுப் பொருள் முதலானவைகளைத் தேடுகின்றனர் என்பது.

சிலசாம விசேடங்களை விதிக்கின்றது

### பிராமணம் 10

**ऋषिकृतं च वा एते देवकृतं च पूर्वैर्मासैरव रुन्धते यद्भूतेच्छदाᳫ सा-
मानि भवन्त्युभयस्यावरुद्ध्यै ।**

என்பது.

உரை

மனிதரால் செய்யப்பட்ட உதவியையும், தேவரால் செய்யப்பட்ட உதவியையும் கவாமயனத்திலுள்ள மகாவிரதத்தில் அநுட்டித்த மாதங்களால் எசமானர்கள் அடைகின்றார்கள். ஆதலின் மகாவிரதத்திலும் அவ்விரு உதவிகளையும் அடைதற்பொருட்டு 'பூதேச்சா' என்னும் பெயர்களையுடைய இருடிகளின் சம்பந்தமான, அதாவது அவர்களால் கண்டுபிடித்த சாமங்களைப்பாடல் வேண்டும் என்பது.

---

பிரமசாரியும், விலைமாதரும் புணர்வதை விதிக்கின்றது.

### பிராமணம் 11

**यन्ति वा एते मिथुनाद्ये संवत्सरमुपयन्त्यन्तर्वेदि मिथुनौ सं भवतस्तेनैव
मिथुनान्न यन्ति ।**

என்பது.

உரை

வருடசத்ரயாகத்தை அநுட்டித்த எசமானர்கட்கு நெடுநாள் அநுட்டானத்தால் புணர்ச்சி வன்மை போய்விடுகின்றது. மீண்டும் பெண் புணர்ச்சி வன்மை வருதற் பொருட்டு வேதியின் நடுவில் பிரமசாரியையும் தாசியையும் புணரும்படி செய்தல் வேண்டும். இதனால், எசமானர்கட்கு மாதைப் புணரும் வன்மையுண்டாகின்றது என்பது.

ஒன்பதாமநுவாகம்

முற்றிற்று



## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## பத்தாவது அநுவாகம்

*நாற்பத்தொன்பது பதங்களைக் கொண்டது.*

தாசி நடிப்பதைக் கூறும் பிராமணங்கள்.

चर्मा॑व भिन्दन्ति पा॒प्मान॑मे॒वैषा॒मव॑ भिन्दन्ति॒ माऽप॑ रात्सी॒र्माऽति॑ व्यात्सीरित्या॑ह संप्र॒त्ये॑वैषा॑ं पा॒प्मान॒मव॑ भिन्दन्त्युदकु॒म्भान॑धि॒निधा॑य दा॒स्यो॑ मार्जा॒लीयं॒ परि॑ नृत्यन्ति प॒दो॑ नि॒घ्नतीरि॒दं॑ मधुं॒ गाय॑न्त्यो॒ मधु॒ वै दे॒वानां॒ पर॒मम॒न्नाद्यं॒ पर॒मम॒वान्नाद्य॒मव॑ रुन्धते प॒दो॑ नि घ्नन्ति म॒हीया॒मे॒वैषु॑ दधाति ॥ ३२ ॥ चर्मै॒का॒न्नप॑ञ्चा॒शत् ।
॥ १० ॥

*இதில், தாசி நடிப்பது கூறப்படுகின்றது.*

தோலைத் துளைத்தல்

பிராமணம் 1

**चर्माव भिन्दन्ति पाप्मानमेवैषामव भिन्दन्ति ।**

என்பது

உரை

*ஆக்னீத்ர மண்டபத்திற்கு வடக்கில் பாய்களையாவது, அல்லது தருப்பைகளையாவது குவித்து அதன்மேல் ஈரமாகிய தோலை விரித்து அதை பாணங்களை விட்டுத் துளைத்தல் வேண்டும். இதனால் எசமானர்களுடைய பாவம் நீங்கிவிடுகின்றது என்பது.*

---

துளைப்பதற்கு முன் கவசமணிந்தவர்கட்கு அத்வரியு கற்பித்தல்,

பிராமணம் 2

**माऽप रात्सीर्माऽति व्यात्सीरित्याह संप्रत्येवैषां पाप्मानमव भिन्दन्ति ।**

என்பது

உரை

கவசமணிந்தோர்களே! தோலைத் துளைப்பதற்கு விடும் பாணத்தை தவறாமல் விடுவீர்களாக. கீழே விழுந்துவிடாமலும் விடுவீர்களாக என்று அத்வரியு கூறுதல் வேண்டும். இவ்வாறு செய்யில் எசமானர்களுடைய பாவத்தையே தொலைக்கின்றார்கள் என்பது.

---

நாட்டியத்தை விதிக்கின்றது

பிராமணம் 3

**उदकुम्भानधिनिधाय दास्यो मार्जालीयं परि नृत्यन्ति पदो निघ्नतीरिदं- मधुं गायन्त्यो मधु वै देवानां परममन्नाद्यं परममेवान्नाद्यमव रुन्धते पदो नि घ्नन्ति महीयामेवैषु दधति ।**

என்பது

உரை

மார்ச்சாலீயத்திலுள்ள மேடையைச் சுற்றி எட்டு தாசிப் பெண்கள் தலையில் நீர்க் குடங்களை வைத்துக்கொண்டு, இதம் மது, என்று பாடிக் கொண்டு ஆடல் வேண்டும். மது என்பது தேவர்கட்கு மிகப்பிரியமாகிய அன்னம் அதைப் பாடுதலால் சிறந்த உணவுப் பொருள் கிடைக்கின்றது என்பது

பத்தாமநுவாகம்
முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### பதினோராவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் இரண்டு பதங்களைக் கொண்டது.

அன்னஹோம மந்திரங்கள்

**पृथिव्यै स्वाहाऽन्तरिक्षाय स्वाहा दिवे स्वाहा संप्लोष्यते स्वाहा संप्लवमानाय स्वाहा संप्लुताय स्वाहा मेघायिष्यते स्वाहा मेघायते स्वाहा मेघिताय स्वाहा मेघाय स्वाहा नीहाराय स्वाहा निहाकायै स्वाहा प्रासचाय स्वाहा प्रचलाकायै स्वाहा विद्योतिष्यते स्वा-**

हा विद्योतमानाय स्वाहा संविद्योतमानाय स्वाहा स्तनयिष्यते स्वाहा स्तनयते स्वाहोग्रꣳ स्तनयते स्वाहा वर्षिष्यते स्वाहा वर्षते स्वाहाऽभिवर्षते स्वाहा परिवर्षते स्वाहा संवर्षते ॥ ३३ ॥ स्वाहाऽनुवर्षते स्वाहा शीकायिष्यते स्वाहा शीकायते स्वाहा शीकिताय स्वाहा प्रोषिष्यते स्वाहा प्रुष्णते स्वाहा परिप्रुष्णते स्वाहोद्ग्रहीष्यते स्वाहोद्गृह्णते स्वाहोद्गृहीताय स्वाहा विप्लोष्यते स्वाहा विप्लवमानाय स्वाहा विप्लुताय स्वाहाऽऽतप्स्यते स्वाहाऽऽतपते स्वाहोग्रमातपते स्वाहर्ग्भ्यःस्वाहा यजुर्भ्यः स्वाहा सामभ्यः स्वाहाऽङ्गिरोभ्यः स्वाहा वेदेभ्यस्स्वाहा गाथाभ्यः स्वाहा नाराशꣳसीभ्यः स्वाहा रैभीभ्यः स्वाहा सर्वस्मै स्वाहा ॥ ३४ ॥ संवर्षते रैभीभ्यः स्वाहा द्वे च । ॥११॥

*இத்துடன் மகாவிரதம் முடிந்துவிட்டது.*

*இனிமேல் வரும் அநுவாகங்களில் அசுவ மேதத்திற்கு அங்கங்களாகிய் மந்திரங்கள் கூறப்படுகின்றன. அவற்றுள்ளும், இரண்டு அநுவாகங்களால் அன்னஹோம மந்திரங்கள் கூறப்படுகின்றன. அதில், இதில் முதலநுவாக மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

पृथिव्यै स्वाहाऽन्तरिक्षाय स्वाहा दिवे स्वाहा संप्लोष्यते स्वाहा संप्लवमानाय स्वाहा संप्लुतायस्वाहा मेघायिष्यते स्वाहा मेघायते स्वाहा मेघिताय स्वाहा मेघाय स्वाहा नीहाराय स्वाहा निहाकायै स्वाहा प्रासचाय स्वाहा प्रचलाकायै स्वाहा विद्योतिष्यते स्वाहा विद्योतमानाय स्वाहा संविद्योतमानाय स्वाहा स्तनयिष्यते स्वाहा स्तनयते स्वाहोग्रꣳ स्तनयते स्वाहा वर्षिष्यते स्वाहा वर्षते स्वाहाऽभिवर्षते स्वाहा परिवर्षते स्वाहा संवर्षते स्वाहाऽनुवर्षते स्वाहा शीकायिष्यते स्वाहा शीकायते स्वाहा शीकिताय स्वाहा प्रोषिष्यते स्वाहा प्रुष्णते स्वाहा परिप्रुष्णते स्वाहोद्ग्रहीष्यते स्वाहोद्गृह्णते स्वाहोद्गृहीताय स्वाहा विप्लोष्यते स्वाहा विप्लव-

**मानाय स्वाहा विप्लुताय स्वाहाऽऽतप्स्यते स्वाहाऽऽतपते स्वाहोग्रमातपते स्वाहर्ग्भ्यः स्वाहा यजुर्भ्यस्स्वाहा सामभ्यस्स्वाहाऽङ्गिरोभ्यः स्वाहा वेदेभ्यः स्वाहा गाथाभ्यः स्वाहा नाराशꣳसीभ्यः स्वाहा रैभीभ्यः स्वाहा सर्वस्मै स्वाहा ।**

என்பது.

உரை

பூமி, அந்தரிக்ஷம், வான் என்பவைகட்கு இது அர்ப்பணமாகுக. மேகத்தையுண்டாக்குதற்பொருட்டு உண்டாகும்புகையொளி நீர்வாயுக்களின் சேர்க்கை சம்பலவமாம். அத்தகையசம்பலவம் உண்டானது, உண்டாகின்றது, உண்டாகுவது என்னும் மூன்றிற்கும், உண்டானமேகங்கட்கும், உண்டாகின்றமேகங்கட்கும் உண்டாகும்மேகங்கட்கும், மழைத்துளிகட்கும், மிகுந்ததுளிகளுடன் கூடிய சிறிது இருட்டிற்கும், அக்குளிர்ச்சியாலுண்டாகும் அவயவச் சுருக்கத்திற்கும், அதன் பிறகு ஓடுதலுக்கும், பிறகு உண்டான மின்னலுக்கும். உண்டாகின்ற மின்னலுக்கும், உண்டாகும் மின்னலுக்கும் பிறகு, பெய்த மழைக்கும், பெய்கின்ற மழைக்கும், பெய்யும் மழைக்கும், அதிலும் காற்றால் முகத்திலடித்த மழைக்கும், நாற்புறமும் மண்டலமாய் வளைத்துக்கொண்டும் பெய்யும் மழைக்கும், நேரே தாரையாய்ப்பெய்யும் மழைக்கும், போகும்போது பின்புறத்திலடிக்கும் மழைக்கும், அம்மழையால் உண்டாகியகுளிருக்கும், உண்டாகின்றகுளிருக்கும், உண்டாகுங்குளிருக்கும், மழை பெய்தவுடன் பூமியிலிருந்தெழும் சூட்டிற்கும், எழுந்த சூட்டிற்கும், எழப்போகுஞ் சூட்டிற்கும், விட்டமழைக்கும், விடுகின்ற மழைக்கும், விடப்போகும் மழைக்கும், கலைந்துபோன மேகத்திற்கும், கலைந்துபோகின்ற மேகங்கட்கும், கலைந்து போகப்போகும் மேகங்கட்கும், பிறகு வந்தவெய்யிலுக்கும், வருகின்ற வெய்யிலுக்கும், வரப்போகும் வெய்யிலுக்கும், இருக்கு மந்திரத்திற்கும், எசுர் மந்திரத்திற்கும், சாமத்திற்கும், ஆங்கிரசர்கட்கும், வேதங்கட்கும், தேவதைகளின் கதையாகிய மந்திரங்கட்கும், மனிதர்களின் கதையாகிய நாராசம்சமென்னும் இருக்கிற்கும், அக்கினியைப்பற்றிய ரைப்யமென்னும் இருக்குக்கட்கும் இது அர்ப்பணமாகுக, மற்றும் எல்லாவற்றிற்கும் இது அர்ப்பணமாகுக. இவ்வைம்பது மந்திரங்களாலும் இரவில் அன்னஹோமங்கள் செய்தல்வேண்டும் என்பதாம். குதிரை பிரசாபதி வடிவாமாதலின் இவையெல்லாங் குதிரை வடிவால் ஓமஞ் செய்யப்படுகின்றது என்பதையுணர்க.

பதிஞோராமநுவாகம்

முற்றிற்று

## ஏழாம் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்
## பன்னிரண்டாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் இரண்டு பதங்களைக் கொண்டு மிச்சமுள்ள அன்னஹோம மந்திரங்கள்.

दत्वते स्वाहाऽदन्तकाय स्वाहा प्राणिने स्वाहाऽप्राणाय स्वाहा मुखवते स्वाहाऽमुखाय स्वाहा नासिकवते स्वाहाऽनासिकाय स्वाहाऽक्षण्वते स्वाहाऽनक्षिकाय स्वाहा कर्णिने स्वाहाऽकर्णकाय स्वाहा शीर्षण्वते स्वाहाऽशीर्षकाय स्वाहा पद्वते स्वाहाऽपादकाय स्वाहा प्राणते स्वाहाऽप्राणते स्वाहा वदते स्वाहाऽवदते स्वाहा पश्यते स्वाहाऽपश्यते स्वाहा शृण्वते स्वाहाऽशृण्वते स्वाहा मनस्विने स्वाहा ॥ ३५ ॥ अमनसे स्वाहा रेतस्विने स्वाहाऽरेतस्काय स्वाहा प्रजाभ्यः स्वाहा प्रजननाय स्वाहा लोमवते स्वाहाऽलोमकाय स्वाहा त्वचे स्वाहाऽत्वक्काय स्वाहा चर्मण्वते स्वाहाऽचर्मकाय स्वाहा लोहितवते स्वाहाऽलोहिताय स्वाहा मांसन्वते स्वाहाऽमांसकाय स्वाहा स्नावभ्यः स्वाहाऽस्नावकाय स्वाहाऽस्थन्वते स्वाहाऽनस्थिकाय स्वाहा मज्जन्वते स्वाहाऽमज्जकाय स्वाहाऽङ्गिने स्वाहाऽनङ्गाय स्वाहाऽऽत्मने स्वाहाऽनात्मने स्वाहा सर्वस्मै स्वाहा ॥३६॥ मनस्विने स्वाहाऽनात्मने स्वाहा द्वे च ॥१२॥

இதிலுள்ள அன்னஹோம மந்திரங்களைப் பிரிக்கிறது.

दत्वते स्वाहाऽदन्तकाय स्वाहा प्राणिने स्वाहाऽप्राणाय स्वाहा मुखवते स्वाहाऽमुखाय स्वाहा नासिकवते स्वाहाऽनासिकाय स्वाहाऽक्षण्वते स्वाहाऽनक्षिकाय स्वाहा कर्णिने स्वाहाऽकर्णकाय स्वाहा शीर्षण्वते स्वाहाऽशीर्षकाय स्वाहा पद्वते स्वाहाऽपादकाय स्वाहा प्राणते स्वाहाऽप्राणते स्वाहा वदते स्वाहाऽवदते स्वाहा पश्यते स्वाहाऽपश्यते स्वाहा-

எஞ்சிய அன்னஹோமம்)

शृण्वते स्वाहाऽशृण्वते स्वाहा मनस्विने स्वाहाऽमनसे स्वाहा रेतस्विने स्वाहाऽरेतस्काय स्वाहा प्रजाभ्यः स्वाहा प्रजननाय स्वाहा लोमवते स्वाहाऽलोमकाय स्वाहा त्वचे स्वाहाऽत्वकाय स्वाहा चर्मण्वते स्वाहाऽचर्मकाय स्वाहा लोहितवते स्वाहाऽलोहिताय स्वाहा माꣳसन्वते स्वाहाऽमाꣳसकाय स्वाहा स्नावभ्यः स्वाहाऽस्नावकाय स्वाहाऽस्थन्वते स्वाहाऽनस्थिकाय स्वाहा मज्जन्वते स्वाहाऽमज्जकाय स्वाहाऽङ्गिने स्वाहाऽनङ्गाय स्वाहाऽऽत्मने स्वाहाऽनात्मने स्वाहा सर्वस्मै स्वाहा ।

என்பது.

உரை

பற்களுள்ளவைகட்கும், பற்கள் இல்லாதவைகட்கும், உயிருள்ளவை கட்கும், உயிரில்லாதவைகட்கும், வாயுள்ளவைகட்கும், வாயில்லாதவைகட்கும், மூக்குள்ளவைகட்கும், மூக்கில்லாதவைகட்கும், கண் உள்ளவைகட்கும் கண் இல்லாதவைகட்கும், செவியுள்ளவைகட்கும், செவியில்லாதவைகட்கும், தலையுள்ளவைகட்கும், தலையில்லாதவைகட்கும், கால் உள்ளவைகட்கும், கால் இல்லாதவைகட்கும், பிராணன் உள்ளவைகட்கும், பிராணன் இல்லாதவைகட்கும், பார்க்கின்றவைகட்கும், பார்வையில்லாதவைகட்கும், கேட்கின்றவைகட்கும், கேட்காதவைகட்கும், மனதில்லாதவைகட்கும், மனதுள்ளவைகட்கும் ரேதசு உள்ளவைகட்கும், ரேதசு இல்லாதவைகட்கும், பிறப்பவை கட்கும், பிறக்காதவைகட்கும், மயிருள்ளவைகட்கும், மயிரில்லாதவை, கட்கும், தோல் உள்ளவைகட்கும், தோல் இல்லாதவைகட்கும், சிவந்த நிறமுடையவைகட்கும், சிவப்பில்லாதவைகட்கும், மாமிசமுள்ளவைகட்கும், மாமிசமில்லாதவைகட்கும், நரம்பு உள்ளவைகட்கும், நரம்பில்லாதவைகட்கும், எலும்புள்ளவைகட்கும், எலும்பில்லாதவைகட்கும், கொழுப்புள்ளவைகட்கும், கொழுப்பில்லாதவைகட்கும், அங்கமுள்ளவைகட்கும், அங்கமில்லாதவைகட்கும், ஆன்மா உள்ளவைகட்கும், ஆன்மா இல்லாதவை கட்கும், மற்றும் எல்லாவற்றிற்கும் இவை அருப்பணங்களாகுக. இவைகளாலும் இரவில் அன்னஹோமங்கள் செய்தல் வேண்டும் என்பதாம்.

பன்னிரண்டாமநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## பதிமூன்றுவது அநுவாகம்

முப்பத்தெட்டுப் பதங்களைக் கொண்டது.

பரிதி மந்த்ரங்கள்.

कस्त्वा युनक्ति स त्वा युनक्तु विष्णुस्त्वा युनक्त्वस्य यज्ञस्यर्ध्यै मह्यं संनत्या अमुष्मै कामायाऽऽयुषे त्वा प्राणाय त्वाऽपानाय त्वा व्यानाय त्वा व्युष्ट्यै त्वा रय्यै त्वा राधसे त्वा घोषाय त्वा पोषाय त्वाऽऽराद्घोषाय त्वा प्रच्युत्यै त्वा ॥ ३७ ॥

कोऽष्टात्रिंशत् ॥ १३ ॥

இதில் பரிதி மந்திரங்கள் கூறப்படுகின்றன.

कस्त्वा युनक्ति स त्वा युनक्तु विष्णुस्त्वा युनक्त्वस्य यज्ञस्यर्ध्यै मह्यं संनत्या अमुष्मै कामायाऽऽयुषे त्वा प्राणाय त्वाऽपानाय त्वा व्यानाय त्वा व्युष्ट्यै त्वा रय्यै त्वा राधसे त्वा घोषाय त्वा पोषाय त्वाऽऽराद्घोषाय त्वा प्रच्युत्यै त्वा ।

என்பது.

உரை

நடுப்பரிதியே ! (விறகே !) பிரசாபதி, உன்னை, தீக்கருகிற் சேர்த்து வைக்கின்றார். தெற்குப் பரிதியே! உன்னை, அந்தப் பிரசாபதியே அக்கினிக் கருகிற் சேர்ப்பாராக. வடக்குப்பரிதியே ! உன்னை, விஷ்ணு, தீக்கருகில் சேர்த்துவைப்பாராக. எதன் பொருட்டெனின் ? இவ்வேள்வி இனிது நிறைவேறுதற் பொருட்டென்க. அங்ஙனமே, எல்லாப் பிராணிகளும் எனக்குப் பணிதற்பொருட்டும், பிரசையுண்டாக வேண்டுமென்னும் இச்சையின் பொருட்டும், ஆயுள் வளருதற் பொருட்டும், உன்னை, யான் அக்கினிக்கருகில் வைக்கின்றேன். மற்றும், பிராணன் பொருட்டும், அபானன் பொருட்டும், விடியற்காலத்தின் பொருட்டும், தனத்தின் பொருட்டும், அன்னத்தின் பொருட்டும், கீர்த்தியின் பொருட்டும், பசு முதலியவைகளின் புஷ்டியின் பொருட்டும், தூரசப்தவாச்சியத்தின்பொருட்டும். எல்லாத்துன்ப நீக்கத்தின் பொருட்டும் உன்னை அக்கினிக்கருகில் வைக்கின்வேன். ஈண்டு உன்னை நான் வைக்கின்றேன் என்பதை எங்குஞ் சேர்த்துக் கொள்க என்பது.

ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## பதினைந்காவது அநுவாகம்

*ஒரு பஞ்சாதிக்குமேல் நாற்பத்தேழு பதங்களைக் கொண்டது.*

சருவ பிருஷ்ட இஷ்டியை விதிக்கும் பிராமணங்கள்

अग्नये गायत्राय त्रिवृते राथंतराय वासन्तायाष्टाकपाल इन्द्राय त्रैष्टुभाय पञ्चदशाय बार्हताय ग्रैष्मायैकादशकपालो विश्वेभ्यो देवेभ्यो जागतेभ्यस्सप्तदशेभ्यो वैरूपेभ्यो वार्षिकेभ्यो द्वादशकपालो मित्रावरुणाभ्यामानुष्टुभाभ्यामेकविꣳशाभ्यां वैराजाभ्याꣳ शारदाभ्यां पयस्या बृहस्पतये पाङ्क्ताय त्रिणवाय शाक्कराय हैमन्तिकाय चरुस्सवित्र आतिच्छन्दसाय त्रयस्त्रिꣳशाय रैवताय शैशिराय द्वादशकपालोऽदित्यै विष्णुपत्न्यै चरुरग्नये वैश्वानराय द्वादशकपालोऽनुमत्यै चरुः काय एककपालः ॥ ३८ ॥ अग्नये गायत्रायादित्या अनुमत्यै चरुस्सप्तचत्वारिꣳशत् । ॥ १४ ॥

இதில் பத்து அவிகளையுடைய சர்வபிருஷ்டத்திற்கு நெல்லெடுத்தல் கூறப்படுகின்றது.

अग्नये गायत्राय त्रिवृते राथंतराय वासन्तायाष्टाकपाल इन्द्राय त्रैष्टुभाय पञ्चदशाय वार्हताय ग्रैष्मायैकादशकपालो विश्वेभ्यो देवेभ्यो जागतेभ्यस्सप्तदशेभ्यो वैरूपेभ्यो वार्षिकेभ्यो द्वादशकपालो मित्रावरुणाभ्यामानुष्टुभाभ्यामेकविꣳशाभ्यां वैराजाभ्याꣳ शारदाभ्यां पयस्या बृहस्पतये पाङ्क्ताय त्रिणवाय शाक्कराय हैमन्तिकाय चरुस्सवित्र आतिच्छन्दसाय त्रयस्त्रिꣳशाय रैवताय शैशिराय द्वादशकपालोऽदित्यै विष्णुपत्न्यै चरुरग्नये वैश्वानराय द्वादशकपालोऽनुमत्यै चरुः काय एककपालः ।

உரை

காயத்திரி, திரிவிருத் ஸ்தோமம் ரதந்தரம், வசந்தம் என்பவைகளுடன் கூடிய அக்கினியின்பொருட்டு எட்டுக்கபாலபுரோடாசத்திற்கும், திரிஷ்டுப், பதினைந்துஸ்தோமம், பிருகத், கிரீஷ்ம (வெய்யிற்கால)ம் என்பவைகளுடன் கூடிய இந்திரன் பொருட்டும் பதினொருகபால புரோடாசத்தின் பொருட்டும், சகதி, பதினேழு ஸ்தோமம், வைரூபம், வருஷாரிது என்பவைகளுடன் கூடிய விசுவதேவர்களின் பொருட்டு பன்னிரண்டு கபாலப் புரோடாசத்திற்கும் நெல் எடுப்பார்களாக. அநுஷ்டுப், இருபத்தொரு ஸ்தோமம், வைராசம், சரத் ரிது என்பவைகளுடன் கூடியமித்திராவருணர்களின் பொருட்டும் ஆமிக்ஷையைச் செய்வாககளாக. பந்தி, இருபத்தேழு ஸ்தோமம், சாக்வரம், ஹேமந்த ரிது (பனிக்காலம்) என்பவைகளுடன் கூடிய பிருகற்பதிக்குப் பொங்கல் செய்வார்களாக. அதிச்சந்தம், முப்பத்துமூன்று ஸ்தோமம், ரைவதம், சிசிர ரிது (குளிர்காலம்) என்பவைகளுடன் கூடிய சவிதாவின் பொருட்டு பன்னிரண்டு கபால புரோடாசத்திற்கு நெல் எடுப்பார்களாக. விஷ்ணு பத்தினியாகிய அதிதிக்கு பொஙகல் செய்வார்களாக. வைசுவா நராக்கினிக்கு பன்னிரண்டு கபாலப் புரோடாசத்திற்கு நெல் எடுப்பார்களாக, அநுமதிக்கு பொங்கல் செய்வார்களாக. பிரசாபதிக்கு ஒரு கபால புரோடாசஞ் செய்வார்களாக என்பது. இதில், சந்தம், ஸ்தோமம், சாமம், ரிது என்பவைகள் தேவதைக்கட்கு விசேடணங்கள்.

பதினன்காமநுவாகம்
முற்றிற்று.

---

ஏழாங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## பதினைந்தாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் நாற்பத்தொரு பதங்களைக் கொண்டது.

மேற்கூறிய அவிகளின் உற்பததியைக் கூறும் பிராமணங்கள்.

यो वा अग्नावग्निः प्रहियते यश्च सोमो राजा तयोरेष आतिथ्यं यदग्नीषोमीयोऽथैष रुद्रो यश्चीयते यत्संचितेऽग्नावेतानि हवीꣳषि न निर्वपेदेष एव रुद्रोऽशान्त उपोत्थाय प्रजां पशून्यजमानस्याभि म-न्येत यत्संचितेऽग्नावेतानि हवीꣳषि निर्वपति भागधेयेनैवैनꣳ शम-

यति नास्य रुद्रोऽशान्तः ॥ ३९ ॥ उपोत्थाय प्रजां पशूनभि मन्यते दश हवीꣳषि भवन्ति नव वै पुरुषे प्राणा नाभिर्दशमी प्राणानेव यजमाने दधात्यथो दशाक्षरा विराडन्नं विराड्विराज्येवान्नाद्ये प्रति तिष्ठत्यृतुभिर्वा एष छन्दोभिः स्तोमैः पृष्ठैश्चेतव्य इत्याहुर्यदेतानि हवीꣳषि निर्वपत्यृतुभिरेवैनं छन्दोभिः स्तोमैः पृष्ठैश्चिनुते दिशः सुषुवाणेन ॥ ४० ॥ अभिजित्या इत्याहुर्यदेतानि हवीꣳषि निर्वपति दिशामभिजित्या एतया वा इन्द्रं देवा अयाजयन्तस्मादिन्द्रसव एतया मनुं मनुष्यास्तस्मान्मनुसवो यथेन्द्रो देवानां यथा मनुर्मनुष्याणामेवं भवति य एवं विद्वानेतयेष्ट्या यजते दिग्वतीः पुरोनुवाक्या भवन्ति सर्वासां दिशामभिजित्यै ॥ ४१ ॥ अशान्तः सुषुवाणेनैकचत्वारिꣳशच्च । ॥ १५ ॥

---

அவிகளின் உற்பத்தியைக் கூறிவிட்டு இப்போது பிரயோகத்தை விதிக்கின்றது.

பிராமணம்-1

यो वा अग्नावग्निः प्रहियते यश्च सोमो राजा तयोरेष आतिथ्यं यदग्नीषोमीयोऽथैष रुद्रो यश्चीयते यत्संचितेऽग्नावेतानि हवीꣳषि न निर्वपेदेष एव रुद्रोऽशान्त उपोत्थाय प्रजां पशून्यजमानस्याभि मन्येत यत्संचितेऽग्नावेतानि हवीꣳषि निर्वपति भागधेयेनैवैनꣳ शमयति नास्य रुद्रोऽशान्त उपोत्थाय प्रजां पशूनभि मन्यते ।

என்பது.

உரை

ஆதானஞ் செய்துள்ள அக்கினியில் இப்போது சயனத்தக்கு தீ சேர்க்கப்படுகின்றது. சோமக் கொடி வைக்கப்பட்டிருக்கின்றது. இந்த, அக்கினி சோமம் என்னுமிருவருக்கும் உரிய பசுவால் அதிதிபூசைசெய்யில் இருவரும் களிப்படைகின்றனர். சயனத்தால் (செங்கலடுக்குக்களால்) உண்டாகிய அக்கினி உருத்திரனும். ஆதலின், அத்தகைய சயனக்கினிக்கு, கூறிய அவிகளைச் செய்யாவிட்டால் மிகுந்த குரோதமுடையதாய் அருகில் வந்து எச

மானனுடைய பிரசைகளையும் பசுக்களையுங் கொன்றுவிடும் ஆதலின் நெல் லெடுத்து அவிகளைச் செய்யில் தனது பாகத்தையடைந்து களித்ததால் கொல்லமாட்டாது என்பது.

---

பாடமுறையில் வந்த அவிகளின் எண் புகழப்படுகின்றது

பிராமணம் 2

**दश हवीꣳषि भवन्ति नव वै पुरुषे प्राणा नाभिर्दशमी प्राणानेव यजमाने दधात्यथो दशाक्षरा विराडन्नं विराड्विराज्येवान्नाद्ये प्रति तिष्ठति ।**

என்பது

உரை

பத்து அவிகளாகின்றன. ஒருவனுக்கு பிராணன்கள் ஒன்பது நாபி யுடன் சேர்த்தோ, பத்தாம். ஆதலின், எசமானனிடத்தில் பிராணன்களைக் கொடுக்கின்றது. மற்றும், பத்து எழுத்துக்கள் கொண்ட விராட்சந்தம் அன்னமாதலின் விராட் சந்தத்தால் அன்ன முதலானவைகளில் நிலைக்கின் றார்கள் என்பது.

---

தேவதைகளின் விசேடணங்களைத் துதிக்கின்றது

பிராமணம் 3

**ऋतुभिर्वा एष छन्दोभिः स्तोमैः पृष्ठैश्चेतव्य इत्याहुर्यदेतानि हवीꣳषि निर्वपत्यृतुभिरेवैनं छन्दोभिः स्तोमैः पृष्ठैश्चिनुते ।**

என்பது

உரை

இருதுக்கள், சந்தங்கள், ஸ்தோமங்கள், பிருஷ்டியங்கள் என்பவைகளு டன் அக்கினி சயனஞ் செய்தல் வேண்டும் என்று கூறுகின்றார்கள். ஆத லின் இந்த அவிகளைச் செய்கின்றவர்கள், வசந்த முதலிய இருதுக்கள், காயத் திரி முதலிய சந்தங்கள், திரிவிருத் முதலிய ஸ்தோமங்கள், ரதந்தர முதலிய பிருஷ்டங்கள் என்னுமிவைகளால் அக்கினி சயனஞ் செய்தவர்களாகின்றார் கள் என்பது.

---

அவிகளைப் புகழ்கின்றது

பிராமணம் 4

**दिशस्सुषुवाणेनाऽभिजित्या इत्याहुर्यदेतानि हवींषि निर्वपति दिशाम-भिजित्यै।**

என்பது

உரை

சோமம் பிழிகின்றவனால் திசைகள் செயிக்கப்படல் வேண்டும் என்று கூறுகின்றார்கள், ஆதலின், இத்தகைய பத்து அவிகளைச் செய்கின்றவன் பத்துத் திக்கையும் வெல்கின்றான் என்பது.

---

பத்து அவிகளின் கூட்டமுடைய சநவபிநஷ்ட இஷ்டியைப் புகழ்கின்றது

பிராமணம் 5

**एतया वा इन्द्रं देवा अयाजयन्तस्मादिन्द्रसव एतया मनुं मनुष्यास्तस्मा-न्मनुसवो यथेन्द्रो देवानां यथा मनुर्मनुष्याणामेवं भवति य एवं विद्वा-नेतयेष्ट्या यजते।**

என்பது

உரை

தேவர்கள் இவ்விஷ்டியால் ஆராதித்து ஐசுவரியத்தையடைந்தார்கள். ஆதலின் இதற்கு 'இந்திரசவம்' எனப் பெயர் வந்தது. இவ்விஷ்டியால் மநுவும் ஐசுவரியத்தையடைந்தாராதலின் 'மநுசவம்' எனப்பெயரும் வந்தது. இதையுணர்ந்து இவ்விஷ்டியைச்செய்கின்றவன், தேவர்களுள் இந்திரனைப் போலும்மனிதர்களுள் மநுவைப்போலும் இவ்விரண்டாலும் நிறைந்த ஐசுவரியத்தையடைகின்றான் என்பது.

---

இப்பத்துஅவிகட்கும், "சமித்திசாமாசயா ந:" என்னும் அநுவாகத்திற் கூறிய 'திக்' என்னுஞ் சொல்லைக் கொண்ட புரோநுவாக்கியங்களைக் கூறுகின்றது.

பிராமணம் 6

**दिग्वतीः पुरोनुवाक्या भवन्ति सर्वासां दिशामभिजित्यै।**

என்பது.

உரை

'திக், என்னுஞ் சொல்லுடன் கூடியவைகள் இவைகட்குப் புரோநு வாக்கியங்களாகின்றன. இதனுல் எல்லாத் திக்குக்களும் வெற்றி பெறப் படுகின்றன என்பது.

பதினைந்தாம் அநுவாகம்

முற்றிற்று

---

ஏழாங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

பதினாறுவது அநுவாகம்

முப்பத்தெட்டு பதங்களைக் கொண்டது.

முதல் மகிமை மந்திரங்கள்.

यः प्राणतो निमिषतो महित्वैक इद्राजा जगतो बभूव । य ईशे अस्य द्विपदश्चतुष्पदः कस्मै देवाय हविषा विधेम । उपयामगृहीतोऽसि प्रजापतये त्वा जुष्टं गृह्णामि तस्य ते द्यौर्महिमा नक्षत्राणि रूपमादित्यस्ते तेजस्तस्मै त्वा महिम्ने प्रजापतये स्वाहा ॥ ४२ ॥

यः प्राणतो द्यौरादित्योऽष्टात्रिंशत् ॥ १६ ॥

இதில், மகிமை என்னும் வெள்ளிக்கிண்ணத்தில் சோமரசம் பிடித்து ஓமஞ் செய்தல் கூறப்படுகின்றது.

यः प्राणतो निमिषतो महित्वैक इद्राजा जगतो बभूव । य ईशे अस्य द्विपदश्चतुष्पदः कस्मै देवाय हविषा विधेम । उपयामगृहीतोऽसि प्रजापतये त्वा जुष्टं गृह्णामि तस्य ते द्यौर्महिमा नक्षत्राणि रूपमादित्यस्ते तेजस्तस्मै त्वा महिम्ने प्रजापतये स्वाहा ।

என்பது.

உரை

எப் பிரசாபதி ஒருவனே பிராணனையுடையவைகளும், கண்ணிமைக்கின்றவைகளுமான உலகிற்கு தனது மகிமையால் அரசனுயினனோ, மற்றும், எவன், இருகாற் பிராணிகள், நாற்காற் பிராணிகள் என்னும் மக்கட்கும் விலங்கிற்கும் இறைவனோ, உலகியல் மனிதர்களால் இவ்வண்ணத் தன் என்று உறுதிப்படுத்த முடியாத அத்தகைய பிரசாபதியாகிய தேவனுக்கு இந்த அவி

மகிமை மந்திரம்)

யால் வழிபாடு செய்கின்றோம். இனி அத்தகைய பிரசாபதியே! உனது விண்ணுலக மகிமையே இப்பாத்திரமாம். காணப்படும் நட்சத்திரங்கள் உனது வடிவாம், சூரியன், உனது ஒளியாவன். கிரகபாத்திரமே! அதாவது வெள்ளிக் கிண்ணத்திலிருக்கும் சோமரசமே! உன்னை, அத்தகைய மகிமையுடைய பிரசாபதியின் பொருட்டு ஹோமஞ் செய்கின்றேன் என்பது.

பதினாறுவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## பதினேழாவது அநுவாகம்

முப்பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

இரண்டாவது மகிமை மந்திரம்

य आ॑त्म॒दा ब॑ल॒दा यस्य॒ विश्वे॑ उ॒पास॑ते प्र॒शिषं॒ यस्य॑ दे॒वाः । यस्य॑ छा॒याऽमृतं॒ यस्य॑ मृ॒त्युः कस्मै॑ दे॒वाय॑ ह॒विषा॑ विधेम । उ॒प॒या॒मगृ॑हीतोऽसि प्र॒जाप॑तये त्वा॒ जुष्टं॑ गृह्णामि॒ तस्य॑ ते पृ॒थि॒वी म॑हि॒मौष॑धयो॒ वन॒स्पत॑यो रू॒पम॒ग्निस्ते॒ तेज॒स्तस्मै॑ त्वा महि॒म्ने प्र॒जाप॑तये॒ स्वाहा॑ ॥ ४३ ॥ य आ॑त्म॒दाः पृ॑थि॒व्य॑ग्नि॒रेका॑न्नच॒त्वारि॒ꣳ॑शत् ॥ १७ ॥

இதில், பொன் கிண்ணத்தில் சோமரசம் பிடித்து ஓமஞ் செய்தல் கூறப்படுகின்றது.

य आत्मदा बलदा यस्य विश्व उपासते प्रशिषं यस्य देवाः। यस्य छायाऽमृतं यस्य मृत्युः कस्मै देवाय हविषा विधेम। उपयामगृहीतोऽसि प्रजापतये त्वा जुष्टं गृह्णामि तस्य ते पृथिवी महिमौषधयो वनस्पतयो रूपमग्निस्ते तेजस्तस्मै त्वा महिम्ने प्रजापतये स्वाहा।

என்பது,

உரை

எந்தப் பிரசாபதி எல்லாவுயிர்கட்கும் உடம்புகளைக் கொடுக்கின்றானோ, அவ்வுடம்புகட்கு வலுவையுங் கொடுக்கின்றானோ, எவனுடைய நலந்தரும் ஆக்ஞையை எல்லோருங்கொண்டாடுகின்றார்களோ, தேவர்களும் எவனுடைய ஆக்ஞைப்படி நடக்கின்றார்களோ, எவனுடைய நிழல் அமுதமோ, உயிர்களின் மிருத்தும் எவனுடைய வசமாயிருக்கின்றதோ, பிறரால் இன்னானென்று உணரமுடியாத அத்தகைய பிரசாபதியை இந்த அவியால் வழிபடுகின்றேன். கிரகமே! நீ மண் விகாரமாகிய பொன் பாத்திரத்திற் கிரகிக்கப் பெற்றிருக்கின்றாய். பிரசாபதியின் பொருட்டு உன்னைக் கிரகிக்கின்றேன். அத்தகைய மகிமையென்னும்கிரகம் பிருதிவிவடிவாம். கொடிசெடிகளும் வனஸ்பதிகளும் உன்னுடைய சித்திவடிவாம். அக்கினி உனது ஒளியாம். கிரகமே! அத்தகைய பிரசாபதியின்பொருட்டு உன்னை ஹோமஞ் செய்கின்றேன் என்பது.

பதினேழாவது அநுவாகம்
முற்றிற்று.

---

ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## பதினெட்டாவது அநுவாகம்

### பிரமவர்ச்சஸ் ஹோம மந்திரங்கள்

**आ ब्रह्मन्ब्राह्मणो ब्रह्मवर्चसी जायतामाऽस्मिन्राष्ट्रे राजन्य इषव्यः शूरो महारथो जायतां दोग्ध्री धेनुर्वोढाऽनड्वानाशुः सप्तिः पुरन्धिर्योषा जिष्णू रथेष्ठास्सभेयो युवाऽस्य यजमानस्य वीरो जायतां निकामेनिकामे नः पर्जन्यो वर्षतु फलिन्यो न ओषधयः पच्यन्तां योगक्षेमो नः कल्पताम् ॥ ४४ ॥ आ ब्रह्मन्नेकचत्वारिंशत् ॥ १८ ॥**

இதில் பிரமவர்ச்சசின் ஹோமங்கள் கூறப்படுகின்றன.

**आ ब्रह्मन्ब्राह्मणो ब्रह्मवर्चसी जायतामाऽस्मिन्राष्ट्रे राजन्य इषव्यश्शूरो महारथो जायतां दोग्ध्री धेनुर्वोढाऽनड्वानाशुः सप्तिः पुरन्धिर्योषा जिष्णू**

குதிரையைப் போற்றுதல்)

रथेष्ठास्सभेयो युवाऽस्य यजमानस्य वीरो जायतां निकामेनिकामे नः पर्जन्यो वर्षतु फलिन्यो न ओषधयः पच्यन्तां योगक्षेमो नः कल्पताम् ।

என்பது

உரை

பிராமண குலத்திற்கு, பிரமவொளி, அதாவது மறையோதல் முதலிய சம்பத்து உண்டாகுக. இவ்விராச்சியத்தில் அரசர்கட்கு பாணம் விடுதல் முதலான செயல்களில் வல்லுநத் தன்மையும், மகாவிரதமும் உண்டாகுக. மற்றும், பால் நிறையக் கறக்கும் பசுக்களும், முழுப்பாரத்தை யிழுக்குங் காளைகளும், விரைவாய் ஓடுங் குதிரைகளும், அழகிய மனைவிகளும், வெற்றி, தேரூர்தல், சபையில் முதலாவதாந் தன்மையும், தருணப்பருவத்தன்மையை யுமுடைய வீர புத்திரன் உண்டாகுக. வேண்டும்போது மழை பெய்க, கொடி செடிகள் நிறையப்பழமுடையவைகளாகுக. யோகமும் க்ஷேமமும் சம்பத்தும் எமக்கு உண்டாகுக என்பது. இப்பத்து மந்திரங்களாலும் பிரமவர்ச்சசம் என்னும் ஹோமங்களைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

பத்தெனட்டாமநுவாகம்

முற்றிற்று

---

ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## பத்தொன்பதாவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் நாற்பத்துமூன்று பதங்களைக் கொண்டது.

குதிரையைப் போற்றும் மந்திரங்கள்.

आऽक्रान्वाजी पृथिवीमग्निं युजमकृत वाजयर्वाऽक्रान्वाजयन्तरिक्षं वायुं युजमकृत वाज्यर्वा द्यां वाजयाऽक्रश्स्त सूर्यं युजमकृत वाजयर्वाऽग्निस्ते वाजिन्युङ्ङनु त्वा रभे स्वस्ति मा सं पारयवायुस्ते वाजिन्युङ्ङनु त्वाऽऽरभे स्वस्ति मासम् ॥ ४५ ॥ पारयाऽऽदित्यस्ते वाजिन्युङ्ङनु त्वाऽऽरभे स्वस्ति मा सं पारय प्राणधृगसि प्राणं मे दृꣳह व्यानधृगसि व्यानं मे दृꣳहापानधृगस्यपानं मे दृꣳह चक्षुरसि चक्षुर्मयि धेहि श्रोत्रमसि श्रोत्रं मयि धेह्यायुरस्या-

युर्मयि धेहि ॥ ४६ ॥ वायुस्ते वाजिन्युङ्क्तु त्वाऽऽरभे स्वस्ति मा सं त्रिचत्वारिंशच्च ॥ १९ ॥

இதில், குதிரையைப் போற்றும் மந்திரங்கள் கூறப்படுகின்றன.

आऽक्रान्वाजी पृथिवीमग्निं युजमकृत वाज्यर्वाऽक्रान्वाज्यन्तरिक्षं वायुर्युजमकृत वाज्यर्वा द्यां वाज्याऽक्रंस्त सूर्यं युजमकृत वाज्यर्वाऽग्निस्ते वाजिन्युङ्क्तु त्वाऽऽ रभे स्वस्ति मा सं पारय वायुस्ते वाजिन्युङ्क्तु त्वाऽऽ रभे स्वस्ति मा सं पारयाऽऽदित्यस्ते वाजिन्युङ्क्तु त्वाऽऽ रभे स्वस्ति मा सं पारय प्राणधृगसि प्राणं मे दृंह व्यानधृगसि व्यानं मे दृंहापानधृगस्यपानं मे दृंह चक्षुरसि चक्षुर्मयि धेहि श्रोत्रमसि श्रोत्रं मयि धेह्यायुरस्यायुर्मयि धेहि ।

என்பது

உரை

வேகமுடைய இக்குதிரை, இப்பூமியை ஆக்கிரமித்துக் கொண்டது. செயலை நடாத்துவதாக அக்கினியைச் செய்தது. அங்ஙனமே, இக்குதிரை அந்தரிக்ஷத்தை ஆக்கிரமித்துக்கொண்டது. செயலை நடாத்துவாதாக வாயுவைச் செய்தது. இக்குதிரை, விண்ணை ஆக்கிரமித்துக் கொண்டது. தொழிலை நடாத்துவதாக சூரியனைச் செய்தது குதிரையே! உனக்கு, அக்கினி உதவியாம். ஆதலின் உன்னைத் தொடங்குகின்றேன். நீ கெடாததாயிருந்து எனது வேள்விக் கருமத்தை முடித்துவைப்பாயாக. ஆதித்தன் உனது உதவியாவன் ஆதலின் உன்னைத் தொடங்குகின்றேன். நீ கேடடையாமல் எனது வேள்விக் கருமத்தை முடித்துவைப்பாயாக. நீ பிராணனை வலுப்படுத்துவதாயிருக்கின்றாய். இத்தகைய குதிரையே! நீ எமது பிராணனை வலுப்படுத்துவாயாக. மற்றும், வியானனை வலுப்படுத்துவதாயிருக்கின்றாய். அத்தகைய நீ எமது வியானனை உறுதிப்படுத்துவாயாக. மற்றும், குதிரையே! நீ, அபானனை உறுதிப்படுத்துவதாயிருக்கின்றாய். அத்தகைய நீ எமது அபானனை வலுப்படுத்துவாயாக. குதிரையே! நீ கண்ணாக இருக்கின்றாய் ஆதலின் எமது கண்களை வலுப்படுத்துவாயாக. ஆயுளாக இருக்கின்றாய் எமக்கு நிறைந்த ஆயுளைக் கொடுப்பாயாக என்பது.

பத்தொன்பதாமநுவாகம்

முற்றிற்று

ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## இருபதாவது அநுவாகம்

முப்பத்தொரு பதங்களைக் கொண்டது.

மிச்சமுள்ள அன்னஹோம மந்திரங்கள்.

जञ्जि बीजं वर्षा पर्जन्यः पक्ता सस्यꣳ सुपिप्पला ओषधयः स्वधिचरणेयꣳ सूपसदनोऽग्निः स्वध्यक्षमन्तरिक्षꣳ सुपावः पवमानः सूपस्थाना द्यौः शिवमसौ तपन्यथापूर्वमहोरात्रे पञ्चदशिनोऽर्धमासास्त्रिꣳशिनो मासाः क्लृप्ता ऋतवः शान्तः संवत्सरः ॥ ४७ ॥

जञ्ज्येकत्रिꣳशत् ॥ २० ॥

இதில் எஞ்சிய அன்னஹோமங்கள் கூறப்படுகின்றன

जञ्जि वीजं वर्षा पर्जन्यः पक्ता सस्यꣳ सुपिप्पला ओषधयः स्वधिचरणेयꣳ सूपसदनोऽग्निः स्वध्यक्षमन्तरिक्षꣳ सुपावः पवमानः सूपस्थाना द्यौः शिवमसौ तपन्यथापूर्वमहोरात्रे पञ्चदशिनोऽर्धमासास्त्रिꣳशिनो मासाः क्लृप्ता ऋतवः शान्तः संवत्सरः ।

என்பது

உரை

நெல் விதை முதலிய வித்துக்கள் முளைக்குந் தன்மையையுடையனவாகுக. மழை பெய்வதாகுக. பயிர்கள் விளைவனவாகுக. கொடி செடிகள் பலமுடையவைகளாகுக. இப்பூமி, அதிஷ்டானமாயிருந்து ஆசரிக்கத்தக்கதாகுக. அக்கினி, புகைச்சின்ன முதலியவைகளின்றியதாகுக. வான், தெய்வீகமாகிய பீடைகளின்றியதாகுக. சூரியன் மங்களமாய் வெயிலெறித்துக் கொண்டிருக்குக. பகல் இரவுகள் கற்பமுதலில் எப்படியிருந்தனவோ, அப்படியே இப்போதும் செல்வனவாகுக. பதினைந்து நாட்கள் கொண்ட பாதி மாதமு(பட்சமு)ம், முப்பது நாட்கள்கொண்ட முழு மாதமும் இயற்கையில் மாறுதலைகளாகுக. வருடம், பிரசைகளின் பீடைகளின்றியதாகுக என்பது.

இருபதாமநுவாகம்

முற்றிற்று.

ஏழாங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## இருபத்தோராவது அநுவாகம்

இருபத்துநான்கு பதங்களைக் கொண்டது.

பிராயச்சித்த இஷ்டியை விதிக்கும் பிராமணங்கள்.

आग्नेयोऽष्टाकपालः सौम्यश्चरुः सावित्रोऽष्टाकपालः पौष्णश्चरू-
रौद्रश्चरुरग्नये वैश्वानराय द्वादशकपालो मृगाखरे यदि नाऽऽगच्छे-
दग्नयेऽꣳहोमुचेऽष्टाकपालः सौर्यं पयो वायव्य आज्यभागः ॥४८॥
आग्नेयश्चतुर्विꣳशतिः ॥ २१ ॥

இதில் பிராயச்சித்த இஷ்டிகள் கூறப்படுகின்றன

आग्नेयोऽष्टाकपालः सौम्यश्चरुः सावित्रोऽष्टाकपालः पौष्णश्चरू रौद्रश्चरुर-
ग्नये वैश्वानराय द्वादशकपालो मृगाखरे यदि नाऽऽगच्छेदग्नयेऽꣳहो-
मुचेऽष्टाकपालः सौर्यं पयो वायव्य आज्यभागः ।

என்பது

உரை

குதிரை நோய் முதலியவைகளால் வாட்டமடைந்திருக்கில், அக்கினிக்கு எட்டுக் கபால புரோடாசமும், சோமனுக்குப் பொங்கலும், சவிதாவுக்கு எட்டுக் கபாலப் புரோடாசமும், பூஷாவிற்குப் பொங்கலும், உருத்திரனுக்குப் பொங்கலும், வைசுவானராக்கினிக்கு, பன்னிரண்டு கபாலப் புரோடாசமுஞ் செய்தல் வேண்டும். கட்டியிருந்த இடத்திற்கு வராவிடில், அம் ஹோமுக் என்னும் அக்கினிக்கு எட்டுக்கபாலப் புரோடாசமும், சூரியனுக்குப் பாலும், வாயுவிற்கு ஆச்சரிப யாகமுஞ் செய்தல் வேண்டும் என்பது.

ஈண்டு இவ்வொன்பது அவிகளும் பிராயச்சித்த அவிகள். ஏனையவைகளைப் பிராமணத்திற் கண்டுகொள்க.

இருபத்தோராமநுவாகம்

முற்றிற்று

ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## இருபத்திரண்டாவது அநுவாகம்

முப்பது பதங்களைக் கொண்டது.

பத்து அவிகளைக் கொண்ட மிருகார இஷ்டியை விதிக்கும் பிராமணங்கள்

अग्नये॑ऽꣳहोमुचे॒ऽष्टाक॑पाल॒ इन्द्रा॑याꣳहोमुच॒ एका॑दशकपालो मित्रा-
वरु॑णाभ्यामागो॒मुग्भ्यां॑ पय॒स्या॑ वायोसावित्र आ॑गो॒मुग्भ्यां॑
च॒रुर॒श्विभ्या॑मागो॒मुग्भ्यां॑ धा॒ना म॒रुद्भ्य॑ एनो॒मुग्भ्य॑स्स॒प्तक॑पालो
विश्वे॑भ्यो दे॒वेभ्य॑ एनो॒मुग्भ्यो॑ द्वाद॑शकपा॒लोऽनु॑मत्यै च॒रुर॒ग्नये॑
वैश्वान॒राय॒ द्वाद॑शकपा॒लो द्यावा॑पृथि॒वीभ्या॑मꣳहो॒मुग्भ्यां॑ द्विक॑पा॒लः
॥ ४९ ॥ अ॒ग्नये॑ऽꣳहो॒मुचे॑ त्रि॒ꣳश॒त् ॥ २२ ॥

இதில் பத்து அவிகளைக்கொண்ட மிருகாரேஷ்டி கூறப்படுகின்றது.

अग्नयेऽꣳहोमुचेऽष्टाकपालं इन्द्रायाꣳहोमुच एकादशकपालो मित्रावरुणा-
भ्यामागोमुग्भ्यां पयस्या वायोसवित्र आगोमुग्भ्यां चरुरश्विभ्यामागोमु-
ग्भ्यां धाना मरुद्भ्य एनोमुग्भ्यः सप्तकपालो विश्वेभ्यो देवेभ्य एनोमु-
ग्भ्यो द्वादशकपालोऽनुमत्यै चरुरग्नये वैश्वानराय द्वादशकपालो द्या-
वापृथिवीभ्यामꣳहोमुग्भ्यां द्विकपालः ।

என்பது

உரை

பாவத்தைப் போக்கும் அக்கினிக்கு எட்டுக் கபால புரோடாசமும், பாவத்தைப் போக்கும் இந்திரன் பொருட்டு பதினொரு கபாலப் புரோடாசமும்; பாவத்தைப் போக்கும் மித்திரவருணர்களுக்கு ஆமிக்ஷையும், பாவத்தைப் போக்கும் அசுவினிகளுக்கு அரிசிப்பொரியும், பாவத்தைப் போக்கும் மருத்துக்கட்கு ஏழு கபாலப் புரோடாசமும், பாவத்தைப் போக்கும் விசுவே தேவர்கட்கு பன்னிரண்டு கபாலப் புரோடாசமும். அநுமதிதேவதைக்குப் பொங்கலும், வைசுவானராக்கினிக்கு பன்னிரண்டு கபாலப் புரோடாசமும், பாவத்தைப் போக்கும் வானுக்கும் மண்ணுக்கும் இரண்டு கபாலப் புரோடாசமும் செய்தல் வேண்டும் என்பதாம்.

ஏழாங்காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## இருபத்துமூன்றுவது அநுவாகம்

*இரண்டு பஞ்சாதிக்குமேல் நான்கு பதங்களைக் கொண்டது.*

ஸம்நதி மந்திரங்கள்

अग्नये समनमत्पृथिव्यै समनमद्यथाऽग्निः पृथिव्या समनमदेवं मह्यं भद्राः संनतयः सं नमन्तु वायवे समनमदन्तरिक्षाय समनमद्यथा वायुरन्तरिक्षेण सूर्याय समनमद्दिवे समनमद्यथा सूर्यो दिवा चन्द्रमसे समनमन्नक्षत्रेभ्यः समनमद्यथा चन्द्रमा नक्षत्रैर्वरुणाय समनमदद्भ्यः समनमद्यथा ॥ ५० ॥ वरुणोऽद्भिः साम्ने समनमदृचे समनमद्यथा सामर्चा ब्रह्मणे समनमत्क्षत्राय समनमद्यथा ब्रह्म क्षत्रेण राज्ञे समनमद्विशे समनमद्यथा राजा विशा रथाय समनमदश्वेभ्यः समनमद्यथा रथोऽश्वैः प्रजापतये समनमद्भूतेभ्यः समनमद्यथा प्रजापतिर्भूतैः समनमदेवं मह्यं भद्राः संनतयः सं नमन्तु ॥ ५१ ॥ अद्भ्यः समनमद्यथा मह्यं चत्वारि च ॥२३॥

இதில் ஸம்நதி (சேவை) ஹோமங்கள் கூறப்படுகின்றன.

பிராமணம் 4

अग्नये समनमत्पृथिव्यै समनमद्यथाऽग्निः पृथिव्या समनमदेवं मह्यं भद्राः संनतयः सं नमन्तु वायवे समनमदन्तरिक्षाय समनमद्यथा वायुरन्तरिक्षेण सूर्याय समनमद्दिवे समनमद्यथा सूर्यो दिवा चन्द्रमसे समनमन्नक्षत्रेभ्यः समनमद्यथा चन्द्रमा नक्षत्रैर्वरुणाय समनमदद्भ्यः समनमद्यथा वरुणोऽद्भिः साम्ने समनमदृचे समनमद्यथा सामर्चा ब्रह्मणे समनमत्क्षत्राय समनमद्यथा ब्रह्म क्षत्रेण राज्ञे समनमद्विशे समनमद्यथा राजा विशा रथाय समनमदश्वेभ्यः समनमद्यथा रथोऽश्वैः प्रजापतये समनमद्भूतेभ्यः समनमद्यथा प्रजापतिर्भूतैः समनमदेवं मह्यं भद्राः संनतयस्सं नमन्तु ।

என்பது

எசமான மந்திரம்)

உரை

எல்லா எசமானர்களும் அக்கினிக்கு பணி செய்வார்களாக. பிருதிவிக்குப் பணி செய்வார்களாக. பிருதிவியுடன்கூடிய அக்கினிக்குப் பணி செய்வார்களாக. எசமானனுக்கு உபகாரஞ் செய்ததுபோல் எமக்கும் தேவர்கள் செய்யும் மங்களமான உதவிகள் கிடைக்குக. வாயுவிற்கும், அந்தரிட்சத்திற்கும், வாயு அந்தரிக்ஷத்துடன் கூடிய சூரியனுக்கும், வானுக்கும், வானுடன் கூடிய சூரிய சந்திரர்களுக்கும், நக்ஷத்திரங்கட்கும், சந்திரன் நக்ஷத்திரங்களுடன் கூடிய வருணனுக்கும், நீருக்கும், நீருடன் கூடிய வருணனுக்கும், சாமத்திற்கும், இருக்கிற்கும், சாமம் இருக்குக்களுடன்கூடிய பிராமணனுக்கும், க்ஷத்திரியனுக்கும், பிராமண க்ஷத்திரியர்களுடன்கூடின அரசர்களின் சம்பந்தமுடையவர்கட்கும், வணிகருக்கும், அரசன் வணிகன் இரதத்திற்கும், குதிரைகட்கும், குதிரைகளுடன்கூடிய இரதத்திற்கும் பிரசாபதிக்கும், பூதங்கட்கும், பூதங்களுடன்கூடிய பிரசாபதிக்கும் பணி செய்வார்களாக. இவ்வாறே எமக்கும் நல்ல உதவிப்பணி செய்வார்களாக என்பது.

இப் பத்து மந்திரங்களாலும் சம்நதி என்னும் ஹோமங்களைச் செய்தல் வேண்டும்.

இருபத்துமூன்றுமநுவாகம்

முற்றிற்று

---

## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம

## இருபத்துநான்காவது அநுவாகம்

நாற்பத்து நான்கு பதங்களைக் கொண்டது.

எசமானனுக்கு ஓதிவைக்கவேண்டிய மந்திரங்கள்.

ये ते पन्थानः सवितः पूर्व्यासोऽरेणवो वितता अन्तरिक्षे। तेभिर्नो अद्य पथिभिः सुगेभीरक्षा च नो अधि च देव ब्रूहि। नमोऽग्नये पृथिविक्षिते लोकस्पृते लोकमस्मै यजमानाय देहिनमो वायवेऽन्तरिक्षक्षिते लोकस्पृते लोकमस्मै यजमानाय देहि नमस्सूर्याय दिवि-

क्षितें लोकस्पृते लोकमस्मै यजमानाय देहि ॥ ५२ ॥ ये ते चतु-
श्चत्वारिꣳशत् ॥ २४ ॥

இதில், எசமானனுக்கு ஓதுவிக்கவேண்டிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

மந்திரம் 1

ये ते पन्थानः सवितः पूर्व्यासोऽरेणवो वितता अन्तरिक्षे । तेभिर्नो अद्य
पथिभिः सुगेभी रक्षा च नो अधि च देवब्रूहि ।

என்பது

உரை

சவிதாதேவ ! பூர்வத்தில் சித்தித்தவைகளும், அந்தரிக்ஷத்தில் பரந்திருக்கின்றவைகளும், இனிது செல்லத்தக்கவைகளுமான உனது மார்க்கங்களால் வந்து இவ்வேள்விக் கருமத்தில் எம்மைப் பாதுகாப்பாயாக. மற்றும், தேவர்களிடத்தில், இவ்வெசமானன் சிறந்தவன் என்று சொல்வாயாக என்பது.

---

ஆகவனீயத்தைப் போற்றும் மந்திரங்கள்

மந்திரங்கள் 3-4

नमोऽग्नये पृथिविक्षिते लोकस्पृते लोकमस्मै यजमानाय देहि नमो वाय-
वेऽन्तरिक्षक्षिते लोकस्पृते लोकमस्मै यजमानाय देहि नमः सूर्याय दिवि-
क्षिते लोकस्पृते लोकमस्मै यजमानाय देहि ।

என்பது.

உரை

அக்கினியே ! உனக்கு வணக்கம். மண்ணுலகில் வாழ்கின்றவனும், உலகைப் பிரியப்படுத்துகின்றவனுமாகிய இவ்வெசமானனுக்கு சிறந்த இடத்தைக் கொடுத்தருள்வாயாக. வாயுவே ! உனக்கு வணக்கம், நீ, அந்தரிக்ஷத்தில் வாழ்கின்றவனும், உலகைப் பிரியப்படுத்துகின்றவனுமாகிய இவ்வெசமான

குதிரையின் துதி)

னுக்கு சிறந்த இடத்தையளித்தருள்வாயாக. சூரிய! உனக்கு வணக்கம் வானுலகில் வாழ்கின்றவனும், உலகிற்குப் பிரியத்தைச் செய்கின்றவனுமாகிய இவ்வெசமானனுக்கு சிறந்த இடத்தையளித்தருள்வாயாக என்பது. இம் மூன்று மந்திரங்களால் ஆகவனீயத்தைப் போற்றல் வேண்டும் என்க.

இருபத்துநான்காவது அநுவாகம்

முற்றிற்று.

---

## ஏழாங் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## இருபத்தைந்தாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் பன்னிரண்டு பதங்களைக் கொண்டது.

குதிரையின் துதிப் பிராமணங்கள்.

यो वा अश्वस्य मेध्यस्य शिरो वेद शीर्षण्वान्मेध्यो भवत्युषा वा अश्वस्य मेध्यस्य शिरः सूर्यश्चक्षुर्वातः प्राणश्चन्द्रमाः श्रोत्रं दिशः पादा अवान्तरदिशाः पर्शवोऽहोरात्रे निमेषोऽर्धमासाः पर्वाणि मासाः संधानान्यृतवोऽङ्गानि संवत्सर आत्मा रश्मयः केशा नक्षत्राणि रूपं तारका अस्थानि नभो माꣳसान्योषधयो लोमानि वनस्पतयो वाला अग्निर्मुखं वैश्वानरो व्यात्तम् ॥ ५३ ॥ समुद्र उदरमन्तरिक्षं पायुर्द्यावापृथिवी आण्डौ ग्रावा शेपः सोमो रेतो यज्जञ्जभ्यते तद्वि द्योतते यद्विधूनुते तत्स्तनयति यन्मेहति तद्वर्षति वागेवास्य वागहर्वा अश्वस्य जायमानस्य महिमा पुरस्ताज्जायते रात्रिरेनं महिमा पश्चादनु जायत एतौ वै महिमानावश्वमभितः सं बभूवतुर्हयो देवानवहदर्वाऽसुरान्वाजी गन्धर्वानश्वो मनुष्यान्त्समुद्रो वा अश्वस्य योनिः समुद्रो बन्धुः ॥ ५४ ॥ व्यात्तमवहद्द्वादश च ॥ २५ ॥

இப்பிரபாடகத்தின் அநுவாக எண்களைக் காட்டுந் தலைப்புச் சொற்கள்:—

गावो गावः सिषासन्तीः प्रथममासि समान्यो यदि सोमौषडहैरु-त्सृज्यां३देवानामर्क्येणचर्मावै पृथिव्यै दत्वते कस्त्वाऽग्नये योवै यः प्राणतो य आत्मदा आव्रह्मन्नाऽक्रान्वाजी जज्ञिबीजमाग्नेयोऽष्टा कपालोऽग्नेयऽ१ंहोमुचेऽष्टाकपालोऽग्नये समनमद्ये तेपन्थानोयो वा अश्वस्य मेध्यस्य शिरः पञ्चविंशतिः ॥ २५ ॥

பஞ்சாதிகளின் எண்களைக் காட்டுந் தலைப்புச் சொற்கள்:—

गावः समान्यः सवनमष्टाभिर्वा एते देवकृतं चाभिजित्या इत्याहु-र्वरुणोऽद्भिः साम्ने चतुः पञ्चाशत् ॥ ५ ॥

இதில், குதிரை எல்லா உலகவடிவமாகத் துதிக்கப்படுகின்றது. அல்லது, விராட் வடிவாக குதிரையுபாசனை கூறப்படுகின்றது. இது சிறந்த அநுவாகம் என்பதை உபநிடத முதலியவைகளிற் காண்க. இதுபற்றியே இவ்வநுவாகத்திற்கூறிய பொருளை எடுத்துரைக்கும் பிராமணத்தை வாசசனேய சாகைக்காரர்கள் உபநிடதமுதலியவைகளிற் படிக்கின்றனர்.

பிராமணம் 1

यो वा अश्वस्य मेध्यस्य शिरो वेद शीर्षण्वान्मेध्यो भवत्युषा वा अश्वस्य मेध्यस्य शिरः सूर्यश्चक्षुर्वातः प्राणश्चन्द्रमाः श्रोत्रं दिशः पादा अवान्तरदिशाः पर्शवोऽहोरात्रे निमेषोऽर्धमासाः पर्वाणि मासाः संधानान्यृतवोऽङ्गानि संवत्सर आत्मा रश्मयः केशा नक्षत्राणि रूपं तारका अस्थानि नभो माꣳसान्योषधयो लोमानि वनस्पतयो वाला अग्निर्मुखं वैश्वानरो व्यात्तꣳ समुद्र उदरमन्तरिक्षं पायुर्द्यावापृथिवी आण्डौ ग्रावा शेपः सोमो रेतो यज्जंजभ्यते तद्वि द्योतते यद्विधूनुते तत्स्तनयति यन्मेहति

तद्वर्षति वागेवास्य वागहर्वा अश्वस्य जायमानस्य महिमा पुरस्ताज्जायते रात्रिरेनं महिमा पश्चादनु जायत एतौ वै महिमानावश्वमभितः सं बभूवतुर्हयो देवानवहदर्वाऽसुरान्वाजी गन्धर्वानश्वो मनुष्यान्त्समुद्रो वा अश्वस्य योनिः समुद्रो बन्धुः ।

என்பது

உரை

யாகத்திற்குரிய குதிரையின் தலைமுதலிய அவயவங்களை விராட்டின் அவயவமாகிய உஷாக்கால முதலானவைகளாக உணர்ந்து உபாசிக்கின்றவன் அசுவமேத யாகபயனை அநுபவித்தற்குரியவனாகின்றான். யாகத்திற்கும், உபாசனைக்கும் பயன் ஒன்றேயாம். அது வருமாறு :- குதிரையின் தலை உஷாக்காலமாம். கண்கள் சூரியனும், பிராணன் வாயுவாம், செவிகள் சந்திரனும், கால்கள் திசைகளாம், பக்கத்திலுள்ள எலும்புகள், ஆக்னேய முதலிய இடையிலுள்ள திசைகளாம். கண்களை மூடுதல் விழித்தல் இரவுபகல்களாம், கால்களின் கணுக்கள் பட்சங்களாம்.(பாதிமாதங்கள்) கணுக்களின் சந்திகள் சித்திரைமுதலான மாதங்களாம். குளம்புமுதலியவைகள் வசந்தமுதலிய இருதுக்களாம். உள்ளிருக்கும் ஆன்மா வருடமாம். மயிர்கள் உரிய கிரணங்களாம். வெண்மை நிறம் நட்சத்திரங்களாம். மற்றுமுள்ள எலும்புகள் பிருகற்பதி சுக்கிரன் முதலான பெரிய நட்சத்திரங்களாம். அங்கங்குள்ள மாமிசங்கள் ஆகாயமாம். சிறிய மயிர்கள் கொடிசெடிகளாம், வாலிலுள்ள நீளமயிர்கள் வனஸ்பதிகளாம், முகம் அக்கினியாம், வாயைத்திறத்தல் வைசுவாநரன் என்னுந் தேவதையாம், வயிறு கடலாம், பாயு அந்தரிட்சமாம், அண்டம் வானும் கண்கள் ஆண்குறி சோமரசமிடிக்குங் கற்களாம், சுக்கிலம் சோமரசமாம், உடம்பைக் குலுக்கல் மின்னலாம், அதனாலெழுஞ் சத்தம் கர்ச்சித்தலாம், மூத்திரம் பெய்தல் மழையாம், கனைத்தல் வேதவாக்காம். இதைக்கொல்லுமுன் சோமரசம் பிடித்த வெள்ளிக் கிண்ணம் பகலாம், கொன்றபின் சோமரசம் பிடித்த பொற்கிண்ணம் இரவாம். இவ்விரண்டும் குதிரையின் மகிமைகள் குதிரையின் சந்திபேதமான 'ஹரீ, என்பது, தேவர்களையும், 'அர்வா, என்பது அசுரர்களையும், 'வாஜி, என்பது கந்தருவர்களையும் அசுவம் என்பது மனிதர்களையுந் தாங்கிக்கொண்டு செல்வனவாம். இதற்குக் காரணம் பரமான்மாவாம் இதுவே இதனுடைய நிலைமையாம். இவ்வாறு உபாசிக்கின்றவன் பாவம் நீங்கும் வாயிலாக விராட் வடிவை அடைகின்றான். விராட் வடிவை அடைதலும் கிரமமாய் அடையு முத்திக்குக் காரணமாம். என்னை ? அங்கு ஞானமுதித்தவுடன் விராட் புருடனுடன் உண்மை முத்தியையடைதலின் என்க என்பது.

மூல முறைப்படி முதலிலிருந்து காண்டம் ஏழு, பிரபாடகம் நாற்பத்து நான்கு, அநுவாகம் அறுநூற்றைம்பத்தொன்றும். பாடியப்படியோ, காண்டம் ஏழும் பிரபாடகம் நாற்பத்துநான்கும் அநுவாகம் அறுநூற்று நாற்பத்தைந்துமாம் என்பதையுணர்க.

இருபத்தைந்தாம் அநுவாகம்

முற்றிற்று

---

ஏழாங் காண்டம் முடிந்தது.

---

கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதையும்

முடிந்தது.

---

சாயணபாடியத்தைத் தழுவிய தமிழுரையும் முற்றுப்பெற்றது.

சுப்ரமண்யோம் ! சுப்ரமண்யோம் !! சுப்ரமண்யோம் !!!